‘கண்ணனை நினைக்காத நாளில்லையே...’ என்ற பாடல் வரிகளுக்கேற்ப, கண்ணனைப் போற்றும் கதைகளை கண்ணனின் குணாதிசயமான சுறுசுறுப்போடும் துறுதுறுப்போடும் குதூகலத்தோடும் விளையாட்டு போல் எளியவரின் பக்தியாக உருக வைக்கும்படி அழகாகச் சொல்கிறது இந்த நூல். படிக்கப் படிக்க விறுவிறுப்பும் பக்திப் பரவசமும் நம்மை மெய்மறக்கச் செய்துவிடுகின்றன. சகல புண்ணியங்களும் பெற வேண்டுமென்றால் பகவானின் திவ்விய நாமங்களைச் சொன்னாலே போதும் என்கின்றன புராணங்கள். கண்ணனின் திருநாமங்களுக்கு அத்தனை வலிமை உண்டு. அம்புப் படுக்கையில் பீஷ்மர் இருந்தபோது, ‘பீஷ்மர் ஒரு ஞானசக்தி. அவர் இறந்துவிட்டால், பின்பு இந்த உலகில் ஞானம் என்பதே ஒருவருக்கும் வாய்க்காது போய்விடும்’ என்று சொல்லும் கண்ணன், அடியவர்களைக் கௌரவப்படுத்தி, அன்பும் அரவணைப்பும் கொண்டு அவர்களுக்கு மரியாதை செய்கிற அவதார புருஷன். பெருங்கருணை, ஜோதி வடிவமே பகவான், எமதருமனின் கனிவு, ஹரி... ஹரி.., திருமாலின் திருமேனி, வரம் தருவாய் வாசுதேவா.., கண்ணனின் விளையாட்டு, கட்டுண்டு கிடந்த கண்ணன், யமுனை ஆற்றிலே..! கண்ணன் இருக்க கவலை எதற்கு? மானம் காப்பான் தோழன்... என்று அவனுடைய ஒவ்வொரு திருநாமமும் கடலளவு தண்ணீரை அப்படியே உள்ளங்கைக்குள் அடக்கிவிடுகிற சாதுர்யத்துடன், வாழ்வின் உயரிய கருத்துகளை, மிகப் பெரிய குணத்தை நமக்கு உணர்த்துகிறது. அத்தகைய பரவசத்தோடு சக்தி விகடனில் வேளுக்குடி கிருஷ்ணன் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பே இந்த நூல். ஓவியர் மாருதியின் வண்ண ஓவியங்கள் உயிரோட்டமாக நடமாடுகின்றன. கண்ணனின் நாமங்களைச் சொல்லும் இந்த நூல், வாசிப்போரின் மனசை தாமரையாகப் பூரிக்க வைக்கும்.



# கண்ணன் நாமம் சொல்லும் கதைகள்!






இந்த உலகில் உள்ள அனைத்து மனிதர்களுக்கும் அனைத்து க்ஷேமங்களும் கிடைப்பதற்கு, பகவான் நாராயணனை மனதாரப் பிரார்த்திக்கிறேன். சகல புண்ணியங்களையும் பெறுவதற்கு என்ன செய்ய வேண்டும்?

மிகப் பெரிய வேள்வி நடத்த வேண்டுமா? கங்கை, காவிரி முதலான புனித நதிகளில் நீராடவேண்டுமா? நித்யானுஷ்டானங்களைச் சரிவரச் செய்து, எங்கேனும் மலையுச்சியிலோ அடர்ந்த வனத்திலோ கடும் தவம் இருக்கவேண்டுமா? தினமும் ஒரு மணி நேரம் அல்லது வாரத்தில் ஒருநாள் மௌன விரதம் அனுஷ்டித்தால் சகல புண்ணியங்களும் கிடைத்துவிடுமா? வேறு என்னதான் செய்யவேண்டும்?

மிகவும் எளிதான காரியம்தான்.

சகல புண்ணியங்களும் பெறவேண்டும் என்றால், பகவானின் திவ்விய நாமங்களைச் சொன்னாலே போதும் என்கின்றன புராணங்கள்!

மகாபாரதம், மிகப் பிரமாண்டமானது. அதில் உள்ள எண்ணற்ற அத்தியாயங்களில், சகஸ்ரநாம அத்தியாயம் என்பதும் ஒன்று. பகவானின் நாமங்களைச் சொல்வதால் விளையும் நன்மைகளைச் சொல்கிற அத்தியாயம். அத்தனைப் பிரம்மாண்ட மகாபாரதத்தில், அத்தியாயம் என்பது ரொம்ப ரொம்பச் சின்னதுதான்!

ஆனால் என்ன… ஒரு சின்ன விதையில் இருந்துதானே மிகப் பெரிய ஆலமரம் உருவாகிறது?! ஒரு சின்ன கருத்தில் இருந்துதானே, பலப்பல அர்த்தங்கள் உண்டாகின்றன. இறைவனின் திருநாமங் களுக்கு, அதுவும் ஸ்ரீகண்ணனின் திருநாமங் களுக்கு அத்தனை வலிமை உண்டு!

ஒரு குழந்தைக்கு என்ன தரவேண்டும் என இன்றைக்கு கிட்டத்தட்ட எல்லாருக்குமே தெரிந்திருக்கிறது. அந்தக் குழந்தைக்கு நல்ல, சத்தான உணவில் இருந்துதான் நாம் கொடுக்கத் துவங்குகிறோம். 'சுவர் இருந்தால் தான் சித்திரம்' என்பது போல், உடம்பு தெம்பாக இருந்தால்தானே ஓடியாடி விளையாட முடியும்!



அடுத்து, அந்தக் குழந்தைக்கு கல்வியைத் தருகிறோம்; இந்தப் பள்ளியில் சேர்க்க

வேண்டும்; இன்ன படிப்பைப் படிக்க வேண்டும்; பெரியவனானதும் இப்படிப் பட்ட பதவியில் அந்தக் குழந்தை அமர வேண்டும் என யோசித்து யோசித்து, அனைத்தையும் செய்கிறோம்.

ஆக, உடம்பைக் கவனித்துக் காப்பாற்

றுகிறோம்; கல்வியை வழங்குகிறோம்; குறிப்பாக, கை நிறைய சம்பளம் வாங்குவதற்கு உண்டான கல்வியை அளிக்கத் தயாராக இருக்கிறோம். இந்த இரண்டு விஷயங்களை மட்டும் செய்தால் போதுமா? மூன்றாவதாக ஒன்று இருப்பதையே நம்மில் பலர் கவனிக்கத் தவறுகிறோம்.

என்ன அது? ஆத்மா! அந்தக் குழந்தையின் ஆத்மா நல்லவிதமாக வளர்வதற்கு, நல்ல விஷயங் களைச் சிந்திப்பதற்கு, நல்ல காரியங்களில் ஈடுபடு வதற்கு நாம் ஏதாவது செய்கிறோமா? எதுவுமே செய்வதில்லையே?!

உடல் நன்றாக இருந்தால்தான் ஆத்மா ஒழுங்காக வேலை செய்யமுடியும் என்பது சரிதான். ஆனால், உடல் நன்றாக இருக்கிற அதேநேரத்தில் ஆத்மாவும் நன்றாக இருக்கவேண்டுமே! இரண்டு கைகளும் சேர்ந்து தட்டினால்தானே ஓசை! ஆகவே, ஆத்மா வைக் கவனிப்பது மிகவும் அவசியம்.

சரி... கர்மயோகமும் ஞானயோகமும் கைகூட வேண்டும் என்றால், இன்றைக்கு விதையாக இருக்கிற குழந்தை, நாளைக்கு நிழல் தரும் விருட்சமாக வளர்ந்தோங்கி நிற்க வேண்டுமெனில், வேதங்களையும் சாஸ்திரங்களையும், புராணங்களையும் இதிகாசங் களையும் சிறுவயதிலேயே சொல்லித் தரவேண்டும்; முக்கியமாக பகவத் விஷய ஞானம் என்பது சிறுவயதிலேயே ஏற்பட்டால்தான், பின்னாளில் அவர்களால் அவர்களுக்கும் இந்தச் சமூகத்துக்கும் நன்மைகள் விளையும்!

வேதங்கள் சகல உயிர்கள் மீதும் பிரியம் கொண் டவை. தராசின் தட்டுகளில், தாய்-தந்தையரையும் வேதங்களையும் வைத்தால், குழந்தைகள் மீது பெற்றோர் செலுத்துகிற அன்பைவிட ஒருசதவிகித மேனும் கூடுதலான அன்பையும் அக்கறையையும், வேதங்கள் காட்டுகின்றன என்பது சத்தியம்! அதாவது, வேதங்களைப் பயில்வது ஆத்மாவுக்கு நல்லது!

ஆனால், வேதங்களைக் கற்றுக் கொள்வது அவ்வளவு எளிதல்ல. சம்ஸ்கிருதத்தை சரிவர உச்சரிக்கவேண்டும். அதன் அர்த்தங்களை ஆழப் புரிந்து கொள்ளவேண்டும். உச்சரிப்பில் கொஞ்சம் பிழை ஏற்பட்டாலும், அர்த்தங்களைப் புரிந்து கொள்ளமுடியாத நிலை வந்தாலும் குழந்தைகள் ஆடிப்போவார்கள்; அயர்ந்துவிடுவார்கள்!

அப்படியெனில் குழந்தைகளுக்கு, அவர்களின் ஆத்மாக்களின் நலனுக்கு, எதைப் பயிற்றுவிக்க வேண்டும்?! அப்படிப் பயிற்றுவிப்பது எளிமையான தாக இருக்க வேண்டுமே?!



ஆமாம். எளிமையானதும் இனிமையானதுமான ஒன்று இருக்கிறது; சக்தி வாய்ந்ததும் சத்து மிகுந்ததுமான அதை எவரும் புரிந்துகொள்ளலாம். அது, ஸ்ரீவிஷ்ணு சகஸ்ர நாமம். அதாவது, பகவானின் திருநாமங்கள்!

உச்சரிக்க உச்சரிக்க, உள்ளம் பூரிக்கும்; அந்தப் பூரிப்பு, அகத்திலும் முகத்திலுமாக சந்தோஷத்தையும் தெளிவையும் கொடுக்கும்; இத்தனை சத்காரியங்களும் நிகழும்போது, ஆத்மாவானது எத்தனை குதூகலத்துடன் இருக்கும் என சற்றே நினைத்துப் பாருங்கள்!

'பிரம்ம சூத்திரம்' படைத்தார் வேதவியாசர். வித்வான் களுக்கும் பண்டிதர்களுக்குமான விஷயமாக இதைப் படைத்திருக்கிறோமே, கொஞ்சம் எளிமையாக இருந்தால், சகல மனிதர்களும் புரிந்து, அறிந்து, உணர்ந்து, பலன் பெறுவார்களே... என வருந்தினாராம்! இந்த வருத்தத்திலும் ஏக்கத்திலும் பிறந்ததுதான், சகஸ்ரநாம அத்தியாயம்!

வாழ்க்கையில் சங்கடமும் சந்தோஷமும் மாறி மாறித்தான் வரும்! சங்கடத்தில் மட்டுமே சிக்கித் தவிப்பவர்களும் இல்லை; சந்தோஷத்தை மட்டுமே அனுபவிப்பவர்களும் கிடையாது! ஆனால் ஒன்று... சங்கடம் - சந்தோஷம் என எந்தச் சூழ்நிலையிலும், நம்மில் பலரும் இறைவனின் திவ்விய நாமங்களைச் சொல்லி வருகிறோம். 'கிருஷ்ணா... தலைக்கு வந்தது தலைப்பாகையோட போச்சுடாப்பா' என்றோ, 'ராமா... நீதான்டாப்பா பாத்துக்கணும்' என்றோ பலரும் சொல்கிறோம், அல்லவா?! அதுதான் திவ்விய நாமத்தின் மகிமை!

மகாபாரதத்தில்... யுதிஷ்டிரருக்கு ஒரு சந்தேகம். அந்தச் சந்தேகத்தை யாரால் தீர்த்து வைக்க முடியும்? நல்ல ஆச்சார்யர் ஒருவரால்தான் சந்தேகத்தைத் தீர்க்கமுடியும்.

ஒவ்வொருவருக்கும் ஆச்சார்யர் எனப்படும் குரு மிகவும் அவசியம்! அதேபோல், ஆச்சார்யர்களுக்கு சிஷ்யர்கள் தேவை. ஒரு ஆச்சார்யர் என்பவர், மடி கனத்துக் கிடக்கிற பசுவுக்குச் சமமானவராம்! அதாவது, மடி கனத்த நிலையில், பசுவானது, கன்று பால் குடித்ததா இல்லையா என்று பார்க்காமல், கனத்த மடியிலிருந்து பாலைப் பீய்ச்சி விடும்.

அதேபோல், ஆச்சார்யர் எந்த எதிர்பார்ப்புமின்றி, தனக்குத் தெரிந்தவை அனைத்தையும் தனது சிஷ்யர்களுக்கு போதித்து விடுவார்!

பீஷ்மர், அப்படிப்பட்ட ஆச்சார் யர்தான்! அவரிடம் யுதிஷ்டிரர் சென்று, 'என்னுடைய சந்தேகத்தை தாங்கள்தான் தீர்த்துவைக்க வேண்டும் குரு!' என்றார். பீஷ்மரும் சந்தோஷத்துடன் பதில் சொல்லத் தயாரானார்.

"குருவே! பிறவியின் நோக்கம் நிறைவேற, அதாவது மோட்ச லாபம் கிடைப்பதற்கு ஏதேனும் வழி உண்டா?'' என்று கேட்டார் யுதிஷ்டிரர்.

மெள்ளப் புன்னகைத்த பீஷ்மர் சொன்னார்... "நாம சங்கீர்த்தனத்தில் ஈடுபடு; மோட்ச லாபம் நிச்சயம்!" என்றார்.

இறைவனது திருநாமங் களுக்குத்தான் எத்தனை வலிமை, பாருங்கள்!

**கண்ணன் நாமம் சொல்லும் கதைகள்!**

## பெருங்கருணை!

**வேளுக்குடி கிருஷ்ணன்**







**உ**லகத்து மனிதர்கள் அனைவருக்கும் ஒரு முக்கியமான கடமை இருக் கிறது. அந்தக் கடமையை அவர்கள் செய்தே ஆக வேண்டும்.

அது என்ன என்கிறீர்களா?

நம் சந்ததிகளுக்கு, அதாவது அடுத்த தலைமுறையினருக்குச் சொத்துக்களைச் சேர்த்துத் தருவது! அந்தச் சொத்துக்களைக் கொண்டு, நம் குழந்தைகள் சந்தோஷ மாகவும் நிம்மதியாகவும், குதூகலத்துடனும் கொண்டாட்டத்துடனும் வாழ்வார்கள் என்பது உறுதி!

ஒரு நிமிஷம்... இங்கே சொத்து என்று நான் காசு- பணத்தையோ, வீடு- வாசலையோ சொல்லவில்லை; நிலங்களையும் தோப்புகளையும் சொத்து என்று நினைத்துவிடாதீர்கள். வாகனங்களையும் நகைகளையும் சேர்த்து வைத்தால், அவர்கள் நிம்மதியாக வாழ்வார்கள் என்று தப்புக் கணக்குப் போடாதீர்கள்.

நான் சொல்கிற சொத்து இவையல்ல! அந்தச் சொத்து அளவிடற்கரியது; நாம் நன்றாக இருக்கவேண்டும், அடுத்தடுத்த சந்ததிகளும் குறைவின்றி நிறைவுடன் வாழவேண்டும் என்று நம் முன்னோர்கள் ஆசை ஆசையாக வைத்துவிட்டுப்போன அற்புதமான சொத்து. நமது பூர்வீகச் சொத்து!

அந்தச் சொத்து... மகாபாரதம்! வேதவியாசர், பீஷ்மர் போன்றோர் நமக்கு அருளிய மிக உயர்ந்த சொத்து இது.

இதில் நம் கடமை என்ன என்கிறீர்களா?

முதலில், வேதவியாசருக்கும் பீஷ்மருக்கும் நாம் என்ன கைம்மாறு செய்யப் போகிறோம்? அவர்களுக்கு நன்றியை எவ்விதம் தெரிவிக்கப் போகிறோம்? ஆளுயரத்துக்கு மாலை சார்த்தி வணங்கலாமா? சர்க்கரைப் பொங்கல் நைவேத்தியம் செய்து பூஜிக்கலாமா? ஏதேனும் ஒருநாளில் விரதமிருந்தால், இவர்கள் மனம் குளிர்வார்களா? இப்படியெல்லாம் செய்தால், அவர்களுக்கு நன்றி செலுத்தியதாக ஆகிவிடுமா, என்ன?

இவை எதையுமே அவர்கள் எதிர்பார்க்கவில்லை. நாமும் நமது அடுத்தடுத்த சந்ததியினரும் மகாபாரதத்தைப் படித்து, அதன் கருத்துக்களை உள்வாங்கி, உய்யவேண்டும்; இறைவனது அருளைப் பெறவேண்டும் என்பதுதான் அவர்களின் நோக்கம்! அவர்கள் கொடுத்திருக்கிற அளப்பரிய சொத்தான மகாபாரதத்தை, பகவத்கீதையை, இறைவனின் சகஸ்ர நாமங்களைச் சந்ததியினருக்கு எடுத்துச் செல்வதுதான் நமது முக்கியமான கடமை! இதுதான் வேதவியாசர், பீஷ்மர் போன்ற ஆச்சார்யர்களுக்கு நாம் செய்கிற பிரதியுபகாரம்.

அதேநேரத்தில், வாழையடி வாழையாக வளரக்கூடிய நம் சந்ததிக்கு இதனைச் சரியாகவும் முறையாகவும் எடுத்துச் சென்றோம் என்றால், அவர்கள் இறைவனின் பேரருளைப் பெற்று வாழ்வாங்கு வாழ்வார்கள்!

'என்னதான் சொன்னாலும், மகாபாரதம் படிக்கிறது ரொம்பக் கஷ்டமாச்சே..! அவ்வளவு சுலபத்துல புரியாதே!' என்று மலைக்கத் தேவையே இல்லை.



இன்றைய காலகட்டத்தில், வேதங்கள் தெரிந்த நல்ல அறிஞர்கள் பலர், மகாபாரதத்தைச் சுவையாகவும் எளிமையாகவும் அழகுறத் தந்துள்ளனர். அவை அனைத்துமே புத்தகங்களாக வெளிவந்திருக்கின்றன. சொல்லப்போனால், நம் தாத்தாக்களும் அப்பாக்களும் அந்தப் புத்தகங்களை வாங்கிப் படித்து, கீதையின் சாரத்தையும் ஸ்ரீகிருஷ்ண நாமங்களையும் தெளிவுறத் தெரிந்து வைத்துள்ளனர். கொஞ்சம் நம் வீட்டு அலமாரிகளிலும் பரணிலும் தேடினாலே, அந்தப் புத்தகங்கள் நமக்குக் கிடைக்கலாம். அல்லது, கடைகளில் இருந்து அந்தப் புத்தகங்களை வாங்கி, நம் குழந்தைகளுக்குப் பொறுமையாக எடுத்துரைக்கலாம்.

இன்னொரு விஷயம்... ஒண்ணேகால் லட்சம் கொண்ட கிரந்தத்தில், நமக்காகவே வடிகட்டி, சலித்து, பிரித்து, ஸ்ரீபகவத் கீதையையும், ஸ்ரீவிஷ்ணு சகஸ்ர நாமத்தையும் படித்தாலே போதுமானது எனத் தந்திருக்கிறார் ஸ்ரீவேதவியாசர்.

இந்த இரண்டிலும் எது முக்கியம் என்று கேட்பவர்கள் இருக்கிற உலகம் அல்லவா இது!

பெட்டிக்கடை வைத்திருந்த ஒருவர் மிகமிகச் சோம்பேறி. அந்தக் கடைக்கு வந்த ஒரு ஆசாமியும் சோம்பேறிதான். கடைக்காரரிடம் 'ஒரு வாழைப்பழம் வேண்டும்' என்று கேட்க, உடனே கடைக்காரர், 'கல்லாவுல காசைப் போட்டுட்டு, பழத்தைப் பிய்ச்சு எடுத்துக்குங்க' என்றார். உடனே பழம் வாங்க வந்தவர், 'அப்படின்னா, பழத்தை யார் எனக்கு உரிச்சுத் தருவாங்க?' என்று சோகத்துடன் கேட்டாராம்! அதேபோல், அத்தனைப் பிரமாண்ட மகாபாரதத்தில், ஸ்ரீபகவத் கீதையையும் பகவானின் சகஸ்ர நாமங்களையும் படித்தாலே போதும் என்றால், அந்த இரண்டில் எது ரொம்ப ரொம்ப முக்கியம் என்று கேட்பது மனித இயல்புதானே?!

*சகஸ்ரநாம அத்தியாயங்களைப் படிப்பதே சாலச் சிறந்தது. அதாவது, ஸ்ரீகண்ணனின் திருநாமங்களைத் தெரிந்துகொள்வதே போதுமானது!*

*'என்னடா இது, பகவான் ஸ்ரீகிருஷ்ணர் அர்ஜுனனுக்கு உபதேசித்ததுதான் கீதை. அந்தக் கீதையும், அவனது திருநாமங்களும் உசத்தி என்று சொல்லிவிட்டு, பிறகு... கீதையைவிட, அதாவது பகவான் அருளியதை விட, அவனது திருநாமங்களைப் படிப்பதே விசேஷம் என்கிறானே?!' என்று குழப்பமாக இருக்கிறதா?*

*கீதை பகவான் சொன்னது; அவனது திருநாமங்களைச் சொன்னவர்கள் வேதவியாசரும் பீஷ்மரும்! அப்படி யிருக்க, பகவான் சொன்ன கீதையை விட, ஆச்சார்யர்கள் சொன்ன விஷயங்களா உசத்தி என்கிற உங்களின் சந்தேகம் நியாயமானதுதான்!*

*ஆனால், இப்படி நான் சொல்லவில்லை.*

*பிறகு, யார் சொன்னார்கள்?*

*அந்த ஆண்டவனே சொல்லியிருக்கிறான். ஆமாம், பகவான் ஸ்ரீகிருஷ்ணரே இப்படிக் கூறியிருக்கிறார்.*

*முதலில் ஒன்றைத் தெரிந்துகொள்ளுங்கள். ஆச்சார்யர்கள், அடியவர்கள், பக்தர்கள் எல்லாரும் பகவானின் அடிமைகள். ஆக, பக்தர்கள் என்பவர்கள் ஒரு ஜாதி; இறைவன் வேறொரு ஜாதி. அதாவது பரமாத்மா! 'நான் படுகிற கஷ்டத்தைப் பார்த்தாயா?' என்று பக்தன் ஒருவன் முறையிட்டால், அதனைக் கேட்டு இறைவன் உடனே வருகிறானோ இல்லையோ... ஆச்சார்யர்கள் என்பவர்கள் ஓடிவருவார்கள். ஏனெனில், இறைவனை அடைவதற்கு அவர்கள் படாத கஷ்டமா? அடையாத அவமானமா? ஆக, நம்முடைய வேதனையை அறிந்து உணரக்கூடியவர்கள் ஆச்சார்யர்கள்!*

*அம்புப் படுக்கையில் பீஷ்மர் இருந்தபோது, பகவான் கிருஷ்ணர், "பீஷ்மர் என்பவர் ஞானசக்தி. அவர் இறந்துவிட்டால், பின்பு இந்த உலகில் ஞானம் என்பதே ஒருவருக்கும் வாய்க்காது போய்விடும்" என யுதிஷ்டிரர் முதலானவர்களிடம் சொல்லி வருந்தினாராம்.*

*இத்தனைக்கும் யுத்தத்தின் முதல்நாளே, கீதையைச் சொல்லிவிட்டார் ஸ்ரீகிருஷ்ணர். பத்தாம்நாளில், அம்புப் படுக்கையில் கிடக்கிறார் பீஷ்மர். 'நான் சொன்ன கீதையே போதும்; அது உலக மக்களை உய்விக்கும்' என்று சொல்லிக்கொள்ளவில்லை அந்தப் பரம்பொருள். மாறாக, 'ஸ்ரீகிருஷ்ணராகிய என்னுடைய வாக்கியத்தை விட, பீஷ்மரின் வாக்கியமே ஞானத்தை அளிக்கக் கூடியது' என்பதைச் சொல்லாமல் சொல்லி விளக்கியுள்ளார் பகவான். அதுதான், ஸ்ரீகிருஷ்ணரின் பெருங்கருணை!*

*இப்போது புரிகிறதா, இறைவனின் திருநாமங்கள் உசத்திதான் என்று!*

*அடியவர்களைக் கௌரவப்படுத்தி, அன்பும் அரவணைப்பும் கொண்டு அவர்களுக்கு மரியாதை செய்கிற அவதார புருஷன் பகவான் ஸ்ரீகிருஷ்ணன்.*

*அவனது திருநாமங்களைச் சொல்லச் சொல்ல... மனசு, தாமரையாய் பூரிக்கும்; பூரித்து நிறைவுற்றிருக்கிற இதயத்தில், ஸ்ரீகண்ணனின் ராஜ்ஜியம் ஆரம்பமாகி விடும்!*

# கண்ணன் நாமம் சொல்லும் கதைகள்!

ஜோதி வடிவமே பகவான்!

வேளுக்குடி கிருஷ்ணன்







**ப**த்து அவதாரங்களைக் கடந்தும் பலப்பல அவதாரங்களை எடுத்துள்ளான் பரந்தாமன். இருப்பினும், பத்துக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுத்துப் போற்றி வருகிறோம். அதிலும் குறிப்பாக, இரண்டு அவதாரங்களை மட்டுமே பூர்ணாவதாரம் எனக் கொண்டாடுகிறோம். ஒன்று... ராமாவதாரம்; மற்றொன்று, கிருஷ்ணாவதாரம்.

இந்த இரண்டு அவதாரங்களும் மண்ணுலகில் இருந்த காலங்கள், அப்போது சேவை சாதித்தவை, அவதாரங்களின் அருளைப் பெற்ற கூட்டம், தரிசித்துச் சிலிர்த்த மக்கள் எனப் பல காரணங்களால், இவை பூரணத்துவம் பெற்றிருக்கின்றன.

இந்தப் பூவுலகில், ஸ்ரீராமபிரான் 11 ஆயிரம் வருடங்கள் வாழ்ந்து, ராஜபரிபாலனம் செய்து, எப்படி வாழவேண்டும் என்பதை உலகத்து மக்களுக்குக் காட்டியுள்ளார்; பகவான் ஸ்ரீகிருஷ்ணர் 125 சம்பத்சரங்கள் வாழ்ந்து, கண்ணில் பட்ட அனைவருக்கும் க்ஷேமங்களை அள்ளித் தந்தார் என விவரிக்கிறது சாஸ்திரம். ஆக, இந்த இரண்டு அவதாரங்களின் பூரணத்துவத்தை,

அவர்கள் வாழ்ந்த காலங்களையும், அவர்களால் வாழ்ந்த பெருமக்களையும் நினைத்துப் பார்த்தாலே உணரமுடிகிறது, இல்லையா?!

ஸ்ரீராமாவதாரம் என்று சொன்னாலும், அதை முழுமை யாக விவரிப்பது 'ராமாயணம்' என்றபோதிலும், அது... சீதையின் பெருமையைத்தான் அதிகம் விவரிக்கிறது; அவளை மையப்படுத்தியே கதைகள் சொல்லப்பட்டுள்ளன; கருத்துக்கள் கூறப்பட்டிருக்கின்றன. ஆனால், பகவத்கீதை யில் ஸ்ரீகிருஷ்ணரைப் பற்றித்தான் அதிகம் சொல்லப்பட் டுள்ளன. அதிலும்,

சகஸ்ரநாம அத்தியாயம் என்பது, பகவானின் லீலாவிநோதங்களையும், அவரின் அற்புதங்களையும் அழகுற விவரிக்கிறது.

அதுமட்டுமா? அதன் பாட்டுடைத் தலைவனே ஸ்ரீகிருஷ்ணன்தானே! காவிய நாயகன் ஸ்ரீகிருஷ்ணரின் திருநாமங் களையும், அந்தத் திருநாமத்துக்கான விளக்கங்களையும் அழகுறச் சொல்லும் அத்தியாயத்தைக் கேட்பதும் படிப்பதும் எத்தனை புண்ணியம் நிறைந்தவை, தெரியுமா?!

இன்னொரு விஷயம்... பேசுவதைவிடக் கேட்டலே நன்று! உபந்யாசம் செய்பவரைக் காட்டிலும், அதன் கருத்துக்களைக் கூர்ந்து, ஆழ்ந்து கேட்பவர்களுக்குத்தான் புண்ணியங்கள் சேருகின்றன; மனதுள் நல்ல எண்ணங்கள் உதிக்கின்றன. ஆக, கேட்டல் என்பது மிகமிகச் சுகமானது; சுதந்திரமானதும்கூட!



சரி... அப்படி சகஸ்ரநாம அத்தியாயத்தை முதன்முதலில் கேட்டு, உள்ளம் பூரித்தது யார் தெரியுமா?

சாட்சாத் ஸ்ரீகிருஷ்ணனைத் தவிர, வேறு யாராக இருக்க முடியும்? அதாவது, பகவான் கிருஷ்ணர் சொன்ன கீதோபதேசத்தைக்காட்டிலும், அவரின் திருநாமங்களைச் சொல்கிற அத்தியாயத்தை அவரே காது கொடுத்துக் கேட்டார்; கிறங்கினார். அதனால்தான், பாட்டுடைத் தலைவன் கேட்டதை, நாம் பாடினாலும் மனம் ஒன்றிக் கேட்டாலும் நமக்குள் சத்விஷயங்கள் அரங்கேறும் என்பதில் எள்ளளவும் மாற்றமில்லை என்றனர் ஆச்சார்யர்கள்.

சகஸ்ரநாம அத்தியாயத்தின் இன்னொரு சிறப்பு என்ன தெரியுமா?

பகவானின் ஒவ்வொரு திருநாமமும் வெறும் பெயர்கள் அல்ல; அவனுடைய கல்யாண குணங்களை மிக எளிமை யாகச் சொல்பவை; கடலளவு தண்ணீரை அப்படியே உள்ளங்கைக்குள் அடக்கிவிடுகிற சாதுர்யத்துடன், மிகப் பெரிய குணத்தை, ஒற்றைத் திருநாமத்தின் மூலமாக நமக்கு உணர்த்துபவை!

பகவானின் ரூபம் பரரூபம், வியூக மூர்த்தம், விபவாதாரம், அந்தர்யாமி, அர்ச்சாவதாரம் என ஐந்து நிலைகளாகப் பிரித்துச் சொல்லப்பட்டுள்ளது. பரரூபம் என்பது ஸ்ரீவைகுண்டத்தில் பரந்தாமன் எழுந்தருளியுள்ள நிலை; வியூக மூர்த்தம் என்பது திருப்பாற்கடலில் காரண- காரியத்துக்காக திருமால் கொண்ட திருக்கோலம்; விபவாதாரம் என்பது அவதாரக் கோலங்கள்; அந்தர்யாமி என்பது நமக்குள் இருக்கிற இறைத்தன்மையின் அரூப நிலை; அர்ச்சாவதாரம் என்பது இன்றைக்கு திருக்கோயில்களில் கருவறையில் குடிகொண்டிருக்கிற இறைத் திருமேனி! எத்தனைத் திருவுருவங்கள் இருந்தாலென்ன... பரந்தாமன் ஒருவனே! எத்தனைத் திவ்விய நாமங்கள் கொண்டால் என்ன... இறைவன் ஒருவனே!

இறைவன் போற்றுதற்கு உரியவன்; அவனை எப்படி வேண்டுமானாலும் போற்றலாம்; போற்றித் துதி பாடலாம்! அதன் முதல் கட்டமாக, அவனைப் போற்றுகிற முதல் திருநாமம்... வசுரேதாஹா!



அதாவது, இறைவன் தேஜஸ் கொண்டவன்; பளிச்சென்று காட்சி தருபவன்; கடவுள் என்பவரைத் தரிசிக்க ஆயிரம் கண்கள்கூடப் போதாது. ஏனெனில், ஒளிமயமானவன் அவன். ஜோதி வடிவமே பகவான். ஸ்ரீமந் நாராயணனிடம் இருந்து புறப்பட்ட சுடரொளியானது, தேவகியின் வயிற்றில் சென்று கர்ப்பமாகத் தரித்தது என்கின்றனர். தேவர்களையும் உலகத்தையும் கம்சனிடம் இருந்து காப்பதற்காக, கடவுள் தாமே ஜோதியாக வந்து, தேவகியின் கர்ப்பப்பைக்குள் புகுந்துகொண்டார் என்றால், இந்த உலகைக் காப்பதில் பகவானுக்கு இருக்கிற கடமையையும் கருணையையும் நாம் உணரவேண்டும்.

ஆக, பகவானின் திருநாமங்களைக் கேட்டாலோ சொன்னாலோ புண்ணியம்தான்! ஆனால்... அது ஒன்று மட்டுமே நமக்கு மோட்சத்தைக் கொடுக்கும் என நினைத்துவிடக்கூடாது.

பிற உயிர்களிடத்தில் கருணை, இறைவனிடத்தில் பக்தி இந்த இரண்டும் ஒரு மனிதனுக்கு மிகவும் அவசியம். கடவுளின் திருநாமங்களைச் சொல்லச் சொல்ல... உள்ளே நம் மனதுள் பேரமைதி மெள்ள மெள்ளப் பரவும். அமைதி இருக்கிற இடத்தில், ஆரவாரத்துக்கு வேலையில்லை; அலட்டல் அங்கே இருக்காது. அலட்டலும் கர்வமும் இல்லையெனில், அங்கே அடுத்தவர் பற்றிக் கருணையுடன் சிந்திக்கத் துவங்கிவிடுவோம்.

பிற உயிர்களிடம் காட்டுகிற கருணையும், அமைதியான உள்ளமும் கொண்டிருக்க... அங்கே கடவுள் குறித்த சிந்தனை, அவன் மீதான அளப்பரிய பக்தி நம்மையும் அறியாமல் அதிகரிக்கும். பக்தி அதிகரிக்க, அதிகரிக்க... கடவுளுக்கும் நமக்குமான தொலைவு சுருங்கிக்கொண்டே வரும். அந்த அண்மை, ஆண்டவனிடம் இன்னும் இன்னும் என்று மனம் ஒன்றச் செய்யும். 'நீயே கதி' என்று பகவானது திருவடியைப் பற்றிக் கொள்ளத் தூண்டும். ஒருகட்டத்தில், ஸ்ரீகிருஷ்ணரின் திருவடியைப் பற்றிக்கொண்டே திவ்விய நாமங்களைச் சொல்லிக்கொண்டே, வேறு எதையும் சிந்திக்காத நிலை ஏற்படும். அதன் பெயர்... சரணாகதி! இறைவனின் திருவடியில் சரணடைந்துவிட்டால், நமக்கு மோட்சம் என்பது நிச்சயம்!

இவை அத்தனைக்கும் ஆரம்பமாக இருப்பது, பகவானின் திவ்விய நாமங்கள்! அவனது நாமங்களைச் சொல்லிக் கொண்டே இருந்தால், மனதில் படர்ந்திருக்கிற இருள் மறைந்துவிடும்; மெள்ள மெள்ள ஒளி ஊடுருவி, உள்ளுக்குள் வியாபிக்கத் துவங்கிவிடும்.

ஏனெனில், ஜோதி வடிவானவர் ஸ்ரீகிருஷ்ணர்!

ஆடுவோம்... பாடுவோம்!  வேளுக்குடி கிருஷ்ணன்



4

# கண்ணன் நாமம் சொல்லும் கதைகள்!





**ப**ஞ்ச பூதங்களால் ஆனது நம் உடல். அதேபோல், பரப்பிரம்மத்துக்கு பஞ்சப் பிராகாரங்கள் உள்ளன. அவற்றை, பரரூபம், வியூக மூர்த்தம், விபவாதாரம், அந்தர்யாமி, அர்ச்சாவதாரம் என ஐந்து நிலைகளாக உள்ளன என்று பார்த்தோம், இல்லையா?!

மேலும், பரரூபம் என்பது ஸ்ரீவைகுண்டநாதனின் திருக்கோலம்; அதாவது ஸ்ரீமந் நாராயணன். வைகுண்டத்தில் பரந்தாமன் எழுந்தருளியுள்ள நிலை. வியூக மூர்த்தம் என்பது, திருப்பாற்கடலில் திருமாலின் திருக்கோலம்; அதாவது அவதாரங்களுக்கு முந்தைய திருமேனி. விபவாதாரம் என்பது, திரு அவதாரத் திருக்கோலங்கள். அந்தர்யாமி என்பது, நமக்குள் குடிகொண்டிருக்கிற இறைத் தன்மையின் அரூப நிலை. ஆலயங்களில் இன்றைக்குத் தரிசிக்கக் கிடைக்கிற திருமேனிதான், அர்ச்சாவதாரக் கோலம் என்றும் பார்த்தோம்!

கீதையில், முதலாவது திருநாமம் துவங்கி, 122-வது திருநாமம் வரை, பரரூபமாக இருக்கிற ஸ்ரீவைகுண்டநாதனைப் பற்றியும், அவனது பெருமைகளையும் விவரிக்கின்றன. அடுத்ததாக, 123-வது திருநாமத்தில் இருந்து 146-வது திருநாமங்கள் வரை, திருப்பாற்கடலில் எழுந்தருளியுள்ள பரந்தாமனின் வியூகாவதாரத்தை எடுத்துரைக்கின்றன.

இதையடுத்து, 147-வது திருநாமத்தில் இருந்து இறுதி வரைக்கும், விபவாதாரத்தைப் பற்றி மிக அருமையாக, ஆத்மார்த்தமாக விவரிக்கப்பட்டுள்ளன.

'சரி.. அப்படியெனில், அந்தர்யாமியையும் அர்ச்சாவதாரத்தையும் சொல்லவில்லையா? விவரிக்கவில்லையா?' என நீங்கள் கேட்பது புரிகிறது.

அதாவது, அந்தர்யாமி என்கிற உள்ளுக்குள் இருக்கிற அரூப நிலையை, பரரூபத்துடனும்... அர்ச்சாவதாரத்தை விபவரூபத்துடனும் சேர்த்து, திருநாமங்களாக அழகுறத் தரப்பட்டுள்ளது.

எத்தனை அவதாரங்கள்... எவ்வளவு திருநாமங்கள்! ஆனால் என்ன... 697-ல் துவங்கி 770 வரைக்கும்; அதையடுத்து 989 முதல் 992 வரைக்கும் எந்த அவதாரத்தின் மகிமையையும் மகோன்னதத்தையும் விவரித்துள்ளார்கள், தெரியுமா? கிட்டத் தட்ட 78 திருநாமங்களில், பகவான் ஸ்ரீகிருஷ்ணரையே சிலாகித்துள்ளது கீதை. பின்னே... பாட்டுடைத் தலைவன் ஸ்ரீகிருஷ்ணன்தானே?!

அதில் முக்கியமானதும் முதலாவதுமான திருநாமம், வசுரேதாஹ! வசுரேதன் என்பது ஸ்ரீகண்ணனைக் குறிக்கும் திருநாமம். வசு என்றால் ஜோதி என்று பொருள். வசுரேதன் என்றால், திவ்வியமான ஜோதி வடிவினன் என்று அர்த்தம்.

பராசர பட்டர், தன்னுடைய சீடன் மைத்ரேயரிடம் ஸ்ரீகிருஷ்ணரின் அவதாரத்தை விவரிக்கிறார். அப்போது, 'கம்சனின் தொல்லை தாங்க முடியவில்லை. அவனால் தேசத்தில் அனைவருக்கும் நிம்மதியே போய்விட்டது. நீங்கள்தான் அருளவேண்டும்' என்று ஸ்ரீமந் நாராயணனிடம் கோரிக்கை வைக்கப்பட்டதாம்! அப்போது, திருமால்... "என் தலையில் இருந்து, வெளுத்த முடி ஒன்றையும் கறுத்த முடி ஒன்றையும் கிள்ளிப் போடுகிறேன். வெளுத்த முடி,

ஸ்ரீபலராமனாகத் தோன்றுவான். கறுத்த முடி, நானாகவே அவதரிப்பேன்" என்று சொல்லி அருளியதுடன், அப்படியே பிறப்பெடுத்தாராம் ஸ்ரீமந் நாராயணன். ஆக, பகவானின் தலைமுடியானது கூட தேஜஸ் பொருந்தியதாக, ஒளி படைத்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது என்பதை தன்னுடைய சீடனுக்கு அற்புதமாக விளக்கியுள்ளார் பராசர பட்டர்.

ஆக மொத்தத்தில், ஸ்ரீகிருஷ்ண பகவான் ஒளிமயமானவன்; தேஜஸ் நிரம்பியவன் என்பதையே அட்சரம் பிசகாமல் வலியுறுத்துகின்றனர் சான்றோர்!



நம்மாழ்வார் மட்டும் சும்மா இருந்துவிட்டாரா, என்ன? ஒளி, ஒளி, ஒளி... ஒளிமயமானவன் ஸ்ரீகிருஷ்ண பகவான் என்பதை தன்னுடைய பத்துப் பாடல்களில் மிகப்பிரமாதமாக எடுத்துரைத் திருக்கிறார். 'ஆதி எம் சோதி உருவை அங்கு வைத்தாற் போன்று' என்று பாடுகிறார்.

அதாவது, ஆதியும் ஜோதியுமான உருவம் கொண்டிருக்கிற பரந்தாமன், பரமபதத்தில் இருக்கிற நிலையைப் போலவே இங்கேயும் ஸ்ரீகிருஷ்ணனாக அவதரித்தான் என்று உருகுகிறார் நம்மாழ்வார். அதுமட்டுமா? எத்தனை இடர்கள் வந்தாலும், ஸ்ரீகண்ணனின் நாம சங்கீர்த்தனங்களைச் சொல்லி வந்தோமானால், வாழ்வில் உய்யலாம் என்றும் நமக்கு அறிவுறுத்துகிறார்.

அதுவும், பகவானின் திருநாமங்களை எப்படிச் சொல்ல வேண்டுமாம்?

ஆடிக்கொண்டே திருநாமங் களைச் சொல்ல வேண்டுமாம்! அந்த ஆட்டம் எப்படி இருக்க வேண்டும் தெரியுமா? தலை காலைத் தட்டவேண்டும்; கால்கள் தலையைத் தட்ட வேண்டும். 'என்னடா இவன்... தலை கால் புரியாம ஆடுறானே...' என்போமே! அந்த அர்த்தத்தில், தன்னையே மறந்து இறைவன் ஒருவனையே நினைந்து, ஆடவேண்டும் என்கிறார் நம்மாழ்வார்.

'இந்தக் காலத்தில், இப்படி ஆடினால், சுற்றியிருப்பவர்கள் சும்மா இருப்பார்களா? கை கொட்டிச் சிரிக்கமாட்டார்களா?' எனும் கேள்வி எழலாம். இப்போது நம்மிடையே தோன்றியுள்ள வினாவுக்கு, அப்போதே விடை அளித்துவிட்டார் நம்மாழ்வார்.

எப்படி?

பகவானின் திவ்விய நாமங்களைச் சொல்லியபடி தன்னையே மறந்து ஆடும்போது, எவரேனும் கை கொட்டிச் சிரிக்கிறார்கள் என்றால், அதற்காகக் கவலைப் படாதீர்கள்; வெட்கப்படாதீர்கள்; சட்டென்று ஆட்டத்தை நிறுத்திவிட்டு, நாமசங்கீர்த்தனம் சொல்வதையும் நிறுத்திவிட்டு, உடைந்துவிடாதீர்கள். அவர்கள் கைத்தட்டுகிறார்கள், அல்லவா? அந்தக் கைத்தட்டலுக்குத் தக்கபடி, உங்களின் ஆட்டத்தை மாற்றி ஆடுங்கள்; திவ்விய நாமங்களைச் சொல்லிக் கொண்டே ஆடுங்கள். உங்களின் ஆட்டமும்பாட்டமும் பார்த்து, மலைத்துப் போய், வியந்தும் நெகிழ்ந்துமாக, அவர் களும் உங்களுடன் சேர்ந்து ஆடுவதற்கு வந்துவிடுவார்கள்; பகவானின் திவ்விய நாமங்களைச் சொல்லத் துவங்குவார்கள் என குழம்பிய மனத்துக்குத் தெளிவூட்டுகிறார் நம்மாழ்வார்.

ஒரு விஷயத்தைத் துவங்குவதுதான் நம்முடைய வேலை; அதைக் கைப்பிடித்து அழைத்துச் செல்வது இறைவனின் கடமை. திருப்பதிக்குப் போய், க்யூவில் நிற்பதுதான் நம்முடைய வேலை. அந்தக் கூட்டம் நெட்டித் தள்ள, நெட்டித் தள்ள... திருவேங்கடமுடையானுக்கு அருகில் போய்த்தானே ஆகவேண்டும்?! அதேபோல், பகவானின் நாமசங்கீர்த்தனம் செய்து பாடிக் கொண்டிருப்பது தான் நம்முடைய பணி; தன்னுடைய திருவடியில் நம்மைச் சேர்த்துக் கொள்வது இறைவனின் கடமை! நம்முடைய பணியைச் செம்மையாகச் செய்து கொண்டிருந்தால், இறைவன் தனது கடமையை, கருணையும் வாஞ்சையும் பொங்க, சீக்கிரமே நிறைவேற்றுவான் என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை!

கீதையில் ஸ்ரீகிருஷ்ணன் தெரிவிக்கிறான்..."நான் பிறக்காதவனாகவே; நான் சரீரத்துடன் பிறக்காதவனாகவே; அப்படிப் பிறந்தாலும், சர்வேஸ்வரத்தை விடாதவனாகவே..." என அருள்கிறார்.

அதாவது, மனிதர்களைப் போல் உடம்புடனோ அவர்களுக்கு உண்டான கர்ம நியதிகளுடனோ பிறக்கவில்லை. அப்படி மனித உருவெடுத்து வந்தபோதிலும், என் குணங்களை, எந்தத் தருணத்திலும் விட்டுவிலகவில்லை என்கிறார் ஸ்ரீகிருஷ்ணர்.

ஆக, தன்னுடைய குணங்களை எந்தத் தருணத்திலும் விட்டு விலகாத ஸ்ரீகிருஷ்ணர், அவருடைய குழந்தைகளான நம்மை மட்டும் விட்டுவிட்டு, விலகிவிடுவாரா என்ன?

பகவானை நோக்கி நாம் ஓரடி எடுத்து வைப்போம்; அவர் நம்மை நோக்கி பத்தடி எடுத்து வைப்பார்!

ஆடுவோம்... பாடுவோம்! வேளுக்குடி கிருஷ்ணன்



# கண்ணன் நாமம் சொல்லும் கதைகள்!




'குழந்தையும் தெய்வமும் குணத்தால் ஒன்று!' என்பார்கள். ஆனால், அந்தக் குழந்தைகள் வளர்ந்து, பெரியவர் களாகும்போது, அதே குணங்கள் இருக்கிறதா என்று கேட்டால், இல்லை என்றுதான் பதில் சொல்ல முடியும்!

நமக்கெல்லாம் ஆத்மா என்பது இருக்கிறது. ஆனாலும், சரீர சம்பந்தத் துடன் உயிர் வாழ்கிறோம். அந்தச் சரீரத்தின் தேவைகளுக்குத் தக்கபடி, நம்முடைய குணங்களும் மாறிக் கொண்டே இருக்கின்றன. அதாவது, சுபாவங்கள் இன்னதுதான் என்று ஒன்றை மட்டும் சொல்லமுடியாமல், சட்சட்டென்று மாறிக்கொண்டே இருக்கின்றன. ஏனெனில், சரீரமானது, சுக-துக்கங்களுடன் தொடர்பு கொண்டது; நன்மை- தீமைகளுடன் பிணைந்திருப்பது.

ஆனால், நம்மைப் போலவே, சரீரத்தால் அவதாரம் எடுத்தவர்தான் பகவான் ஸ்ரீகிருஷ்ணர். ஆனால், அவருடைய எந்தக் குணங்களும், எப்போதும் மாறாமல் அப்படியே இருந்தன. சொரூபம் என்பதும், சுபாவம் என்பதும் ஸ்ரீகிருஷ்ணருக்கு மாறவே மாறாத ஒன்று. ஏனெனில், அவர்... பரமாத்மா!

இன்னும் ஆழ்ந்து பார்த்தால், மூன்று சத்தியங்களை சரீரமாகக் கொண்டவர் பகவான் ஸ்ரீகிருஷ்ணர் என்கிறது வேதம். சத்திய விரதம், சத்திய பரம், த்ரிசத்தியம் ஆகிய மூன்று சத்தியங்களுடன் அவதரித்தவர் ஸ்ரீகிருஷ்ணர். அதாவது, பரமபதத்தில் நிலையாகக் காட்சி தருகிற அதே ஸ்ரீமந் நாராயணன்தான், சாட்சாத் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவாக அவதரித்தார். 'அங்கு வைத்தாற்போன்றே...' எனும் வாக்கியத்துக்கு ஏற்ப, அதே குணங்களுடனும் சுபாவங்களுடனும் தோன்றினார் ஸ்ரீகிருஷ்ணர். ஜோதிர்மயமாகவும் அவதரித்தார். நித்திய சூரிகள் தீப- தூப ஆராதனை செய்து பரம்பொருளை வழிபடும் வேளையில், அந்தப் புகை பரவி, அந்தப் பகுதியையே மறைக்க... சந்திர- சூரியர்களை தன்னுடைய கண்களாகக் கொண்ட பரம்பொருள், அப்போது தனது கிருஷ்ணாவதாரத்தை நடத்துவதற்காகப் புறப்பட்டுச் சென்றார்.

ஆகவே, தன் நிலையில் இருந்து பரம்பொருள் என்றைக்கும் நழுவவே மாட்டார் என்பதை அறிந்து உணர்வது அவசியம்.

வாழ்க்கையில், எவருக்குத்தான் ஆசை இல்லை?! நல்லவை அனைத்தும் நமக்குக் கிடைக்க வேண்டும் என்றும், கெட்டவை எதுவும் நம்மை அண்டக்கூடாது என்றும் வேண்டுவதே நம் அனைவரின் பிரார்த்தனை! நம்முடைய ஆசைகள்தானே, பகவானிடம் பிரார்த்தனையாக வெளிப்படுகின்றன.

அதாவது, நல்லவை என நாம் நினைக்கிற விஷயங்கள், நமக்குக் கிடைக்கவேண்டும்; துன்பம் விளைவிக்கக் கூடியதாக நாம் நினைத்துப் பதறுகிற விஷயங்கள், நம்மை விட்டு விலகிவிடவேண்டும் என்று ஆசைப்படுகிறோம். ஆனால் என்ன... ஒருவருக்கு இருக்கிற ஆசை வேறொருவருக்கு இருக்காது.

அதாவது, நீங்கள் விரும்புகிற விஷயத்தை இன்னொருவர் விரும்பமாட்டார்; வேறு ஏதேனும் ஒன்றை நாடுபவராக இருக்கலாம். அதேமாதிரி, நீங்கள் வேண்டாம் என்று புறக்கணிக்கிற விஷயத்தை அவரும் புறக்கணிப்பார் என்று சொல்வதற்கில்லை. இன்னும் சொல்லப்போனால், நீங்கள் கெட்டது என்று நினைத்து நடுங்குகிற ஒரு விஷயம், அவருக்குச் சாதாரணமாகப் படலாம். மாறாக, 'இந்த விஷயம் மட்டும் என்னை நெருங்கவே கூடாது ஸ்வாமி!' என்று வேறு ஏதேனும் ஒன்றைக் கெட்டதாக நினைத்து, பிரார்த்திப்பார்.

அவ்வளவு ஏன்... நாமேகூட, சின்ன வயதில் நல்லதையும் கெட்டதையும் பட்டியல் போட்டு வைத்திருப்போம். பிறகு இளைஞனாகும் தருணத்தில், நமது 'தேவைப் பட்டியலில்' வேறு சில விஷயங்கள் இடம்பெற்றுவிடும்; 'தேவையற்றவை' என வேறு வேறு விஷயங்களைக் குறித்து வைத்திருப்போம். வயதுக்குத் தக்கபடி ஆசைகள் மாறிக்கொண்டே இருக்கும்!

ஆனால், இந்தப் பூவுலகில், எவருக்கும் மாறவே மாறாத ஓர் ஆசை உண்டெனில், அது பகவானின் திருவடித் தாமரையை நாடுவதுதான்! இறுதிக் காலத்தில், அவனைச் சரணடைந்து, அவனது திருவடிகளைப் பற்றிக்கொள்ள வேண்டும் என்பதே, மனிதர்களாகிய நம்முடைய ஆசையும் பிரார்த்தனையும்! மகாபாரதத்திலும் ஸ்ரீபகவத் கீதையிலும் இதை வெகு அற்புதமாக உணர்த்தியிருக்கின்றனர், ஆச்சார்ய பெருமக்கள்.



நாம் ஆசைப்பட்ட பொருள் கிடைக்கவேண்டும் எனில், அதற்கு நம்முடைய உழைப்பும் இருக்க வேண்டும் அல்லவா?! எதுவுமே சும்மா நம் மடியில் வந்து விழுந்து விடுமா, என்ன? நாம் மெனக்கெட வேண்டும் என்பது ரொம்பவே முக்கியம்.

சரி... பகவானின் திருவடியில் சரணடைவதற்கு நாம் என்ன செய்யவேண்டும்?

கைங்கர்யம்... கைங்கர்யம்... கைங்கர்யம்! கிட்டத்தட்ட ஸ்வாமிக்கு தாசனாக வேண்டும். அதாவது, அவனுக்கு அடிமையாக வேண்டும். ஏனெனில், அவன்... ஆண்டான்; ஆண்டவன். நாம் எல்லோருமே அவனுக்கு அடிமைகள்!

'என்னது இது... அடிமைத்தனத்தைக் களைய வேண்டும் என்றுதானே எல்லோரும் சொல்வார்கள்! இதென்ன குழப்பம்?' என்று தவிக்காதீர்கள். 'சுதந்திர இந்தியா என்று சொல்லும்போதே,

எவ்வளவு சுகமாக இருக்கிறது. அப்படியிருக்க... ஆண்டான்- அடிமை இப்போது அவசியம்தானா?' என்று கலங்கிவிடாதீர்கள்.

என்னதான் நாம் இப்போது சுதந்திர தேசத்தில் வாழ்ந்தாலும் சில நியமங்களுக்கு உட்பட்டு, சட்டதிட்ட வரையறைகளுக்குக் கட்டுப்பட்டுத்தானே நடக்கிறோம்?! அதேபோல், பூவுலகில் சில நியமங்கள் உள்ளன; சில விதிகள் இருக்கின்றன. இங்கே, இந்த உலகை ஆட்சி செய்கிற மிகப் பெரிய அதிகாரம் பரம்பொருளிடம் இருக்கிறது. அவனே ஆண்டான். அப்பேர்ப்பட்ட ஆண்டவனிடம் நாம் அடிமையாக, தாசனாக இருப்பதில் தவறே இல்லை. சொல்லப்போனால், இறைவனுக்குத் தாசனாக இருப்பதைவிட, வேறென்ன பெருமை இருக்கிறது, சொல்லுங்கள்!

முக்கியமாக, இங்கே இன்னொரு விஷயத்தையும் நீங்கள் புரிந்துகொள்ள வேண் டும். வார்த்தைக்குத்தான் அவன் ஆண்டான்; நாம் அடிமை - தாசன். ஆனால், அவனுக்கு நாம் தாசனாகிவிட்டால், உடனே அந்தப் பரம்பொருள், நமக்குத் தாசனாகிவிடுவான். அவனது குணம் அப்படி; சுபாவம் அப்படி! இதை எந்த நாளும், எவருக்காகவும் மாற்றிக்கொள்ளவே இல்லை, பகவான்!

மகாபாரதத்தில், பகவான் ஸ்ரீகிருஷ்ணருக்குத் தாசனாக இருந்தான் அர்ஜுனன். ஆனால், மெள்ள மெள்ள அவனுக்கு தாசனாகிப் போனான், ஸ்ரீகிருஷ்ணன். அர்ஜுனன் ஜம்மென்று அமர்ந்துகொள்ள, அவனது தேரை ஓட்டியது கிருஷ்ண பரமாத்மாதானே?! தான் பரம்பொருள், இதோ... இந்த அர்ஜுனன் ஜீவாத்மா என்றெல்லாம் நினைக்காமல், அர்ஜுனக் கூட்டத்துக்காகத் தூதுபோன கண்ணனின் கதையை அறிவோம், இல்லையா? பகவானுக்கு நாம் தாசனாகிவிட்டால், அவன் நமக்குத் தாசனாகிவிடுவான் என்பது, இப்போது புரிகிறதா? ஆக, பகவானின் திருவடிக் கமலத்தைச் சரணடைவதற்கு, அவனுக்குத் தாசனாக இருந்து கைங்கர்யம் செய்ய வேண்டும். என்ன கைங்கர்யம்..? எப்படிச் செய்யவேண்டும்?

எமலோகம். பூமியில் வாழ்ந்த ஒருவன், இறந்ததும் அங்கே வந்தான். அப்போது, எமதருமன் அவன் அருகில் வந்து, ஆதுரத்துடன் அவனுடைய தோளைத்தொட்டான். நடுநடுங்கிப் போனான் வந்தவன். ஆனால், எந்த முரட்டுத்தனமும் எமதருமனிடம் இல்லை; அந்த மானிடனின் தோளை மிருதுவாகத்தான் பற்றிக்கொண்டான். அதில் தனது வலுவையெல்லாம் எமதருமன் காட்டவில்லை. முகத்திலும் எந்தக் குரூரமோ ஆவேசமோ இல்லை. மாறாக, எமதருமனின் கண்களிலும் முகத்திலும் மெல்லிய சோகம்தான் படர்ந்திருந்தது.

அந்தச் சோகம் அவனுடைய குரலிலும் எதிரொலித்தது. வந்தவனின் தோளைப் பற்றிக்கொண்டு, மிகுந்த கனிவான, கருணை அடர்ந்திருந்த குரலில், "எத்தனை வருடங் களாகப் பூமியில் இருந்தாய் நீ? இருபது வருடம் இருந்திருப்பாயா? முப்பது வருடங்கள் வாழ்ந்திருப்பாயா? அறுபது எழுபது வருடங்கள் வரை பூவுலகில் இருந்தவனா நீ?

சரி, இத்தனை வருடங்களாக பூமியில் இருந்திருக்கிறாயே? ஒரு முறை, ஒரேயரு முறை 'கேசவா' என்று ஏன் உச்சரிக்கவில்லை? உன் நாக்கு 'கேசவா' என்று உச்சரிக்க ஏன் மறுத்தது? கேசவனைப் பற்றிய சிந்தனை உனது புத்திக்குள் எட்டவே இல்லையா? உன் மனதில் ஒருமுறைகூட, கேசவனின் திருநாமத்தைச் சொல்லவேண்டும் என்று தோன்றியதே கிடையாதா?

என்னுடைய ஊரான எமலோகத்துக்கு ஒருவன் வருகிறான் என்றால், சந்தோஷப்பட மாட்டேன், நான்! 'அடடா... என்ன கொடுமை இது!' என்று வருந்தத்தான் செய்வேன். வாழ்வில், ஒருமுறையேனும் கேசவனின் திருநாமத்தைச் சொல்லியிருந்தால், இப்போது நீ இங்கே வந்திருக்கவேண்டிய அவசியமே நேர்ந்திருக்காது.

தண்டனை பெறுவதைவிட, தண்டனை கொடுப்பதுதான் ரொம்பவே கஷ்டமான காரியம். கேசவ நாமத்தைச் சொல்லாததால், இப்போது உனக்கும் கஷ்டம்; உனக்குத் தண்டனை கொடுக்க வேண்டுமே என்பதால், எனக்கும் கஷ்டம்!" என்று கனிவுடன் சொன்னாராம் எமதருமன்.

'கேசவன்' எனும் திருநாமத்தின் வலிமையைப் புரிந்து கொண்டீர்களா? அந்தத் திருநாமத்தைச் சொல்வதால் கிடைக்கிற மோட்ச பலனை அறிந்துகொண்டீர்களா?

எங்கே... சொல்லுங்கள், கேசவா... கேசவா... கேசவா!









'**ப**கவானுக்கு ஆயிரம் திருநாமங்கள் உண்டு. அப்படியெனில் அந்த ஆயிரம் திருநாமங்களையும் சொன்னால்தான், பாபம் தீருமா?' என்று கேட்கின்றனர் பக்தர்கள். 'தேவையில்லை. கேசவா எனும் திருநாமத்தை ஒருமுறை, ஒரேயரு முறை சொன்னாலே, நம் அத்தனைப் பாபங்களும் விலகிவிடும்' என்கிறது கீதை.

அதற்காக ஒரேயரு திருநாமத்தை மட்டும், ஒரேயரு முறை சொன்னாலே போதுமானது என்று தப்பாக அர்த்தம் கற்பித்துக் கொண்டு, செயல்படக்கூடாது. 'கேசவா' எனும் திருநாமத்தை மனதார ஒருமுறை சொன்னாலே, நாம் சேர்த்து வைத்திருக்கிற பாபங்கள் அனைத்தும் தொலைந்து விடும் என்றால், அவனுடைய நாமங்கள் அனைத்தையும் சொல்லி வந்தால்... அதுவும் அனுதினமும் சொல்லி வந்தால்... பகவான் நமக்கு எவ்வளவு பலன்களைத் தருவார், எத்தனை புண்ணியங்கள் நம்மை வந்தடையும் என்று யோசிக்க வேண்டும்; பகவானின் திவ்விய நாமங்களைச் சொல்லத் துவங்கினால், நாமும் நம்மைச் சேர்ந்தவர்களும் வளமுடன் வாழ்வோம்!

'அது சரி... பகவானின் திருநாமத்தைச் சொன்னால், நம் ஊழிக்காலம் முதல் இன்று வரையிலான சகல பாபங்களும் தொலையும் என்கிறீர்கள். சுமார் ஆயிரம் வருடப் பாபம் என்றால், ஆயிரம்

வருடங்கள் திருநாமத்தைச் சொல்ல வேண்டாமோ? அப்படிச் சொல்வதற்கு, ஆயிரம் வருடங்கள் நாம் உயிருடன் இருப்பது எவ்விதம்?' என்றும் கேட்கலாம், சிலர்.

மிகப் பெரிய மலைப் பாறை. அங்கே, மிகச் சிறிய குகை ஒன்று. அந்தக் குகைக்குள் இதுவரை எவரும் சென்றதில்லை. குகையின் கதவை இதுவரை எவரும் திறக்கவும் இல்லை. ஒரு தீப்பந்தத்தை எடுத்துக்கொண்டு, குகையின் கதவைத் திறந்து, உள்ளே நுழைந்ததும் என்னாகும்? பல்லாயிரக் கணக்கான வருடங்களாக அந்த குகைக்குள்ளேயே இருந்த இருட்டானது, சட்டென்று விலகிவிடும். அங்கே நம் கையில் உள்ள தீப்பந்தமானது, குகையின் இண்டு இடுக்குகளிலும் வெளிச்சப் பாய் விரித்திருக்கும். 'அதெப்படி... ஆயிரக்கணக்கான வருடங்களாக இருந்த இருட்டை விரட்டுவதற்கு, ஆயிரம் தீப்பந்தங்கள் தேவை இல்லையா? அல்லது, அந்த இருளை அகற்றுவதற்கு ஆயிரம் வருடங்களேனும் வேண்டாமா?' என்று கேட்பது புத்திசாலித்தனம் இல்லைதானே?

எத்தனை வருடங்களாக இருந்தால் என்ன... அந்த குகையின் கும்மிருட்டை விலக்குவதற்கு, ஒரு சின்ன தீப்பந்தமே போதுமானது. அதேபோல், நம் அத்தனைப் பிறவிகளின் பாபங்களும், அன்றைய பாபங்களும், ஏன்... இனி வரப் போகிற பாபங்களும்கூட, கண்ணனின் திவ்விய திருநாமம் ஒன்றைச் சொல்ல, பறந்தோடிவிடும். லட்சம் தீப்பந்தங்களுக்கு இணையானவன், பகவான் ஸ்ரீகிருஷ்ணன். எனவே, நம் பாபங்களை ஒரு நொடியில் பொசுக்கிவிடுவான், அவன்!

கேசவா எனும் திருநாமத்தைப் போலவே, 'ஹரி' எனும் திருநாமமும் உசத்தியானதுதான்! பிரம்ம முகூர்த்தத்தில் எழுந்திருக்கச் சொல்கின்றனர், ஆச்சார்யர்கள். இன்றைய காலத்தில், நமக்கெல்லாம் பிரம்ம முகூர்த்தம் என்பதே காலை ஏழு, ஏழரை என்றாகிவிட்டது. பிரம்ம முகூர்த்த வேளை என்று சொல்லப்படும், நாலு நாலரை மணிக்கு எழுந்திருங்கள். 'ஹரி ஹரி ஹரி ஹரி ஹரி ஹரி ஹரி...' என்று பகவானின் திவ்விய நாமத்தை ஏழு முறை உச்சரியுங்கள்; மனதாரச் சொல்லுங்கள். நம் ஏழேழு ஜென்மத்துப் பாபங்களும் நம்மை விட்டு நீங்கி விடும் என்பது உறுதி. ஹரி என்றாலே பாபங்களை அபகரிப்பவன் என்று அர்த்தம்.





ஒரேயரு விஷயம்... பகவானுக்காக அவனது திருநாமத்தை நீங்கள் சொல்லவில்லை. உங்களுக்காக, உங்களின் நலனுக்காகத்தான் அவனது திருநாமத்தைச் சொல்கிறீர்கள். ஆகவே, அவனுடைய திருநாமத்தை, அனுதினமும் சொல்லவேண்டும்; சொல்லிக் கொண்டே இருக்கவேண்டும் என்று நீங்கள் மனதார ஆசைப்பட வேண்டும். ஒரு பொருளை அடைவதற்கு ஆசைப்படுகிறோம். இத்தனைக்கும் அந்தப் பொருள், மிகமிகச் சாதாரணமானதாக இருக்கலாம்; கீழே விழுந்தால், சுக்குநூறாக உடையக்கூடிய தன்மை கொண்டதாகவும் இருக்கலாம். ஆக, நிலையற்ற ஒரு பொருளை அடைவதற்கு, எவ்வளவு ஆசைப்படுகிறோம்! அந்த ஆசையை, பகவானின்மீது வையுங்கள்; அவனை நினைப்பதில் விருப்பமாக ஈடுபடுங்கள்; அவனுடைய திருநாமத்தைச் சொல்வதில் கிடைக்கிற ஆத்மதிருப்தியை நேசியுங்கள். பகவானின் திருநாமத்தை ஆசையுடனும் பிரியத்துடனும், அன்புடனும் நேசத்துடனும் நீங்கள் சொல்லச் சொல்ல, அவனது பரிபூரணமான ஆசீர்வாதம் உங்களையும் உங்களின் சந்ததியையும் வந்து அடையும் என்பதில் மாற்றமில்லை!

முக்கியமாக ஒன்று... 'பகவானின் திருநாமத்தை 21 நாட்கள் சொல்லி வந்தால், செல்வம் சேரும்; 14 நாட்கள் உச்சரித்து வந்தால், கல்யாணம் கைகூடும்' என்கிற கொடுக்கல்- வாங்கல் வியாபாரமாக, பக்தியையும் பிரார்த்தனையும் ஆக்கிவிடாதீர்கள். எந்த எதிர்பார்ப்புமின்றி, ஸ்ரீகிருஷ்ணரின் திருநாமங்களைச் சொல்வதில், ஆழ்ந்த ஈடுபாடு காட்டி னால், உங்களுக்கு என்னவெல்லாம் தேவையோ, அவை அனைத்தையும் தருவான், ஸ்ரீகண்ணபிரான்!

கற்பக விருட்சம், காமதேனு பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். நீங்கள் எதைக் கேட்டாலும், அவை கொடுக்கத் தயாராக இருக்கும். ஆனால், 'என் தோட்டத்துக்கு வந்துவிடு' என்று சொன்னால், கற்பக விருட்சமும் வராது; காமதேனுவும் சம்மதிக்காது. இந்த ஆசையால் துன்பப்பட்டவர்களின் கதைகளை, புராணத்தில் அறிந்திருக்கிறோம். ஆனால், ஸ்ரீகிருஷ்ணர்தான் கற்பக விருட்சம்; அவர்தான் காமதேனு என்பதை நாம் உணருவதே இல்லை. அப்படிக் கற்பக விருட்சமாகவும் காமதேனுவாகவும் திகழ்கிற ஸ்ரீகிருஷ்ணரிடம், 'என் செல்லக் கண்ணா, நீ என் வீட்டுக்கு வந்துவிடேன்' என்று அழைத்துப் பாருங்களேன்... மிகச் சந்தோஷமாக உங்கள் வீட்டுக்கு ஓடி வந்துவிடுவான்! அது மட்டுமா? கேட்டதை, கேட்டதும் கொடுக்கிற கண்ணபிரான், அவனையே நமக்குத் தருவதற்குச் சித்தமாக இருக்கிறான் என்பதை மறந்துவிடாதீர்கள்.

மீன் பிடிக்கும் தொழிலாளி ஒருவன், ஒரு முறை கடலுக்குச் சென்று மீன் பிடித்து வந்தான். அவன் பிடித்த மீனின் வயிற்றுக்குள் விலை மதிப்பற்ற ரத்தினக் கல் இருந்தது. அவனுக்கு மீனின் அருமையும் ருசியும் தெரியும்; ஆனால் ரத்தினக் கல் பற்றித் தெரியவில்லை. அதை வெறும் கல் என்றே நினைத்தான், அவன்.

எதற்கும் இருக்கட்டும் என்று, அந்த ஊரில் இருந்த நகை வியாபாரியிடம் சென்று அந்தக் கல்லைக் காட்டினான். வியாபாரி, அது ரத்தினக் கல் என்பதையும், இந்த விஷயம் மீனவனுக்குத் தெரியவில்லை என்பதையும் தெரிந்துகொண்டான். 'இந்தக் கல்லோட விலை 20 ரூபாப்பா' என்று சொல்லி, அந்தப் பணத்தைக் கொடுத்து, கல்லை வாங்கிக் கொண்டான். அந்தக் கல்லை அப்படித் திருப்பினால் நீல நிறமாகவும், இப்படித் திருப்பினால் பச்சை நிறமாகவும், இந்தப் பக்கம் திருப்பினால் சிவப்பு வண்ணத்திலும், அந்தப் பக்கமாகத் திருப்பிப் பார்த்தால் வேறொரு நிறத்திலுமாகத் தெரிய... குதூகலத்தில் திக்குமுக்காடிய வியாபாரி, விறுவிறுவென அரண்மனைக்குச் சென்று, மன்னனிடம் ரத்தினக் கல்லின் மகிமையைச் சொல்லி, அதன் விசேஷங்களை எடுத்துரைத்து, 'அதன் விலை ஒரு கோடி ரூபாய்' என்றான். உடனே மன்னனும் ஒரு கோடி ரூபாய் கொடுத்து, அந்த ரத்தினக் கல்லை வாங்கிக்கொண்டான். அதை ஆபரணமாக்கி, ராணியின் கழுத்தில் போட்டான். ஆக... மீனவன், வியாபாரி, மன்னன்... இவர்களில் நீங்கள் யாராக இருக்கப் போகிறீர்கள்?



அதாவது, அந்த மீனவனைப் போல, ரத்தினத்துக்கு இணையான பகவானின் சகஸ்ரநாமங்களை அறியாமலே இருந்துவிடப் போகிறீர்களா? அல்லது, 'நோயிலிருந்து விடுதலை வேணும்; கல்யாணம் சீக்கிரமே நடக்கணும்' என்றெல்லாம் கணக்குப் போட்டு, அந்த ரத்தினத்தை அந்த வியாபாரி ஒரு கோடி ரூபாய்க்கு விற்றதுபோல, செயல்படப் போகிறீர்களா? அல்லது, அந்த ரத்தினத்தை ஆபரணமாக்கித் தன் மனைவி கழுத்தில் போட்டு அழகு பார்த்த ராஜாவைப்போல, 'எனக்கு எதுவுமே தேவையில்லை. அனுதினமும் பகவானின் திவ்விய நாமத்தைச் சொல்வதே ஆனந்தம்; நிறைவு' என்று வாழப் போகிறீர்களா?

அதாவது, நீங்கள்... மீனவனா? நகை வியாபாரியா? மன்னனா? இதை உணர்ந்து தெளிந்து நடப்பதில்தான், வாழ்வின் மொத்த இன்பமும் இருக்கிறது.

கோயிலில், நமது பெயர், நட்சத்திரம், கோத்திரமெல்லாம் சொல்லி, அர்ச்சனை செய்து வழிபடுகிறோம். எதற்கு இது? அவசியமே இல்லை. 'நான் இன்னார்... என் பெயர் இது... கோத்திரம் இதுவே' என்று நீங்கள் யாரிடம் அறிமுகப்படுத்திக் கொள்கிறீர்கள்?

விடிந்ததும் எழுந்து, பேப்பர் படித்துக் கொண்டிருக்கிற அப்பாவிடம், 'ஹலோ... என் பேரு கிருஷ்ணன்; எனக்கு இத்தனை வயசு; என் கோத்திரம் இதுதான்!' என்று தினமும் சொல்லிக்கொண்டா இருக்கிறோம்? ஒருவேளை மூப்பு காரணமாக, பிணி காரணமாக, மறதி காரணமாக, அப்பாவிடமே நம்மை அறிமுகப்படுத்திக் கொள்கிற சூழலும்கூட ஒரு கட்டத்தில் ஏற்படலாம். ஆனால், நம் அப்பனுக்கெல்லாம் அப்பனாக, உலகத்துக்கே தந்தையாக, கடவுளாகத் திகழ்கிற பகவானிடம் நம்மை அறிமுகப்படுத்திக்கொள்ள வேண்டிய அவசியமே இல்லை. ஏனெனில், அவனுக்குப் பிணியும் இல்லை; மூப்பும் இல்லை; மறதியும் கிடையாது!

எனவே, பகவானின் நாமங்களை, ஒரு கடமையாக, ஒரு தவமாக, சந்தோஷமாக, ஆழ்ந்த ஈடுபாட்டுடன் சொல்லி வாருங்கள். யார் கண்டது... உங்கள் வீடு தேடி அந்தக் கண்ணனே வந்தாலும் ஆச்சரியப்படுவதற்கு இல்லை!




**சு**மார் பதினைந்து இருபது வருடங்களுக்கு முன்பெல்லாம், குழந்தைகள் 50, 60 மார்க்குகள் வாங்கினாலே ரொம்பவும் சந்தோஷப்படுவார்கள், பெற்றோர்கள். "அடடா..! எம் புள்ள என்னமா மார்க் வாங்கி, பாஸாகியிருக்கான் பாருங்க!" என்று பார்ப்போரிடமெல்லாம் சொல்லிச் சொல்லி பூரித்து, குழந்தையை நடுக்கூடத்தில் நிற்க வைத்து, திருஷ்டி சுற்றிப் போடுவார்கள்.

ஆனால், இன்றைய காலமே வேறு! '60 மார்க்கெல்லாம் ஒரு மார்க்கா' என்று அந்தக் குழந்தையை அவர்களின் வீட்டாரே இளக்காரமாகப் பார்க்கின்றனர். "இப்படியெல்லாம் மார்க் எடுத்தா, எப்படி டாக்டராகிறது, எப்படி இன்ஜினீயர் ஆகுறது?" என்று அலுத்துக்கொள்கின்றனர்.

அட... 90 மார்க்கே அந்தக் குழந்தை வாங்கியிருந்தாலும், "ஏன், என்னாச்சு? பத்து மார்க் எதுல போச்சு? எங்கே கோட்டைவிட்டே? சரியா படிக்கலியா?" என்கிற கேள்விகள்தான் பெற்றோர்களிடம் இருந்து வருகின்றன. கால மாற்றங்கள், போட்டிகள் நிறைந்த வாழ்க்கை என்றாகிவிட்ட உலகம்தான் இன்றைய நிலை.

மனனம் செய்கிற திறனும், எதையும் சட்டென்று கிரகித்துக்கொள்கிற கூர்மையும் குழந்தைகளுக்கு இருந்தால், அவர்கள் எளிதில் அதிக மதிப்பெண்கள் வாங்கமுடியும். அப்படியான திறமையும் புத்திக்கூர்மையும் இருக்கவேண்டுமெனில், குழந்தைகளுக்குச் சின்ன வயதிலிருந்தே புராணங்களையும் இதிகாசங்களையும் எடுத்துரைக்கவேண்டும்; பகவத்கீதையையும் ராமாயணத்தையும் விவரிக்க வேண்டும். அந்தக் கடமை, ஒவ்வொரு பெற்றோருக்கும் உண்டு. ஆனால், செய்பவர்தான் மிகமிகக் குறைவு!

சரி... பகவத்கீதை படிப்பதற்கும், பரீட்சையில் அதிக மதிப்பெண் எடுப்பதற்கும் என்ன சம்பந்தம் என்று கேட்கிறீர்களா?



நிலாவைக் காட்டிச் சோறூட்டுகிறபோது அல்லது டி.வி-யில் கார்ட்டூனைக் காட்டி இட்லியைப் புகட்டுகிறபோது, "இதுதான் பகவானின் திருநாமம். இதையும் கடந்து கடவுளுக்கு ஏகப்பட்ட பெயர்கள் இருக்கின்றன. அதிலும் குறிப்பாக, பகவத்கீதையில் இரண்டெழுத்தில் உள்ள திருநாமம், மூன்றெழுத்தில் உள்ள திருநாமம், நான்கெழுத்து திருநாமம் என்று எத்தனை உள்ளன தெரியுமா? பகவத்கீதையில், பகவான் ஸ்ரீகிருஷ்ணர் குறித்து, ஒரே திருநாமம் இரண்டு முறை வந்திருக்கிறது; அந்தத் திருநாமம் இதுதான்..." என்றெல்லாம் குழந்தைகளுக்கு ஆன்மிகத்தையும் கொஞ்சம் ஊட்டலாமே! அப்படி ஊட்டினால், அந்தக் குழந்தை, பக்தி மார்க்கத்தை அறிந்து, சாஸ்திர- சம்பிரதாயங்களைக் கடைப்பிடிக்கிற, எதிலும் ஓர் ஒழுங்கைக் கொண்டிருக்கிற அற்புதமான மனிதனாக வருவது உறுதி.

அதுமட்டுமா? பகவானின் திருநாமங்களையும், அந்தத் திருநாமங்களுக்கான காரணங்களையும், ஓரெழுத்து, ஈரெழுத்து, மூன்றெழுத்து... என இருக்கிற திருநாமங்களையும் அந்தக் குழந்தைகள் மிக அழகாக புத்தியில் ஏற்றிக்கொள்ளும். இப்படியாக... நாம் சொல்கிற விஷயங் களையெல்லாம் உள்வாங்கிக் கொள்கிற, கிரகித்துக்கொள்கிற திறனானது சிறு வயதிலேயே வந்துவிட்டால், எல்.கே.ஜி படிப்பதில் துவங்கி, 6-வது, 7-வது படிக்கும்போது அந்தத் திறன் இன்னும் அதிகமாகி, பள்ளியிறுதிப் படிப்பில் மிகத் தெளிவாக உள்வாங்கிக்கொண்டு, கல்லூரிப் படிப்பை மிகச் சுலபமாக எட்டுவார்கள். அப்போது, விரும்பிய படிப்பைக் கல்லூரியில் தொடர்வதற்கு அதிக மதிப்பெண்களை எடுக்கிற புத்திக்கூர்மையும், ஞாபக சக்தியும், மனனம் செய்து உள்ளே உருவேற்றிக் கொள்கிற சாதுர்யமும் மூளையின் எல்லா மூலைகளிலும் பரவி, வியாபித்திருக்கும். ஆகவே, வீட்டில் குழந்தைகளிடத்தில், புராண- இதிகாச- காப்பிய- காவியங்களை சொல்லிக் கொடுங்கள்; அறிவும் மேம்படும்; ஆன்மிகமும் தழைக்கும்!

பகவத்கீதையில் பகவான் ஸ்ரீகிருஷ்ணரின் ஒரே திருநாமம், இரண்டு முறை வந்திருக்கிறது என்று சொன்னேன். அந்தச் சிறப்புக்கு உரிய திருநாமம் என்ன தெரியுமா? வசுப்ரதஹா!

இந்தத் திருநாமத்தின் அருமை- பெருமையைப் பார்ப்பதற்கு முன்பு, பகவானின் திருமேனியை ஆழ்வார் எப்படி விவரிக்கிறார் என்பதைப் பார்ப்போம். இதுவும், இன்றைய குழந்தைகளுக்குப் புரியவைக்க வேண்டிய ஒன்றுதான்!

ஜோதிமயமானவன் ஸ்ரீகிருஷ்ணர் என்று பார்த்தோம், அல்லவா! பகவான் எனப்படுபவர் ஒளிமயமான, தேஜஸ் நிறைந்த, பரஞ்சோதி என்பதில் யாருக்குத்தான் சந்தேகம் வரும்?! சரி... அவருடைய திருமேனியை, பொன்னுக்கு நிகராக ஜ்வலிப்பதாகச் சொல்கிறார் ஆழ்வார். ஆனால், அத்துடன் நின்றுவிடவில்லை அவர். தகதகத்து மின்னுகிற பொன்னைச் சொல்லியும் மனதுள் நிறைவு தராததால், 'நன்பொன்' என்று பாடுகிறார். 'மாசறு பொன்னே...' என்கிறோமே, அப்படி நன்பொன் எனப் பாடுகிறார். அப்போதேனும் நிறைவுற்றாரா அவர்?!

'உரைத்த நன்பொன்' என்கிறார். அதிலும் மனம் சமாதானமாகவில்லை அவருக்கு. பொன் என்று சொல்லியாயிற்று; நன்பொன் என்று சான்றிதழும் கொடுத்தாகிவிட்டது; 'உரைத்துப் பார்த்துதான் சொல்கிறேன்' என்கிற உறுதியையும் தந்தாகிவிட்டது. இறுதியாக, 'சுட்டுரைத்த நன்பொன்' என்று, தங்கத்தைச் சுட்டு, உரைத்துப் பார்த்து, நல்ல பொன் எனத் தெரிந்துகொண்டேன் என்று சொல்லிச் சிலாகிக்கிறார். அப்படியும், அவருக்குள் ஒரு சந்தேகம்... 'இது சரிதானா? பகவானின் திருமேனிக்கு இது சரிசமம்தானா?' என்று உள்ளுக்குள்ளிருந்து கேள்வி வந்து உசுப்ப... சட்டென்று, 'சுட்டு உரைத்த நன் பொன் ஒவ்வாது' என்று பாடிவிட்டார் ஆழ்வார். 'அடடா... பகவானே! உன்னுடைய ஜோதிமயமான திருமேனிக்கு, சுட்டுரைத்த நல்ல பொன்கூட இணையாகாது' என்று பாடி முடித்து, வணங்குகிறார். இதுதான் தமிழின் அழகு; இதுதான், ஆழ்வார் பெருமக்களின் பூரணத்துவமான இறை பக்திக்குச் சான்று! தமிழையும் பக்தியையும் கலந்து, உள்ளிருந்து பாடல்களாகத் தந்திருக்காவிட்டால், நமக்கெல்லாம் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தமெல்லாம் கிடைத்திருக்குமா, சொல்லுங்கள்!

இப்படித்தான் பராசர பட்டர், ஸ்ரீரங்கத்து அரங்கநாதனின் முன்னே நின்றார். 'என்னையும் என்னுடைய அழகையும் பாடிவிடுவீரோ நீர்?' என அரங்கன் கேட்க... 'முதலில், உம்முடைய ஆதிசேஷனைப்போல எனக்கு ஆயிரம் நாக்குகளைத் தாருங்கள், பார்க்கலாம்' என்றாராம் பராசரர்.

'அட... ஆயிரம் நாக்குகள் இருந்தால்தான் பாடுவீரோ?' என்று சிரித்த அரங்கன், கருணையும் வாஞ்சையும் மேலிட... பராசரபட்டருக்கு, ஆயிரம் நாக்குகளை வழங்கினான்.

ஆனந்தத்தில் கைகள் குவித்து, சிரம் தாழ்த்தி நமஸ்கரித்தார் பராசரர். "மன்னிக்கவும் ரங்கா! உன்னை என்னால் பாட முடியாது!" என்று சொல்லிவிட்டு, அமைதியாகிவிட்டார். ஆச்சரியம் தாங்கவில்லை அரங்கனுக்கு!

பின்னே... பாடு என்று உத்தரவு போட்டாகிவிட்டது. பராசரர் கேட்டபடி, ஆயிரம் நாக்குகளையும் அவருக்கு வழங்கியாகிவிட்டது. அப்படியும் 'பாட முடியாது' என்று மறுத்தால், அரங்கனுக்கு ஆச்சரியம் எழத்தானே செய்யும்?



"என்ன விளையாடுகிறாயா? ஆயிரம் நாக்குகள் கேட்டாய்; கொடுத்தேன். பிறகென்ன... பாடவேண்டியதுதானே? முடியாது என்கிறாயே!" என்றான் அரங்கன்.

பராசர பட்டர், மீண்டும் கைகளைக் குவித்துக்கொண்டார்; மொத்த உடலையும் இன்னும் குறுக்கிக்கொண்டார்; முதுகை வளைத்து இன்னும் கூனாக்கிக்கொண்டு, "அரங்கா... உன் ஒளி பொருந்திய அழகை என்னால் பாடமுடியாது என்று சொல்வதற்கே, எனக்கு ஆயிரம் நாக்குகள் தேவையாக இருக்கும்போது, பரஞ்சோதியாகத் திகழும் உன்னையும் உனது பேரழகையும் பாடுவதற்கு, எனக்கு இன்னும் எத்தனை எத்தனை நாக்குகள் தேவையோ?!" என்று சொல்லிப் புகழ்ந்தாராம் பராசரர்.

என்னவொரு அற்புதமான உவமை, பாருங்கள்! பகவானின் பேரழகுத் திருமேனியை விவரிப்பதற்கு எப்படியெல்லாம் சிந்தித்து, அவனுடன் இரண்டறக் கலந்திருக்கின்றனர் அடியவர்கள்! அப்பேர்ப்பட்டவனது திருநாமத்தைச் சொல்வது, எத்தனை வல்லமையை நமக்கு வழங்கும் என யோசியுங்கள்.

முடிந்தால்... இதையும் உங்களின் குழந்தைகளுக்கு எடுத்துச் சொல்லுங்கள். ஏனெனில், பகவான் எப்போதுமே நம்மைவிட குழந்தைகளுக்கு இன்னும் நெருக்கமானவன்!






**இ**ன்றைய குழந்தைகள்தான் நாளைய தலைமுறை. 'மாலை முழுவதும் விளையாட்டு' என்று சொல்லியிருப்பதுபோல், குழந்தைகள் உற்சாகத்துடன் ஓடி ஆடி விளையாட வேண்டும். அப்படி விளையாடினால்தான் தேகம் ஆரோக்கியமாகத் திகழும். உடலுக்கு ஆரோக்கியம் தருவது விளையாட்டு எனில், ஆத்மாவுக்கு ஆரோக்கியம் தருவது எது? பகவத் விஷயங்களை அவர்களுக்குச் சொல்லித் தருவதைத் தவிர வேறென்ன இருக்கிறது, சொல்லுங்கள்!

பகவத் கீதையில், பகவான் ஸ்ரீகிருஷ்ணரின் திருநாமங்களைச் சொல்கிறபோது, ஒரே திருநாமம் இரண்டு இடங்களில், அதுவும் அடுத்தடுத்து வருவதாகச் சொன்னேன். அந்தத் திருநாமம்... வசுப்ரதஹா.

இங்கே, வசு என்றால் ஐஸ்வரியம் என்று அர்த்தம்; சொத்துக்கள் என்று அர்த்தம். ப்ரதஹா என்றால் ப்ரதாதி; அதாவது, சொத்துக்களையும் ஐஸ்வரியங்களையும் நிதியாக அளித்தவன் என்று பொருள்.

என்ன சொத்து? என்ன நிதி?

இந்த உலகில் உள்ள மனிதர்களுக்கு ஈடு இணையற்ற மிகப் பெரிய சொத்து என்பது அவர்களின் வாரிசுதானே?! பூவுலகில், தேவகியை மாதாவாகவும் வசுதேவரைப் பிதாவாகவும் வரித்துக்கொண்டு ஜனித்தானே கண்ணபிரான்... அதைவிட வேறென்ன ஐஸ்வரியத்தை அவர்களுக்கு வழங்க முடியும்? 'புத்திரன்' என்கிற நிதியைத் தந்தவன் என்பதற்காக 'வசுப்ரதஹா' எனும் திருநாமம் பகவான் ஸ்ரீகிருஷ்ணருக்குக் கிடைத்தது.

'எனக்கொரு புத்திர பாக்கியத்தைக் கொடு' என்று வேண்டித் தவம் இருக்கின்றனர் பூவுலகில் பலர். ஆனால், ஜகத்துக்கே பிதாவாகத் திகழும் கண்ணபிரான், தேவகிக்கு மாதா என்கிற பட்டத்தையும், வசுதேவருக்கு பிதா எனும் பட்டத்தையும் வழங்கிச் சிறப்பித்த கருணையைக் கவனியுங்கள்.

இங்கே ஒரு விஷயம்...

கங்கைக் கரையில், ராம லட்சுமணர்கள் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தனர். பின்னே... அவர்கள் ராஜகுமாரர்களாயிற்றே! சுகுமாரர்கள் அல்லவா! சௌக்கியமாகவும் சந்தோஷமாகவும், நிம்மதியாகவும் நிறைவாகவும் தூங்கிக் கொண்டிருந்தனர். அவர்களை அழைத்துக் கொண்டு வந்தவர், விஸ்வாமித்திரர். அவர் அதிகாலைப் பொழுதில் எழுந்து, கங்கையில் நீராடி, ஜப தபங்களையெல்லாம் முடித்துவிட்டு, ராம- லட்சுணர்களை எழுப்புகிறார். நாலரை மணிக்கு எழுப்பத் தொடங்கியவர், ஆறரை மணி வரைக்கும் எழுப்பிக் கொண்டே இருக்கிறாராம்! ம்ஹூம்... இரண்டு பேரும் எழுந்திருக்கவே இல்லை.

சரி... அவர் எப்படி அவர்களை எழுப்பினார் தெரியுமா? 'கௌசல்யா சுப்ரஜா... கௌசல்யா சுப்ரஜா...' என்று சொல்லிக் கொண்டே எழுப்பினாராம்.

பகவான் ஸ்ரீராமபிரானை எழுப்புவதற்கு, 'கௌசல்யா சுப்ரஜா' என்று ஏன் சொல்லிக்கொண்டே இருக்க வேண்டும்? என்ன அர்த்தம் இதற்கு?

அதாவது, 'இப்பேர்ப்பட்ட மகிமை மிக்க ராமபிரானைப் பெற்றெடுத்த கௌசல்யையே! நீ என்ன விரதம் மேற்கொண்டு, இந்த வரத்தை பெற்றாயோ...' என்று ஸ்ரீராமபிரானின் புகழை மறைமுகமாகச் சொல்லிவிட்டு, அவனுடைய தாயாரை வாயார, மனதாரப் புகழ்கிறார் விஸ்வாமித்திரர்.

இந்த உலகின் சுவாரஸ்யங்களில், மிக முக்கியமானது இதுதான்! தாயும் தகப்பனு மாகக் கைகோத்து, ஒருவனைப் படிக்க வைத்து, ஆளாக்கியிருந்தாலும்கூட, 'அடடா... ஒரு மாணிக்கத்தைத்தாம்பா அவ பெத்தெடுத்திருக்கா!' என்று தாயாரை மட்டும் புகழ்கிற தேசம்தானே இது?! தந்தையை அம்போ என்று விட்டுவிட்டு, அவர்களைக் கண்டுகொள்ளாத உலகம்தானே இது! இதற்கு கௌசல்யையைப் புகழ்ந்த விஸ்வாமித்திரர் மட்டும் விதிவிலக்கா, என்ன?

இங்கே... இன்னொன்றையும் யோசிப்போம்.

தசரதரைப் புகழாமல் இருந்ததற்குக் காரணம்... ஸ்ரீராமரை மட்டும்தானே அவர் காட்டுக்குப் போகச் சொன்னார்! மற்ற பிள்ளைகள் எல்லோரும் அவருடன்தானே இருந்தனர்.

சரி... கைகேயியைப் பாராட்டியிருக்கலாமே என்று தோன்றலாம். அப்படிச் செய்யாமல் இருந்ததற்கு, அவளுடைய மகனான பரதனை, ஸ்ரீராமருடன் அனுப்பவில்லையே, அவள்! ஆகவே, விஸ்வாமித்திரர் அவளைப் புகழவில்லை போலும்!

அடுத்து... சுமித்ரை. 'அடடா... ஸ்ரீராமர் வனவாசம் செல்லும்போது, ஸ்ரீலட்சுமணரையும் அவருடன் அனுப்பி வைத்தவள் ஆயிற்றே! அவளைப் புகழ்ந்திருக்கலாம் அல்லவா?' என்று கேள்வி எழலாம். ஆனால், லட்சுமணன் காட்டுக்குச் சென்றால் என்ன... சுமித்ரையின் இன்னொரு மகன் சத்ருக்னன், அவளோடு கூடவே இருக்கிறானே!

ஆக, ஸ்ரீராமரை வனவாசத்துக்கு அனுப்பினாலும், மற்ற பிள்ளைகள் அருகில் இருக்கிறார்கள் என்கிற நிம்மதி தசரதருக்கு! 'அப்பாடா... நம்ம புள்ளையாண்டான், பரதனை அனுப்பலை' என்கிற நிம்மதிப் பெருமூச்சு கைகேயிக்கு. 'லட்சுமணன் போனால் என்ன... இன்னொரு மகன் சத்ருக்னன் நம்முடன் இருக்கிறான்' என ஆறுதல்பட்டுக் கொள்ளலாம் சுமித்ரை. ஆனால், கௌசல்யைக்கு ஒரேயரு மகன்தான். அவன்... ஸ்ரீராமன். அவனையும் வனவாசத்துக்கு அனுப்புகிற தருணத்தில், அவளால் எப்படித் தாங்கிக் கொள்ளமுடியும்? அதனால்தான், பெற்றவளையும் பெற்ற வயிற்றையும் 'இப்படியரு அற்புதமான மகனைப் பெற்றெடுத்திருக்கிறாயே... என்ன நோன்பு நோர்த்தாயோ?' என்று கௌசல்யையைப் புகழ்கிறார் விஸ்வாமித்திரர்.



இதை நினைக்கும்போதெல்லாம் நெஞ்சமே நிறைந்துவிடும். ஸ்ரீராமரைப் போலத்தான் ஸ்ரீகிருஷ்ணரும்!

அங்கே... கௌசல்யைக்கு மகனாகப் பிறந்து பெருமை சேர்த்தார் ஸ்ரீராமச்சந்திர மூர்த்தி. திருப்பதி ஸ்ரீவேங்கடாசலபதி குடிகொண்டிருக்கிற ஆலயத்தில் துவங்கி, எல்லோரது வீடுகளிலும் அதிகாலையில் 'கௌசல்யா சுப்ரஜா...' என்று இன்றைக்கும் ஒலித்துக்கொண்டிருக்கிறது அவளின் நாமம். அத்தனைப் பெருமையை தாயான கௌசல்யைக்குத் தேடித் தந்தான் ஸ்ரீராமபிரான்.

இங்கே... தேவகிக்கும் வசுதேவருக்கும் மைந்தனாகப் பிறந்து, 'புத்திரன்' எனும் நிதியாக, ஐஸ்வரியமாகப் பிறந்து, அவர்களைப் பெருமைப்படுத்தினான் ஸ்ரீகண்ணபிரான். ராமாவதாரமாகட்டும்... கிருஷ்ணாவதாரமாகட்டும், பகவான் தன்னுடைய கருணைக் குணங்களை, தயாளப் பண்புகளை ஒவ்வொரு தருணத்திலும் நிகழ்த்திக் கொண்டே இருந்தான் என்பதே உண்மை!

சரி... 'வசுப்ரதஹா' என அடுத்தடுத்து இரண்டு முறை சொல்லப்படுவதற்கு என்ன காரணம்?

முதல் முறை சொல்லப்படும் திருநாமம், புத்திரன் எனும் நிதியை அளித்தவன் என்று பார்த்தோம்; அடுத்ததாக மீண்டும் ஒருமுறை 'வசுப்ரதஹா' என்று சொல்லி, ஸ்ரீகிருஷ்ணரைப் புகழ்கிறது ஸ்லோகம்.

குலசேகர ஆழ்வார், தேவகியின் புலம்பலாக பத்துப் பாசுரங்கள் பாடியுள்ளார். ஒருத்தி மகனாகப் பிறந்து, ஒருத்தி மகனாக வளர்ந்தவனல்லவா, கண்ணபிரான்?! தேவகியின் மகனாகப் பிறந்தாலும், அடுத்த கணமே யசோதையின் மைந்தனாக, நந்தகோபனின் பிள்ளையாக வளர்ந்தவனல்லவா, குழலூதும் கோமகன்!

தேவகியைச் சொல்லும்போது, 'பெற்றும் பேறு இழந்தவள்' என்கிறார் குலசேகர ஆழ்வார். பிறந்ததும் யமுனையின் அக்கரைக்கு எடுத்துச் செல்லப்பட்டு, யசோதையின் பிள்ளையாகப் போய்விட்டான், கண்ணபிரான். அங்கே, அவனது நடையையும் ஓட்டத்தையும் விளையாட்டுக்களையும் சேட்டைகளையும் கண்டு ரசித்தவள், அவள்தானே? அதனால்தான், 'பெற்றும் பேறு இழந்தவள்' என்று தேவகியையும், 'பெறாமலே பேறு பெற்றவள்' என்று யசோதையையும் சொல்கிறார் குலசேகர ஆழ்வார்.

இன்னொன்றையும் சற்றே கோபம் கலந்த வருத்தக் குரலில் கேட்டார், குலசேகர ஆழ்வார்.

'இந்த உலகத்துக்கே தகப்பன் நீ! ஆனால், உன்னைப் பலரும் பிள்ளையாகவே பாவிக்கிறார்கள். அப்படி நினைக்கிறவர்களுக்கெல்லாம் நீ பொய்யாகப் பிள்ளைபோல் காட்சி தருகிறாய்; பேரருள் புரிகிறாய். ஆனால், உன்னுடைய பிள்ளையான என்னை மட்டும் கண்டுகொள்ளாமலேயே இருக்கிறாயே... இதென்ன நியாயம்? எனக்கு அருள் புரியமாட்டாயா?' என ஏக்கத்துடன் பாடுகிறார், குலசேகர ஆழ்வார்.

நாமும் இதே ஏக்கத்துடன் பிரார்த்திப்போம்; அவனுடைய திவ்விய நாமங்களை வாயாரச் சொல்லுவோம்; குலசேகர ஆழ்வாருக்கு அருள்பாலித்த பகவான், நமக்கும் கடாட்சத்தை அருளுவான்!

வேளுக்குடி கிருஷ்ணன்






ஒரு குடும்பத்தின் மிகப் பெரிய சொத்து எது தெரியுமா? காசு- பணமோ, வீடு- வாசலோ, நகை நட்டுகளோ, வண்டி- வாகனங்களோ... எதுவுமில்லை. மிகப் பெரிய சொத்து, குழந்தைகள்தான்; வாரிசுகள்தான்!

ஒரு குழந்தை இந்த உலகில் ஜனித்திருக்கிறது; அதாவது, தாய்க்குப் பிரசவ வலி அதிகமெடுத்து, ஆஸ்பத்திரியில் சேர்த்து, மருத்துவர்களின் உதவியுடன் குழந்தை பிறந்திருக்கிறது என்றால், உடனே அந்தக் குழந்தையின் தகப்பன் என்ன செய்வான்? நாமெல்லாம் என்ன செய்தோம்? விறுவிறுவென ஓடிப் போய், குழந்தையைப் பார்ப்போம்; பரவசமாவோம். ஊருக்கும் உறவுக்கும் போன் போட்டுத் தகவல்கள் சொல்வோம். எதிர்ப்படுகிற தெரிந்தவர் அறிந்தவர் அனைவருக்கும் இனிப்புகள் வழங்கி மகிழ்வோம். அது கல்கண்டாகவும் இருக்கலாம்; சாக்லெட்டாகவும் இருக்கலாம்; மைசூர்பாகும் தரலாம்! ஏனெனில், குழந்தை என்பது குதூகலம் சம்பந்தப்பட்டது; சந்தோஷத்துக்கு உரியது; இனிமையானதொரு உறவு!

ஆனால், குழந்தை பிறந்ததும், சுற்றியுள்ளவர்களுக்கும் சுற்றத்தாருக்கும் சின்ன கல்கண்டு கொடுத்துக்கூட மகிழ்ச்சியைப் பகிர்ந்துகொள்ளாதவர் யார் தெரியுமா? வசுதேவர்தான்! பாவம் அவர். சந்தோஷம் மொத்தத்தையும் உள்ளுக்குள்ளேயே புதைத்து வைத்துக்கொண்டார்.

அதுமட்டுமா? இன்னொரு விஷயம். ஸ்ரீராமருக்கும் ஸ்ரீகண்ணனுக்கும் உள்ள ஒற்றுமை மற்றும் வித்தியாசத்தையும் இங்கே பார்க்கவேண்டும். சூரிய வம்சத்தைச் சேர்ந்தவர் ஸ்ரீராமர்; ஒரு பகல் பொழுதில், அரண் மனையில், விளக்குகள் அணி திரண்டு ஒளியைத் தந்துகொண்டிருக்க... ஸ்ரீராமர் அவதரித்தார். இங்கே... சந்திர குலத்தைச் சேர்ந்தவர் ஸ்ரீகண்ண பிரான். இருள் கவிந்திருக்கும் இரவு வேளையில், இருட்டு சூழ்ந்திருக்கிற சிறைச்சாலையில் பிறந்தார் ஸ்ரீகண்ணன்.

சரி... இத்தனை இருட்டுக்கு நடுவில், குழந்தையை எப்படிப் பார்த்தா ராம் வசுதேவர்? கண்ணனின் 32 பற்களும், சந்திரனுக்கு நிகராக ஜொலித்தனவாம்! அந்த ஜொலிப்பின் வெளிச்சத்தில், குழந்தையின் திருமுகத்தைப் பார்த்து ரசித்தார் வசுதேவர்.

என்னடா இது... பிறந்ததுமே பல் முளைத்துவிட்டதா என்ன என்று வியக்கிறீர்கள்தானே? பற்கள் மட்டுமில்லை; நான்கு தோள்களும் சங்கு- சக்கரமும் திகழப் பிறந்தவன், அவன்! அதைப் பார்த்துப் பதறிவிட்டனர், வசுதேவரும் தேவகியும்! பின்னே... நான்கு தோள்கள்; நான்கு திருக்கரங்கள் எனக் குழந்தை பிறந்திருக் கிறான் என்கிற விஷயம் கம்சனுக்குத் தெரிந்தால், அலறிப் பதறிக்கொண்டு, குழந்தையை அழிக்க ஓடிவந்து விடுவானே எனப் பயந்தனர். பிறகு, அவர்களின் வேண்டுகோளின்படி, அந்தப் பராபரன், நம்மைப் போல இரண்டு தோள்களுடன், இரண்டு கைகளுடன் காட்சி தந்தான்.

இன்னொரு சுவாரஸ்யம்... குழந்தை பிறந்ததும், அந்த மகிழ்ச்சியை இனிப்பு வழங்கிக் கொண்டாடுவதுடன் மட்டுமின்றி, அந்தணர்களுக்குத் தானம் அளித்தும் குதூகலிப்பார்கள், அல்லவா?

தனக்கு ஸ்ரீகண்ணன் பிறந்ததும், 'ஆயிரமாயிரம் அந்தணர்களை அழைத்து, அவர்களுக்கு ஆயிரமாயிரம் பசுக்களையும், அவர்கள் அணிந்துகொள்வதற்கு ஆயிரமாயிரம் தங்கப் பூண்களையும் (தங்கப் பூணூல்), போர்த்திக்கொள்வதற்கு ஆயிரமாயிரம் ரத்தினக் கம்பளங் களையும், ஆயிரமாயிரம் தங்கத் தட்டுகளையும், அந்தத் தட்டுகளில் ஆயிரமாயிரம் பொற்காசுகளையும் வழங்கு கிறேன்' என்றாராம் வசுதேவர்.

சுக்கிராச்சார்யருக்குக் குழப்பம். 'சிறைச்சாலைக்குள் இருக்கிற வசுதேவர், அத்தனை அந்தணர்களையும் எப்படி, எங்கே அழைப்பார்? அவர்களுக்கு வழங்குவதாகச் சொல்கிற பசுக்களை எங்கிருந்து பிடித்து வருவார்?' என்று தவிப்பு!

ஆனால், வசுதேவர் என்ன சொன்னார் தெரியுமா? 'ஒன்றைக்கூட கொடுக்க முடியாதபடிக்கு, சிறையில் இருக்கிறேன்தான்! ஆனாலும் மனதார, வாயாரச் சொல்லி மகிழலாமே என்பதால்தான் இப்படிச் சொன்னேன்' என்கிறார். 'சரி... ஒன்றோ இரண்டோ, ஒருவருக்கோ இரண்டு பேருக்கோ தருவதாகச் சொல்லிக் கொள்ளவேண்டியதுதானே?' என்று கேட்டதற்கு, 'கொடுக்கவே முடியாது என்று இருக்கிற நிலையில், ஒன்று என்று சொன்னால் என்ன... ஆயிரம் என்று தாராளமாகத்தான் சொன்னால் என்ன?' என்று சொல்லிப் பூரிக்கிறார் வசுதேவர்.

பகவானுக்கு உள்ள திருநாமங்களில் வாசுதேவன் எனும் நாமமும் ஒன்று. வாசுதேவன் என்றால்... எங்கும், எப்போதும் வசிக்கிறவன் என்று அர்த்தமாம்! ஆனால், இங்கே வசுதேவனின் மைந்தன் வாசுதேவன் என்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது! அதுதான் வசுதேவருக்கு தரப்பட்டிருக்கிற மரியாதை. நந்தகோபனுக்கு மட்டும் என்ன குறைச்சல்? அவருக்கு தந்தைக்கு உரிய மரியாதையும் சந்தோஷமும் எப்படியெல்லாம் கிடைத்தது தெரியுமா?

குழந்தையில் அழகு, அழகில்லாதது என்கிற வித்தியாசங்கள் கிடையாது. குழந்தை என்றாலே அழகுதான்! அதிலும் குழந்தை கொழுகொழுவென்று இருந்தால், கொள்ளை அழகு. பகவான் ஸ்ரீகண்ணன் சிறுவயதில், குழந்தைப் பருவத்தில் எப்படி இருந்தான் தெரியுமா? இளங்களிறு போல இருந்தானாம்! அதாவது, குட்டி யானையைப் போல் மிடுக்குடன் திகழ்ந்தான். வெண்ணெய், பால், தயிர் என்று சாப்பிட்டுச் சாப்பிட்டு வளர்ந்தவன் அல்லவா, அவன்?!

இன்றைக்கு மருத்துவர்கள் சொல்கிற அட்வைஸ், 'ஒயிட்டா இருக்கிற உணவை கட் பண்ணுங்க' என்பதுதான்! அதாவது பால், தயிர், வெண்ணெய், சாதம் போன்றவற்றைக் குறைத்துக் கொள்ளுங்கள் என்கின்றனர். நம்மில் பலரும், 'வெண்ணெய், தயிர், பால்' என்றெல்லாம் ஒரு பேப்பரில் எழுதி, வீட்டில் வைத்திருந்தால்கூட, உபத்திரவம் வந்துவிடும் எனப் பயப்படுகின்றனர். ஆனால், பகவானுக்கு இந்தப் பிரிவினைகள் ஏதுமில்லை. குடித்ததே தயிர்,

கண்டதே பால், உண்டதே வெண்ணெய் என வளர்ந்தவன், கண்ணபிரான்! அவன், குட்டி யானையாக வலம் வரத்தான் செய்வான்.



குமரனாக நந்தகோபனிடமும், இளம் சிங்கமாக யசோதையிடமும் வளர்ந்தான் கண்ணன் என்கிறாள் 'மார்கழித் திங்கள்' பாடிய ஸ்ரீஆண்டாள். அதாவது, நந்தகோபனைக் கண்டால் பவ்யமாக இருப்பான் கண்ணன். அதுவே, தாயார் யசோதையிடம் சண்டித்தனம் செய்து, ஏகத்துக்கும் சேட்டைகள் செய்வான் அவன்.

பிறந்ததுமே யமுனையைக் கடந்து, அக்கரைக்குக் கொண்டு செல்லப்பட்டான் அல்லவா, கண்ணன்? அப்படிக் கண்ணன் அங்கே போனதும் ஊரே கூடியதாம்; குதூகலித்ததாம். 'நான்தான் முதல்ல பாப்பேன்; நான்தான் முதல்ல பாப்பேன்' என்று நந்தகோபன் வீட்டு வாசலில் பெரிய கூட்டமே நின்றது. இதைக் கண்டு கிடுகிடுத்துப் போனாளாம் யசோதை. 'இங்கே பஞ்ச லட்சம் பெண்கள் இருக்கிறார்களே... அவர்கள் அனைவரும் குழந்தையைப் பார்க்க வேண்டும் என்கிறார்கள்; தூக்கிக் கொஞ்ச வேண்டும் என்கிறார்கள்; மடியில் கிடத்தி மகிழ வேண்டும் என்கிறார்கள். அத்தனை லட்சம் பெண்களும், குழந்தையை மடியில் கிடத்தி மகிழ்வதற்கு, என்ன செய்வது?' என கைபிசைந்து தவித்தாள்.

கடைசியாக... வீட்டு வாசலில், 'முதலில் இவள், அடுத்தது அவள், மூன்றாவது இவள், நான்காவது, ஐந்தாவது...' என்று மிகப் பெரிய பட்டியல் போட்டு, அதன்படி சட்சட்டென்று அவர்கள் குழந்தையை வாங்கி, மடியில் போட்டுக் கொஞ்சிவிட்டு, அடுத்தவரிடம் கொடுத்துவிட... அவர்கள் கொஞ்சிக் குதூகலித்து அடுத்தவரிடம் குழந்தையைத் தர... என்று அந்த ஊரே கொஞ்சி மகிழ்ந்ததாம்!

இவை அனைத்தையும் பார்க்கின்ற பேறு, பாக்கியம் எல்லாம் நந்தகோபனுக்குத்தான் கிடைத்தது. அதிலும் குறிப்பாக, மடியில் கண்ணனைக் கிடத்தி, அவனது கன்னத்தை வருடியபடியே பெண்ணொருத்தி, 'உங்க அப்பா யாருப்பா?' என்று கேட்டாள்.

குழந்தைக்கு பேச்சு வருகிறதோ இல்லியோ, அப்படியே வராவிட்டால் கூட, அது ஏதோ சொல்ல... 'அட... குழந்தை அப்பான்னு கூப்பிடறதே... தாத்தாங்கறதே... அத்தையைக் கூப்பிடறது' என்றெல்லாம் சொல்லிக் குதூகலிக்கிறவர்கள்தானே, நாம்?!

அந்தப் பெண்மணி கேட்டதும், வசுதேவர் என்று தந்தையின் பெயரைச் சொல்ல... கண்ணபிரான் சட்டென்று 'வ' என்று சொல்லிவிட்டு உடனே நிறுத்திக்கொண்டார். 'இப்போதுதான் பிறந்திருக்கிறோம்; இன்னும் பாடசாலைக்கே போகவில்லை; பேச்சே வரவில்லை. அப்படியிருக்க... இதற்கு எப்படி பதில் சொல்வது!' என்று யோசித்த கண்ணன், தாமரை இதழ்கள் போன்ற தன் விரலை மெள்ள நீட்டி, தன்னுடைய கடைக்கண்ணால், ஓரக்கண்ணால் நந்தகோபனைப் பார்க்க... 'அட... அப்பா யாருன்னு காட்டிருச்சே குழந்தை' என்று ஒருத்தி சொல்ல... உடனே இன்னொருத்தி, 'குழந்தை அவங்க அப்பாவைப் போலவே, அவர் ஜாடையிலேயே இருக்கு' என்று சொல்ல... களுக்கென்று சிரித்துக்கொண்டாராம் ஸ்ரீகிருஷ்ணர். அங்கிருந்தவர்கள் அனைவரும், குழந்தையின் சிரிப்பைக் கண்டு பூரித்துப் போனார்களாம்!

ஆக, அத்தனை சந்தோஷங்களையும் பெருமைகளையும் நந்தகோபனுக்குக் கொடுத்தாலும், வசுதேவரைப் போற்றத் தவறவில்லை ஸ்ரீகண்ணனின் அடியவர்கள். அதனால்தான் வசுதேவனின் மைந்தனுக்கு வாசுதேவன் என்கிற திருநாமமே அமைந்தது.

வாசுதேவன் என்று சொன்னால், அந்தக் கண்ணன் மகிழ்வான். குளிர்ந்த மனத்துடன், நாம் கேட்பவற்றையெல்லாம் வாரி வழங்குவான். 'உங்க அப்பா அவர்தானே...?' என்று ஒருவர் சொல்லும்போது, மகனுக்கு பெருமிதம் பிடிபடாது என்பது அந்த பகவானுக்கும் பொருந்தும்.

வாசுதேவா, வாசுதேவா, வாசுதேவா... என்று நேரம் கிடைக்கும்போதெல்லாம் சொல்லிக்கொண்டிருங்கள். குழந்தைக் கண்ணன், குதூகலத்தில் மகிழட்டுமே!




**ச**த்தியம் செய்வதற்கும் அந்தச் சத்தியத்தின்படி செயல்படுவதற்கும் மிகப் பெரிய மன உறுதி வேண்டும். அந்த உறுதியுடன், அன்பும் கருணையும் மிக அதிகமாக இருக்கவேண்டும். அப்படியான பெருங்கருணையுடன் திகழ்ந்தவன் ஸ்ரீகண்ணன். கொடுத்த சத்தியத்தை நிறைவேற்றியவன்; சத்தியத்தின்படி வாழ்ந்து காட்டியவன்; சத்தியமாகவே காட்சி தந்தவன், அவன்!

"நான் மூன்று முறை பிறக்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டாய். அதன்படி, பிரிஸ்னி-சுதபாவுக்குப் பிறந்தேன். அதையடுத்து அதிதி- காஷ்யபருக்கு வாமன மூர்த்தியாகப் பிறந்தேன்.

இப்போது, உனக்கும் வசுதேவருக்கும் பிள்ளையாகப் பிறந்துவிட்டேன். ஆக, நீ கேட்டுக் கொண்டதன்படி, நான் மனதுக்குள் சங்கல்பம் செய்துகொண்டபடி, மூன்று முறை பிறந்துவிட்டேன். எனக்கு நானே கொடுத்துக் கொண்ட சத்தியத்தை நிறைவேற்றிவிட்டேன்" என்று தேவகியிடம் சொல்கிறார் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா. அதுமட்டுமா? வசுதேவரின் மைந்தன் வாசுதேவன் எனத் திருநாமம் கொண்டு, அவர்களுக்குக் கூடுதல் மதிப்பையும் மரியாதையையும் வழங்கியருளினார்.

ராவணனின் மகன் ராவணீ; தசரதரின் மகன் தாசரதீ; துரோணரின் மகன் துரோணீ. அதுபோல், வசுதேவரின் மகன் வாசுதேவன்! இவற்றுக்கெல்லாம் விதை... ஸ்ரீமந் நாராயணன். பரமபத நாதனாக இருந்தவர், க்ஷீராப்தி நாதனாக திருப்பாற்கடலில் சயனித்திருந்தவர், எழுந்து மதுராபுரிக்கு வந்துவிட்டார். அவருக்கு முன்பாகவே அவருடைய படுக்கையும் வந்துவிட்டது. அதாவது, ஆதிசேஷன்... பலராமனாக முன்பே வந்துவிட்டான்.

*வீட்டில், எவ்வளவு விருந்தாளிகள் வந்தாலும், நமக்கான படுக்கையை மட்டும் விட்டுக்கொடுக்கமாட்டோம், அல்லவா?! அதேபோல், தனக்கான படுக்கையின்றி ஸ்ரீமந் நாராயணன் இருந்ததே இல்லை.*

*'ஸ்ரீலட்சுமணனைவிட்டு ஒருபோதும் பிரியமாட்டேன்' என்பது ஸ்ரீராம வாக்கியம். இங்கே... கிருஷ்ணாவதாரத்தில், பலராமனாக அவதரித்த ஸ்ரீஆதிசேஷன், அங்கே... ஸ்ரீராமாவதாரத்தில் ஸ்ரீலட்சுமண னாகப் பிறப்பெடுத்தார் அல்லவா!*

*பட்டாபிஷேகம் முடிந்து, புஷ்பக விமானத்தில் ஏறிச் செல்ல யத்தனித்தார் ஸ்ரீராமபிரான். அப்போது விபீஷணன் அவரிடம், "ஸ்ரீராமா, பதினான்கு வருடங்கள் வனவாசத்தில் இருந்தாய். போதாக்குறைக்கு ஸ்ரீசீதாபிராட்டியாரை பத்து மாதங்கள் வரை பிரிந்திருந்தாய். உனக்குத்தான் எத்தனைக் கஷ்டங்கள்; எத்தனைத் துக்கங்கள். இந்த ஊர், கோலாகலங்கள் நிறைந்த ஊர். கொண் டாட்டங்களுக்குப் பஞ்சமில்லாத நகரம். இங்கே, ஆட்டபாட்டங்களுக்குக் குறைவே இல்லை. சந்தோஷங் களுக்கும் மகிழ்ச்சிக்கும் இம்மியளவும் குறைவிருக்காது. மனம் முழுவதும் சோகமும் அயர்ச்சியுமாக இருந்தவன் நீ. சில நாட்கள் இங்கே தங்கி, அத்தனை குதூகலங்களையும் கண்ணாரக் கண்டால், உன் மனம் லேசாகும். எனவே, ஒரு நான்கு நாட்களுக்கு இங்கே தங்கிச் செல்லேன் ராமா!" என்றாராம்.*

*அனைத்தையும் கேட்ட ஸ்ரீராமர், "என்னுடைய அடுத்த வேளைக் குளியல், பரதனுடன்தான்!" என்றாராம். ஏன் அப்படிச் சொன்னார்? ஸ்ரீலட்சுமணர் ஆதிசேஷன் என்றால், ஸ்ரீபரதன் பாஞ்சஜன்யம்.*

*லட்சுமணர் இன்றிப் படுக்கையில்லை; சங்கு இல்லா மல் தீர்த்தமாடுதல் இல்லை.*

*ஆக, அவதாரமும் நோக்கமும் திருநாமமும்தான் வெவ்வேறு! இங்கிருப்பவரே அங்கிருக்கிறார்; அங்கிருப்பவரே இங்கிருக்கிறார்.*

*அரங்கனைத் தவிர வேறு எந்தப் பெருமாளையும் பாடாதவர் திருப்பாணாழ்வார். அவர், ஸ்ரீரங்கம் திவ்விய தேசத்துக்கு வந்து ஸ்ரீஅரங்கனைக் கண் குளிரத் தரிசித்துப் பாடினார். தனது பாசுரத்தில், திருவேங்கடநாதனாக நின்றவன், இங்கே திருவரங் கத்தில் சயனித்திருக்கிறான் என்று பாடுகிறார்.*

*நம் வீட்டுக்கு எவரேனும் வந்தால், 'எங்கிருந்து வருகிறீர்கள்?' என்று கேட்போம்தானே?! திருப்பா ணாழ்வாரே தனக்குள் கேட்டுக்கொண்டு, தானே பதில் சொல்லியிருக்கிறார். இந்த அரங்கன் என்பவன் எங்கிருந்து வந்தவனாம்? திருவேங்கடத்தில் இருந்து வந்தவன். அங்கே எப்படியிருந்தானாம்? அங்கு நின்ற கோலத்தில் இருப்பவன், இங்கு சயனித்தபடி இருக்கிறான்!*

*பழசை மறக்காமல் இருப்பது ஆழ்வார் மட்டும் தானா? நம் கிருஷ்ணபரமாத்மாவும் பழசை மறக்காமல், தந்தையை எப்போதும் நினைத்தபடி, வசுதேவர் மீது அளப்பரிய அன்பைக் கொண்டிருக்கிறார். அதனால் அவருக்கு 'வசுமனஹா' என்று திருநாமம் உண்டானது. அதாவது, தந்தையான வசுதேவரை மனத்தில் வைத்திருப்பவன் என்று அர்த்தம்!*

*இதையெல்லாம் அறிந்த பராசரபட்டர், சற்றே கேலியும் கிண்டலுமாகச் சில விஷயங்களைப் பார்க்கிறார்.*



மாமனார் வீட்டுக்குச் சென்றிருக்கிற மாப்பிள்ளை கள் சுகவாசிகள். தலைதீபாவளிக்கு மாமனார் வீட்டுக்குச் செல்லும் மாப்பிள்ளை குறித்த ஜோக்கு கள் அள்ள அள்ளக் குறையாமல், படிக்கப் படிக்கத் திகட்டாமல் இன்றைக்கும் ஏராளமாக வந்து கொண்டிருக்கின்றன.

மாமனார் வீட்டுக்கும் மாப்பிள்ளைக்கும் உண்டான உறவும் நெருக்கமும் ஏதோ இன்றைக்கு நேற்றைக்கான விஷயம் என்று நினைத்துக் கொள்ளாதீர்கள். திருப்பாற்கடல் என்பது ஸ்ரீதேவித் தாயாரின் ஜென்ம பூமி. அதாவது திருமாலின் மாமனார் வீடு. அங்கே... எவ்வளவு ஒய்யாரமாக, உல்லாசமாக, சயனித்திருக்கிறார் பரந்தாமன்!

இந்தப் பரந்தாமன் மட்டுமா... பரமேஸ்வரன் குடிகொண்டிருக்கிற ஹிமாச்சலமும் உமையவளின் தந்தை, அதாவது சிவனாரின் மாமனார் வீடாயிற்றே?!

பூமியில், ஸ்ரீவில்லிப்புத்தூரைப் பாருங்கள். பெரியாழ்வாரின் மகள் ஆண்டாள், அந்த அரங்கனையே மனதுள் வரித்துக் காதலித்தாள்; அவனே எனக்கு மணாளன் எனப் பூரித்தாள். அதற்காக, மாலையைக் கட்டி எடுத்துக் கொண்டு, ஸ்ரீரங்கத்துக்குச் சென்றாளா என்ன? ஆண்டாள் இருந்த இடத்துக்கே, அதாவது பெரியாழ்வாரின் வீட்டுக்கே வந்துவிட்டாரே ரங்கமன்னாராக!

இன்றைக்கும், அந்தத் தலத்தில் ஸ்ரீவடபத்ரசாயி, பெரியாழ்வார், ஆண்டாள்- ஸ்ரீரங்கமன்னார் ஆகியோரின் சந்நிதிகள் இருக்கின்றன. அவற்றில் ஸ்ரீரங்கமன்னாரின் சந்நிதியைச் சற்றுக் கூர்ந்து கவனியுங்கள். அந்தச் சந்நிதியின் சாளரமும் அமைப் பும் மற்ற கோயிலைப் போலவோ, சந்நிதியைப் போலவே இருக்காது; வீடுகளில் இருப்பது போலவே காட்சி தரும். ஏனென்றால், அது பெரியாழ்வாரின் வீடு; ஸ்ரீஆண்டாள் தவழ்ந்து விளையாடிய இல்லம். அதாவது, ஸ்ரீரங்கமன்னாருடைய மாமனார் வீடு!

பெரியாழ்வாரை மாமனாராகப் பெற்றுப் பெருமை கொண்டார் திருமால். அதேபோல், மாப்பிள்ளையாகி, பெரியாழ்வாருக்கும் பெரும்பேறு தந்தருளினார்.

மாமனார் வீட்டை விடுங்கள்; பெற்றோரையே அதாவது வசுதேவரையே மனதுள் நினைத்துக் கொண்டிருக்கிற ஸ்ரீகண்ணனைப் பார்ப்போம்.

பத்தாவது வயதில், கம்ச வதம் முடிந்தது. உடனே ஸ்ரீகிருஷ்ணன் என்ன செய்தான் தெரியுமா? விறுவிறுவென காராக்கிரகம் நோக்கி ஓடிவந்து, வசுதேவரையும் தேவகியையும் பார்த்து, பார்த்த மாத்திரத்தில் தடாலென சாஷ்டாங்கமாக விழுந்து ஸேவித்தான். உதட்டில் சிரிப்பும் கண்களில் கண்ணீருமென இரண்டும் கலந்த உணர்வில், மூன்று பேரும் இருந்தார்கள்.

இந்தப் பத்து வருடங்களில், எத்தனை முறை சிரித்திருப்பாய்? எத்தனைப் பேரை உன்னுடைய குறும்புகளால் சிரிக்க வைத்தி ருப்பாய்? உன்னையும் உன் அழகையும் பார்த்ததில், எத்தனை பேரின் துக்கங்கள் பறந்தோடி யிருக்கும்? ஆனால், வெளியில் சிரித்துக்கொண்டு, குறும்புகள் செய்து வலம் வந்தாலும், நீ உள்ளுக்குள் அழுதாய் அல்லவா! பெற்றோரைப் பிரிந்திருக்கிற வேதனையில் கதறினாய்தானே?! உள்ளுக்குள் நீ அழுத அழுகையை எவர் அறிவார்? கீதையில், அர்ஜுனனிடம்... "என்னுடைய ஆதங்கமெல்லாம், என்ன பிறந்து என்ன... என்னை எவரும்

சரிவரப் புரிந்து கொள்ளவில்லையே என்பதுதான்! 700 ஸ்லோகங்கள் கேட்ட நீயே என்னைப் புரிந்துகொள்ளாதபோது, மற்றவர்கள் எப்படிப் புரிந்துகொள்வார்கள்?" என்கிறார் பகவான் ஸ்ரீகிருஷ்ணர்.

சாரதியாக, தூதனாக, கையாளாக என்று எத்தனை இறங்கி வந்து பணி செய்திருக்கிறான் ஸ்ரீகண்ணன்! அவனைப் புரிந்து, உணர்ந்து, அறிந்து, தெளிந்தால்... நமக்காகவும் வருவான் ஸ்ரீகண்ணன். அழகுக் கண்ணனை ஆராதியுங்கள்; தூதனாக, கையாளாக, சாரதியாக உங்கள் வீட்டுக்கும் வருவான் ஸ்ரீகண்ணன்!




நீங்கள் பகவான் கிருஷ்ணரை திருடன், கள்ளன், பொய்யன், கொடியன் என்று எப்படி வேண்டுமானாலும் திட்டிக்கொள்ளுங்கள். ஆனால் ஒன்றே ஒன்று... வெறுமனே திருடன், பொய்யன் என்று சொல்லாமல், 'கண்ணன் திருடன், கண்ணன் பொய்யன், கண்ணன் கள்வன்' என்று அவனுடைய பெயரையும் சேர்த்துச் சொல்லித் திட்டுங்கள். ஏனென்றால், அவனுடைய திருநாமத்தை உச்சரித்தாலே நமக்கு நற்கதி கிடைக்கும். அப்படிப்பட்ட தயாளன் அவன்! துவாபர யுகத்தில், அப்படிக் கண்ணனின் பெயரைச் சொல்லித் திட்டியதால்தான், சிசுபாலன் நற்கதி அடைந்தான்.

சிசுபாலன் 'அசத்'. அதாவது, கொடியவன். அப்படி 'அசத்'தாக இருப்பவனுக்கே கிருஷ்ணன் நற்கதி கொடுத்தானென்றால், 'சத்'தாக, 'சத்புருஷர்'களாக வாழ்பவர்களைக் கைவிட்டுவிடுவானா, அந்தப் பரந்தாமன்?! தன்னுடைய சீடர்களை அழைத்துக்கொண்டு பி¬க்ஷக்குச் சென்று சாப்பிட்ட குரு, விருந்தில் பரிமாறப்பட்ட வடைகளை விரும்பிச் சாப்பிட்டார். பிறகு, மேலும் ஒரு வடையை எடுத்து ஒரு குச்சியில் கோத்து, அதைத் தன் சீடனிடம் கொடுத்து, 'இந்த வடையை பத்திரமாக வைத்திரு. பிறகு சாப்பிடலாம்' என்று சொல்லி, ஆஸ்ரமக் குடிசையில் செருகி வைக்கச் சொன்னார்.

சிறிது நேரம் கழித்து, சீடனை அழைத்து அந்த வடையை எடுத்து வரச் சொன்னார். திரும்பி வந்த சீடன், 'குச்சியைக் காணோம்' என்றானாம். வடையின் வாசனையை மோப்பம் பிடித்துக்கொண்டு வந்த எலியானது, வடையை லபக்கிக்கொண்டு சென்றுவிட்டது. 'குச்சியைக் காணோம்' என்று சீடன் சொன்னதும், 'குச்சி போனால் போகிறது. வடை எங்கே?' என்று கேட்கவில்லை குருநாதர்.

குச்சியே காணாமல் போய்விட்டதென்றால், வடை மட்டும் அங்கே இருக்கவா செய்யும்?! இந்தக் கதை சொல்லும் சேதி வெகு அழகு!



இதனை 'தண்டாபூபந்யாயம்' என்பார்கள். அதாவது, தண்டம் என்றால் குச்சி; கோல். அபூபம் என்றால் வடை. தண்டமே இல்லாத போது, அதில் செருகப்பட்டிருந்த வடை மட்டும் இருக்கவா செய்யும்? அப்படித்தான், 'அசத்'துகளுக்காக இருப்பவர்களுக்குக்கூட மோட்சம் கிடைக்கிறதென்றால், 'சத்'தாகத் திகழ்பவர்களுக்கு மோட்சம் கிடைக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?!

பகவான் ஸ்ரீகிருஷ்ணரைச் சரணடைந்து, அவனுடைய திருநாமங்களை மிகுந்த நம்பிக்கையுடனும் பக்தியுடனும் சொல்லி வந்த சத் கோபியர்களும், சத் ஆச்சார்யர்களும், சத் ஆழ்வார்களும், சத் பெற்றோர்களும் நற்கதியை அடைந்தனர்; பகவானின் திருவடியை அடைந்தனர்; வைகுண்டத்துக்குச் செல்லும் பாக்கியம் பெற்றனர்.

எத்தனையோ தத்து வார்த்தங்களையும் ஞான மார்க்கங்களையும் போதித்து அருளிய ஸ்ரீஆதி சங்கரர், 'இறுதியில் நமக்குத் துணைக்கு வருவதும், நாம் நற்கதி அடைவதற்கு வழிவகுப்பதும் பஜ கோவிந்தம் மட்டுமே!' என அருளியுள்ளார். அப்பேர்ப் பட்ட உன்னதமானது அவனுடைய திருநாமம்!

ஆனால் என்ன... 'எனக்குக் கார் கொடு, பங்களா கொடு, கை நிறைய காசு கொடு, வீடு- வாசலைக் கொடு, நகை நட்டுக்களைக் கொடு' என்று கேட்கிறோமே தவிர, நற்கதி என்கிற அற்புதமான சொத்து குறித்து அவனிடம் கேட்பதே இல்லை. 'நான் உன் சொத்து; எனவே நற்கதி எனும் சொத்தினை எனக்கு வழங்கி அருள்வாயாக!' என்று ஒருபோதும் பிரார்த்திப்பதே இல்லை. 'உனக்கு நான் அடிமை' என்று பகவானிடம் சொல்லிச் சரணடைந்தால், அவன் நமக்கு அடிமையாவான்! ஆனால், நாம் என்ன செய்கிறோம்?

'பகவான் என்பவர் மிகப் பெரிய கடலுக்குச் சமமானவர். நாமெல்லாம் மிகச் சிறிய துரும்பைப் போன்றவர்கள். பகவான் எனும் கடலில், துரும்பாகிய நம்மை அலையானது தூக்கிக் கரையில் போட்டுவிடுமே! பிரமாண்டமான கடலை, துளியூண்டு துரும்பு எப்படி நெருங்க முடியும்? அப்படி நெருங்கினாலும், அதை அந்தச் சமுத்திரம் ஏற்கவும் ஏற்காது!' என்று நினைத்துக்கொண்டு, தூரத்திலேயே நின்று கொள்கிறோம்.

ஒன்றைப் புரிந்து கொள்ளவேண்டும். கடலில் வாழ்கிற மீன்களையும் திமிங்கிலங்களையும் கரையில் ஒதுக்கித் தள்ளி விடுகின்றனவா, அலைகள்! 'கடலே! உனக்கு நான் அடிமை' என்பது போலல்லவா, மீன்களும் திமிங்கிலங்களும் கடலும் தண்ணீருமே கதி என்று கிடக்கின்றன!

ஆனால் துரும்பானது, 'நீ யாரோ... நான் யாரோ' என்பது போல் ஒட்டியும் ஒட்டாமலும் விட்டேத்தியாகத்தானே இருக்கிறது!

நாம் அப்படி இல்லாமல், மீன்களும் திமிங்கிலங்களும் கடலுக்கு அடிமையாக இருப்பதுபோல, நாமும் கடவுளுக்கு அடிமையாக இருந்துவிட வேண்டும்; முழுவதுமாக அவரைப் பற்றிக் கொண்டுவிட வேண்டும்; எந்தப் பாசாங்கும் இன்றி, பகவானைப் பரிபூரணமாகச் சரணடைவதே

உத்தமம். அதுவே 'சத்' காரியம்; 'சத்'கதி. அதனால்தான், 'சத்கதிஹி' எனும் திருநாமத்தைச் சொல்லி, 'நற்கதியைத் தர வல்லவன்' என்று பகவானைப் போற்று கிறோம் என்கிறார் ஆழ்வார்.

முன்பே சொன்னதுபோல், நாம் ஸ்ரீகிருஷ்ணருக்கு அடிமையாகிவிட்டால், பகவான் நமக்கு அடிமையாகி விடுவார்.

'சத்கதி' என்கிற நல்ல விஷயங் களைத் தர வல்லவன் அவன். அதேபோல், 'சத்க்ருதி' என்றும் அவனைப் போற்றுவார்கள். 'க்ருதி' என்றால், செயல்கள்; விளையாட் டுக்கள் என்று அர்த்தம். 'சத்க்ருதி' என்றால், நற்செயல்கள்; நல்ல விளையாட்டுக்கள்!

அது சரி, விளையாட்டில் நல்ல விளையாட்டு, கெட்ட விளை யாட்டு என்றெல்லாம் உண்டா என்ன?

உண்டு. நாம் ஆடுகிற ஆட்டம் வேறு; பகவான் ஆடுகிற ஆட்டம் வேறு. நம்முடைய ஆட்ட-பாட்டங்கள் யாவும் சம்சார பந்தத்தில், அதாவது இல்லறத்தில் நம்மை இன்னும் இன்னும் தள்ளும். பகவானின் ஆட்டத்தை, விளையாட்டை உணர்ந்து கொண்டால், சம்சார பந்தத்தில் இருந்தும், அதன் பிரச்னைகளில் இருந்தும் நாம் கரை சேரலாம்.

பகவான் ஸ்ரீகண்ணன் தயிரையும் வெண்ணெயையும் திருடித் தின்று விளையாடினான். முட்டிக்கால்கள் தேயத் தேய, இங்கும் அங்குமாகத் தவழ்ந்தும், நடந்தும், ஓடியும் விளையாடினான். அவனுடைய விளையாட்டுக் களையும் சேட்டைகளையும் பொறுக்கமுடியாமல், உரலோடு அவனைச் சேர்த்துக் கட்டிப் போட்டுவிட்டாள் அவன் தாய்.

உரலுக்கும் கயிற்றுக்கும் கட்டுப் பட்டவன் போல, அவற்றைத் தன்னால் ஒன்றுமே செய்யமுடியாது என்பது போல விளையாட்டுக் காட்டினான் கண்ணன் என அவனுடைய 'சத்க்ருதி'களை, நல்ல விளையாட்டுக்களை வெகு அழகாகச் சொல்கிறார் பராசரபட்டர்.

'திவ்வியமான என்னுடைய இந்தப் பிறப்பையும், அந்தப் பிறப்புக்குப் பிறகு நான் வளர்ந்ததையும் எவரொருவர் நினைக்கிறாரோ, உண்மையாகப் புரிந்துகொள்கிறாரோ, அவருக்கு அதுவே கடைசிச் சரீரம்' என அர்ஜுனனிடம் அருளியுள்ளார் பகவான் ஸ்ரீகிருஷ்ணர்.

ஸ்ரீகண்ணனின் பிறப்பை நினைக்க நினைக்க நமக்குப் பிறப்பு இல்லை. அதே போல், அவனுடைய கோகுலாஷ்டமி நன்னாளின்போது, அவனுக்குப் பிரியமானவற்றையெல்லாம் வழங்கிப் பிரார்த்திப்பதும், அவனது அவதாரத்தை நினைத்து உணர்வதும் சகல சம்பத்துக் களையும் வழங்கும்.

வீடுகளில் இனிப்பு, காரம் போன்ற பட்சணங்களைத் தயார் செய்துவிட்டு, அவற்றை ஒரு பாத்திரத்தில் போட்டு வைப்பார் கள் அம்மாக்கள். மறுநாள், குழந்தைகள் நைஸாக அந்தப் பாத்திரத்தைத் திறந்து பார்த்தால், அதில் பட்சணங்கள் இருக்காது. அவற்றையெல்லாம் இரவோடு இரவாக வேறொரு பாத்திரத்துக்கு மாற்றிப் பாதுகாப்பாக வைத் திருப்பாள், அம்மா. ஆனாலும், அந்தப் பாத்திரத்தைக் கண்டு பிடித்து, பட்சணங்களைத் தின்று தீர்ப்பதில் குழந்தைகள் கில்லாடிகள்.

யசோதையும் குறும்புக் கண்ண னுக்குப் பயந்து தயிர், வெண்ணெய் ஆகியவற்றைப் பானை பானையாக மாற்றிக்கொண்டே இருப்பாள். மாற்றி வைப்பது அவளுடைய வேலை; அதைக் கண்டெடுத்துத் தின்று தீர்ப்பது கண்ணனின் விளையாட்டு!

"வெண்ணெயும் தயிரும் பாலும் குடம் குடமாக இருந்தென்ன... அவற்றையெல்லாம் ரசித்துத் தின்பதற்கு ஒரு குழந்தை இல்லையே என்று ஏங்கியவள்தானே நீ? பிறகு ஏன், கண்ணன் தின்னக்கூடாது என்று ஒளித்து வைக்கிறாய்?" என்று தோழியருத்தி கேட்க...

"ஐயோ! அவன் தின்னக்கூடாது என்பது என் நோக்கமில்லை. தயிர், வெண்ணெய், பால் ஆகியவை அளவுக்கு அதிகமாக உள்ளே சென்றால், கண்ணனின் அந்தச் சின்ன வயிறு தாங்குமா? அவனுக்கு ஏதேனும் ஆகிவிடுமோ என்றுதான் கவலைப்படு கிறேன்" என்றாளாம் யசோதை.

இவை அனைத்தையும் கேட்டுக் கொண்டு, திருடுவதையும் தின்பதையும் ஆனந்தமாகத் தொடர்ந்தான் ஸ்ரீகண்ணன்.






'**வெ**ற்றி அடைவது, தோல்வி பெறுவது... இந்த இரண்டில் எது பிடிக்கும் உங்களுக்கு?' என்று எவரேனும் உங்களிடம் கேட்டால், நீங்கள் என்ன பதில் சொல்வீர்கள்?

'என்ன இது, பைத்தியக்காரத் தனமான கேள்வியா இருக்கே? ஜெயிக்கறதுதான் சுகம்; அதுதான் கம்பீரம். யாராவது தோத்துப் போறதுக்கு ஆசைப்படுவாங்களா?' என்பீர்கள். நீங்கள் மட்டுமல்ல... இந்த உலகில் உள்ள சகல மனிதர் களும் வெற்றி பெறுவதற்குத்தான் ஆசைப்படுவார்கள். அந்த வெற்றியில் அகம் மகிழ்ந்து போவார்கள்; நெஞ்சு நிமிர்த்திக் கொள்வார்கள். அதேநேரம், தோல்வி வந்துவிட்டால், துவண்டு கதறுவார்கள்; கண்ணீர் விட்டுப் புலம்புவார்கள்.

வெற்றியும் தோல்வியும் மாறி மாறி வருவதுதான் வாழ்க்கை. அதே நேரத்தில், நாம் யாரிடம் வெற்றி பெற வேண்டும், எவரிடம் தோல்வியைத் தழுவ வேண்டும் என்று மறைமுகமாக நமக்கு அருளியிருக்கிறார் பகவான்.

*பகவான் ஸ்ரீகிருஷ்ணருக்குத் தாமோதரன் எனும் திருநாமம் உண்டு. தாம்புக் கயிற்றால் ஸ்ரீகிருஷ்ணரின் இடுப்பில் கட்டிய கதையைத்தான் நாம் அறிவோமே! இந்த உலகையே கட்டியாள்கிற கிருஷ்ண பரமாத்மா, ஒரு சிறிய தாம்புக் கயிற்றுக்குக் கட்டுண்டு கிடந்தான்.*

*கயிற்றை எடுத்து அவனது இடுப்பில் சுற்றிக் கட்டலாம் என்றால், லேசாகப் பெருத்தான் கண்ணபிரான். கயிற்று முனைகளைக் கட்டுவதற்கு இரண்டு அங்குல இடைவெளி இருந்தது. இன்னொரு கயிற்றைச் சேர்த்து, முடிச்சுப் போட்டுக் கட்ட முனைந்தார்கள். இன்னும் சற்றுப் பெருத்தான். இப்போதும் இரண்டு அங்குல இடைவெளி இருந்தது. இன்னொரு கயிறு, இன்னொரு இரண்டு அங்குல பருமன்... என்றே இந்த விளையாட்டு நிகழ்ந்து கொண்டிருக்க... அவன் அம்மா சோர்ந்து போனாள். ஆனால், கண்ணன் களைப்படையவில்லை.*

*அந்தத் தருணத்தில்தான் பகவான் யோசித்தான். "அடேடே..! இப்போது நாம் யாரிடம் நம் வீரத்தைக் காட்டிக் கொண்டிருக்கிறோம்? இதோ... தோல்வியைக் கண்டு அம்மா துவண்டுவிட்டாளே! பாவம் அவள்' என்று எண்ணியவன், 'இந்த என்னுடைய திமிர்த்தனத்தை உன்னிடம் காட்டியது தவறுதான் தாயே! இந்தாம்மா... என்னைக் கயிற்றில் கட்டிக்கொள்' என்பதுபோல், பருமனைக் குறைத்துக் கொண்டு நின்றான். உடனே, குறும்புக் கண்ணனைக் கயிற்றில் கட்டிப்போட்டாள் தாய். நம்முடைய தாய்- தந்தையிடம் தோற்றுப் போவதில் தப்பே இல்லை என்பதை எவ்வளவு சூசகமாக, அழகாக, தெளிவாகச் சொல்லியிருக்கிறான் ஸ்ரீகண்ணபிரான்.*

*பகவான், கயிற்றுக்கெல்லாம் கட்டுப்படாதவர். பிறகு..? அவர் அன்புக்கும் பாசத்துக்கும் கட்டுப்படுபவர். காதலுக்கும் பிரேமைக்கும் கட்டுண்டு கிடப்பவர். இதனை, 'கண்ணிநுண் சிறுத்தாம்புடன் கட்டுண்டப் பண்ணிய பெரு மாயன்...' எனும் அழகிய பாடல் அற்புதமாக விளக்குகிறது.*

*ஸ்ரீகிருஷ்ணரின் இடுப்பிலே அந்தக் கயிற்றுத் தழும்பைக் காணலாம். அது தழும்பு அல்ல; பட்டம். நெற்றியில் கிரீடம் சூட்டிக்கொண்டால், திருமண் இட்டுக் கொண்டால் அந்த இடத்தில் தழும்பேறிக் கிடக்கும், அல்லவா... அப்படித்தான் இது! அந்தப் பட்டம் எதை உணர்த்துகிறது தெரியுமா? 'அடியவர்கள் எவராக இருந்தாலும், அவர்களுக்கு நான் கட்டுண்டு கிடப்பேன்' என்பதைத்தான் அந்தத் தழும்பின் மூலம் நமக்கு உணர்த்திக் கொண்டிருக்கிறார், பகவான் ஸ்ரீகிருஷ்ணர்!*

*ஆகவே, தாய்- தந்தையிடம் தர்க்கம் வேண்டாம்; சண்டையும் பூசலும் அவசியமில்லை. வெற்றி- தோல்வி என்பதெல்லாம் முக்கியமில்லை. அவர்கள் வெற்றி பெற்றால், அதற்காக மகிழ்வது நீங்கள்தான். பூரிப்பது நீங்கள்தான்!*

*சரி... ஸ்ரீகிருஷ்ணர் பெற்றோரிடம் தோற்றதைப் பார்த்தோம். ஸ்ரீராமர் தோற்றது தெரியுமா? அவர் யாரிடம் தோற்றுப் போனார் என்பதை அறிவீர்களா?*

*கோதாவரி நதி. ஸ்ரீராமபிரானுக்கும் சீதாப்பிராட்டிக்கும் நீச்சல் போட்டி. நதிக்கு நடுவில் உள்ள பாறையை யார் முதலில் தொட்டுவிட்டுக் கரைக்கு வருகிறார் என்பதுதான் போட்டி. அந்தப் பாறையின் மேலே நடுவராக அமர்ந்திருக்கிறார் ஸ்ரீலட்சுமணர். ராவணன் எனும் அரக்கனையே அழித்தொழிக்க அவதரித்த ஸ்ரீராமருக்கு இதெல்லாம் ஒரு போட்டியா என்ன? கரையில் இருந்து சீதை பதினைந்து அடி தூரத்தைக் கடப்பதற்குள், அவர் பாறையைத் தொட்டுவிட்டுத் திரும்பி, பாதி தூரத்தைக் கடந்து வந்து கொண்டிருக்கிறார். இறுகிய முகத்துடன், மூச்சிழுத்துக்கொண்டு, கைகளை வீசி, கால்களை உதைத்து அரக்கப்பரக்க நீச்சலடித்துக்கொண்டு, பாறையை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறாள் சீதை.*



பரிதவிப்பான சீதையின் திருமுகத்தைப் பார்த்ததும், ஸ்ரீராமபிரானுக்குள் ஒரு யோசனை... 'இங்கே அரக்கனுடனா எனக்குப் போட்டி? யாரை வெல்ல இப்படி மல்லுக்கட்டிக்கொண்டு, வெற்றி பெறும் முனைப்புடன் வெறித்தனமாக நீச்சலடிக்கிறேன்? இதோ... இவள் என் பிரிய சகி அல்லவா? என் அன்புக்கு உரிய இல்லாள் அல்லவா? அவளைத் தோற்கடித்துவிட்டு, அந்த வெற்றியை எங்கே, எவரிடம் பகிர்ந்துகொண்டு கொண்டாடுவதாம்? தீராத பகையாளியைத் தோற்கடிக்கிற புத்தியுடன் அல்லவா இந்தப் போட்டியில் ஈடுபட்டுக்கொண்டு இருக்கிறேன்?' என்று நினைத்த ஸ்ரீராமர், அப்படியே தண்ணீருக்குள் மூழ்கினார்; அங்கேயே அப்படியே அமர்ந்து கொண்டார்.

அதையடுத்து, சீதாதேவி வேகமாக நீந்திக் கரையை அடைந்தாள்; வெற்றியும் பெற்றாள். அதுவரை நடுவராக இருந்த ஸ்ரீலட்சுமணர், தடாலென்று கட்சி மாறி, அண்ணியாருடன் இணைந்து, 'என்ன அண்ணா! அடடா! இப்படி அநியாயமா தோத்துப் போயிட்டீங்களே' என்று ஸ்ரீராமரைக் கேலி செய்தார். சீதையும் ஸ்ரீராமரை வெகுவாகக் கேலி செய்தாள்.

அசோகவனத்தில் சிறை இருந்தபோது, ஸ்ரீராமரை நினைத்தபடியே கிடந்தபோது, அங்கே ஸ்ரீஅனுமன் வர... அவனிடம் இந்தச் சம்பவங்களையெல்லாம் எடுத்துச் சொல்லி, 'ஹூம்... அவரும் நானும் எப்படியெல்லாம் சந்தோஷமும் குதூகலமுமாக வாழ்ந்தோம், தெரியுமா?' என்றபடி ஏக்கப் பெருமூச்சு விட்டாளாம்!

இதைத்தான், 'பத்தினிக்குத் தோற்பான் பரம ரசிகன்' என்று சொல்லி வைத்தனர் நம் முன்னோர். 'மனைவியைத் தோற்கடித்துவிட்டு வெற்றி பெற்ற பூரிப்பை எவரிடம் சொல்லிப் பெருமைப்பட முடியும்? அவளிடம் தோற்றுப் போனால், அந்தத் தோல்வியைக்கூட அவளிடம் பெருமைபடப் பேசி மகிழலாம்! இன்னும் சொல்லப் போனால், மனைவியிடம் தோற்றுப் போனால், வாழ்வில் ஜெயிக்கலாம்! ஆக, பெற்றோர்களுக்குக் கட்டுப்படுவதை ஸ்ரீகண்ணனும், மனைவிக்கு விட்டுக்கொடுப்பதை ஸ்ரீராமபிரானும் நமக்கு மிகத் தெளிவாக உணர்த்தியிருக்கிறார்கள். உணர்ந்து, தெளிந்து, செயல்படுபவர்கள் பாக்கியவான்கள்!

இந்த அருங்குணங்களால் திளைத்த ஸ்ரீஆண்டாள், 'கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா' என்று உருகிப் பாடுகிறாள். சீதாபிராட்டியிடம் 'மாயாசிரஸ்' கொண்டு வந்து காட்டுகிறான் ராவணன். 'இதோ, உன் கணவனின் தலை. அவன் இறந்துவிட்டான்' என்று மாயத் தோற்றத்தை, கொய்த தலையைக் கையில் வைத்துக் காட்டுகிறான். 'ஸ்ரீராமர் உயிருடன் இருக்கிறார்' எனும் தகவல் ஏற்கெனவே தெரிந்துவிட்டது சீதாவுக்கு! எனவே, அவள் கலகலவெனச் சிரித்துக்கொண்டே, 'அவர் சாகவில்லை' என்றாள். 'எப்படிச் சொல்கிறாய்?' என்று ராவணன் கேட்டான். அதற்கு அவள், "எப்போது நான் உயிருடன் இருக்கிறேனோ, அப்போது அவரும் உயிருடன் இருக்கிறார் என்றுதான் அர்த்தம். இப்போது, அவர் உயிருடன் இருக்கிறார். ஒருவேளை நீ சொல்வது போல், அவர் உயிருடன் இல்லை யெனில், இந்நேரம் நானும் உயிருடன் இருந்திருக்க மாட்டேன்!" என்றாள்.

'நீயின்றி நானில்லை; 'நானின்றி அவனில்லை!' என்பார்கள். பரஸ்பரம் இந்த முக்கியத்துவத்தையும் பேரன்பையும் உணர்ந்துவிட்டால், அந்தத் தம்பதியை எவராலும் எப்போதும் எதுவும் செய்துவிட முடியாது!

நம்மிடம் உள்ள குணங்களில் ஏதேனும் ஒன்று நம்மைப் போலவே வேறொருவருக்கும் இருந்தால், சட்டென்று அவர்கள் மீது சிநேகிதம், பிரியம்,

வாஞ்சை... நமக்கு வரும் அல்லவா?! பகவானும் அப்படித்தான்... அவனுடைய குணங்கள் நம்முடைய குணங்களாக இருந்துவிட்டால், இறைவன் நமக்கு சிநேகிதனாக, பிரியம் உள்ளவனாக, வாஞ்சை உள்ளவனாக இருப்பான்!

▶ கண்ணன் நாமம் சொல்லும் கதைகள்!

வேளுக்குடி கிருஷ்ணன் ▶






**ப**கவான் ஸ்ரீகிருஷ்ணரின் லீலைகளையும் அவருடைய சரிதத்தையும் கேட்கக் கேட்க, ஆனந்தத்தின் எல்லையானது அதிகரித்துக்கொண்டே இருக்கும். நாம் வேலை செய்வதற்கும், தூங்குவதற்கும், பேசிக்கொள்வதற்கும் கால அவகாசங்கள் இருக்கின்றன. ஆனால், பகவத் விஷயங்களை அறிந்து கொள்வதற்குக் கால நேரம் என்பதே கிடையாது. ஏனெனில், காலத்துக்கும் வரையறைகளுக்கும் அப்பாற்பட்டவன் ஆண்டவன்!

ஸ்ரீகிருஷ்ண விளையாட்டுக்களை நேரங்காலம் பார்க்காமல் கேட்டுக் கொண்டே இருக்கலாம். அவனுடைய குறும்புகளை நாள் முழுக்க, வாரம் முழுக்க, ஏன்... இந்த ஜென்மம் முழுக்கக் கேட்டு ரசித்துக்கொண்டே இருக்கலாம். பகவானின் திவ்விய நாமங்களையும் அவனுடைய லீலா விநோதங்களையும் எவரொருவர் அறிந்து, உணர்ந்து, தெளிகிறாரோ... அவருக்கு அடுத்த பிறவியென்கிற ஒன்று இல்லை என்கிறது கீதை. ஆகவே, இருக்கின்ற இந்த ஜென்மத்தில், ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் அத்தனை விளையாட்டுக்களையும் அறிந்து உணர்ந்துகொள்வதே உத்தமம்!

நம் பரத கண்டத்தில் பாய்ந்தோடுகிற நதிகள் எல்லாமே புனித நதிகள்தான்; புண்ணிய நதிகள்தான்! ஆனால், எந்த நதிக்கும் இல்லாததொரு பெருமை, யமுனை நதிக்கு உண்டு. பாய்ந்தோடுகிற கங்கையையும், துங்கபத்ராவையும் பார்த்திருக்கிறீர்களா? அவை வெள்ளை வெளேரென்று, பளீரென ஓடிக் கொண்டிருக்கும். ஆனால், யமுனை நதி கன்னங்கரேலென்று, கறுப்பு நிறத்தில் ஓடிக்கொண்டிருக்குமாம்!

ஏன் இப்படி?

இந்த நதியிலும் கரையிலும் இருந்தபடிதானே, அத்தனை லீலைகளையும் செய்து, அனைவரையும் குதூகலப்படுத்தி னான் ஸ்ரீகண்ணபிரான்! அவனையே சதாசர்வகாலமும் பார்த்துப் பார்த்து, அவனுடைய கரிய நிறத்தையே உள்வாங்கிக் கொண்டு தானும் கறுப்பாகக் காட்சி தருகிற தாம் யமுனை நதி! ஸ்ரீகிருஷ்ண பகவானின் நிறத்தைக் கொண்டிருக்கிற நதி என்பதால், யமுனைக்குத் தனிச் சிறப்பு உண்டு.



அதுமட்டுமா? ஸ்ரீகண்ணன், இந்த யமுனை நதி நீரைக் கைகளால் அள்ளி அள்ளிப் பருகியிருக்கிறான். ஆனந்தமாகக் கைகளில் ஏந்தி, கோபியர் முகத்தில் தெளித்து விளையாடியிருக்கிறான். முக்கியமாக, வாய் கொப்பளித்திருக்கிறான். வேறு எந்த நதிக்கும் இல்லாத பெருமை இது என்று போற்றுகின்றனர், வைணவப் பெரியோர்!

இங்கே... யமுனையில் கோபியருடன் ராசக்கிரீடையில் இருந்தபோது, சட்டென்று சுதாரித்தான் ஸ்ரீகண்ணன். 'அடடா... இன்னும் கொஞ்ச நேரம் இங்கே இருந்தால், ஆனந்தத்தில் மூச்சடைத்துப் போனாலும் போவார்கள், கோபியர்கள்!' என யோசித்தவன், சட்டென்று மாயமானான். கோபியர் அனைவரும் சுற்றிலும் தேடினார்கள்; தண்ணீருக்குள் துழாவினார்கள்; இரண்டு கரைகளின் பக்கமும் பார்வையை ஓடவிட்டார்கள். கரைக்கு வந்து தேடினார்கள். காலடித் தடங்களைப் பார்த்துப் பரவசப் பட்டார்கள். ஆற்றங்கரை மணலில் இரண்டு ஜோடி திருவடிகளை, அதாவது நான்கு பாதங்களின் சுவடுகளைக் கண்டனர். 'ஓஹோ... இந்தக் கிருஷ்ணன் நம்மையெல்லாம் விட்டுவிட்டு, நம் கூட்டத்தில் இருந்து ஒருத்தியை மட்டும் அழைத்துக்கொண்டு போயிருக்கிறான்' என உணர்ந்தனர். முகம் இறுகி, 'அவள் யாராக இருக்கும்' என யோசித்து, அவள் மீது பொறாமைப்பட்டனர்.

அங்கே, ஸ்ரீகிருஷ்ணருடன் சென்று கொண்டிருந்தவளுக்கோ தலை- கால் புரியாத அளவுக்குப் பெருமிதம். 'ஆஹா... நாம் அல்லவோ பாக்கியசாலி! இவ்வளவு கோபியர்களில், என்னை மட்டும்தானே அழைத்துச் செல்கிறான்?! என் அழகில் அவன் மொத்தமாகத் தன்னை இழந்து விட்டான்' என்று யோசித்தாள். அப்படி யோசிக்கிறபோதே, கர்வம் லேசாகத் தலை தூக்கியது.

கோபியர் கூட்டம், அந்தக் காலடிச் சுவடுகளைப் பார்த்துக்கொண்டே பின்தொடர்ந்தது. சட்டென்று ஓரிடத்தில் இருந்து, ஒரு ஜோடி பாதச் சுவடுகள் மட்டுமே கண்ணில் தென்பட்டது. 'இன்னொரு ஜோடி பாதச் சுவட்டினைக் காணோமே' என்று வியந்தனர் கோபியர்கள். 'ஒரு ஜோடி பாதச் சுவட்டையும் காணோம்; தெரிகிற பாதச் சுவடுகளும், மிகவும் அழுத்தமாகத் தென்படுகிறதே!' என்று குழம்பினார்கள்.

அங்கே, ஸ்ரீகண்ணனுடன் சென்று கொண்டிருந்தவள், 'கிருஷ்ணா, இதற்கு மேல் என்னால் ஒரு அடிகூட எடுத்து வைக்க முடியாது. என்னைத் தூக்கிக் கொள்கிறாயா?' என்று கெஞ்சினாள். 'அவ்வளவுதானே... இதென்ன பிரமாதம்!' என்று அவளைத் தோளில் தூக்கி வைத்துக் கொண்டு நடந்தான் ஸ்ரீகிருஷ்ணன். அப்படித் தூக்கிக் கொண்டதால், பாரம் அழுத்த, திருப்பாதச் சுவடுகளும் அழுத்தமாகவே மணலில் பதிந்தன.

இவற்றையெல்லாம் யூகிக்காமலா இருப்பார்கள் கோபியர்கள்? 'பாருங்களடி... அவளுக்குக் கிடைத்த பாக்கியத்தை! அந்தக் கண்ணன், அவளைத் தூக்கிக்கொண்டு செல்கிறான்போல...' என்று தங்களுக்குள் ஏக்கமும் பொருமலுமாக பேசிக் கொண்டனர்.



ஸ்ரீகண்ணனின் தோளில் ஒய்யாரமாக அமர்ந்தபடி வந்தவள், மீண்டும் ஒரு கோரிக்கையை வைத்தாள். 'கண்ணா, உன்னுடன் வரும்போது அலங்கோலமாக வந்தால், நன்றாக இருக்குமா? என் அலங்காரமெல்லாம் கலைந்துவிட்டது. எனவே, அதோ... அந்த மரத்தில் இருந்து பூக்களைக் கொஞ்சம் பறித்துத் தாயேன்' என்றாள். உடனே அவளை இறக்கிவிட்டு, பூக்களைப் பறிப்பதற்காக மரத்தில் ஏறினான் ஸ்ரீகண்ணன். அவளின் சந்தோஷமும் பெருமிதமும் கூடிக்கொண்டே போனது. 'அத்தனை பேரில், என்னைத்தான் தனியே அழைத்துக்கொண்டு வந்திருக்கிறான். நடக்க முடியவில்லையே என்று கலங்கியதும், பதறிப்போய் தோளில் என்னைச் சுமந்து வந்திருக்கிறான். அலங்கரிக்க பூக்கள் வேண்டும் எனக் கேட்டதுதான் தாமதம், இதோ... தடதடவென மரத்தில் ஏறிவிட்டான். இவ்வளவும் எனக்காகவே! என் மீது உனக்கு அவ்வளவு ஆசையா கிருஷ்ணா?!' என்று பூரித்தாள்; அந்தப் பூரிப்பு அதிகரிக்க, கர்வமும் அதிகரித்தது.

'இறைவன் நம்மை நோக்கி அடியெடுத்து வைக்கிறான் என்றால், அதற்காக நாம் கர்வப்படக் கூடாது. அப்படிக் கர்வப்பட்டால், அவன் வந்த வழியே சென்றுவிடுவான். கர்வம் இருக்கிற இடத்தில், கடவுள் ஒருபோதும் இருக்கமாட்டான்' என்பதை அந்தப் பெண் ஏனோ அறிந்திருக்கவில்லை.

சிறிது நேரத்திலேயே கை நிறையப் பூக்களுடன் வந்தவன், அவளிடம் நீட்டினான். அவள் சட்டென்று முகம் திருப்பிக் கொண்டாள்.

அட... எதற்காகக் கோபம் கொள்கிறாள் இவள்? அது கோபம் இல்லை; வாஞ்சை. 'பூக்களைக் கையில் கொடுப்பதைவிட, தலையில் சூட்டிவிடேன்' என்கிற ஆசை அவளுக்கு! 'சரி, திரும்பு. தலையில் சூட்டிவிடுகிறேன்' என்றான் ஸ்ரீகிருஷ்ணன். அவள் வெட்கப்பட்டாள்; முகம் சிவந்தாள்; கண்களை மூடியபடி, திரும்பினாள். சில விநாடிகளுக்குப் பிறகு திரும்பிப் பார்த்தாள். அங்கே, கண்ணனையும் காணோம்; தலையில் பூச்சூடவும் இல்லை.

அதுதான் மாயக்கண்ணனின் லீலை!






**து**வாதசி அன்று, காலை எட்டரை- ஒன்பது மணிக்கெல்லாம் சாப்பிட்டு விட வேண்டும் என்பார்கள். இதைக் கேட்ட அன்பர் ஒருவர், 'அட... நான் தினமுமே எட்டரை- ஒன்பதுக்கெல்லாம் கரெக்டா சாப்பிடறவன்தான்!' என்றார்.

அதாவது, முந்தைய நாளான ஏகாதசி அன்று பச்சைத் தண்ணீர் கூடப் பல்லில் படாமல் விரதம் மேற்கொண்ட அன்பர்கள், மறுநாள் துவாதசி அன்று சீக்கிரம் சாப்பிடவேண்டும் என்பதற்காகச் சொல்லப்பட்ட விஷயம் இது என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும்.

அன்பர்கள் பலர், 'ஏகாதசி அன்று விரதம். ஆனால், கோயிலுக்குச் சென்றபோது, அங்கே துளசி தீர்த்தமும் பெருமாளுக்கு நைவேத்தியம் செய்த வெண்பொங்கலும் தந்தார்கள். விரதம் என்று சொல்லி, வாங்க மறுத்துவிட்டேன்' என்பார்கள். இதற்கு அவசியமே இல்லை. ஏகாதசி விரதம் இருக்கிற அன்பர்கள், கோயிலுக்குச் சென்று பகவானைத் தரிசிக்கிற தருணத்தில், அங்கே தருகிற தீர்த்தத்தை வேண்டாம் என்று சொல்வதும், பிரசாதத்தைப் புறக்கணிப்பதும் தவறு. 'விரத நேரத்தில் வயிற்றுக்கு இப்படி ஏதேனும் போட்டுக்கொண்டால் தேவலை' என்று நாம் நினைப்பதில்லை. மாறாக, பகவானின் பிரசாதம் கிடைக்கிறபோது, அதை மறுப்பது சரியல்ல! ஆகவே, ஏகாதசி விரதம் இருந்தாலும், தெய்வப் பிரசாதத்தை உட்கொள்ளலாம். மற்றபடி கோயிலில் வெண்பொங்கல், சர்க்கரைப் பொங்கல், தயிர்சாதம், புளியோதரை எனப் பிரசாதங்கள் கிடைக்கும் என்று காலையில் இருந்து மாலை வரைக்கும் கோயிலே கதியென்று கிடப்பதுதான் தவறு!

பகவானுக்கும் நமக்குமான உறவில், நாம் எப்போதும்போல இருப்பதே சிறப்பு. சதாசர்வ காலமும அவனை நினைத்தபடி, அவனுடைய திவ்விய நாமங்களைச் சொல்லிக் கொண்டிருப்பதே பெருமை. அவன் நமக்கு அருளுவதற்காக, என்ன வேண்டுமானாலும் செய்வான்; எப்படி வேண்டுமானாலும் நெருங்கி வருவான். நாம் நாமாகவே இருந்தால், பகவான் நம்மைத் தேடியும் நெருங்கியும் வந்தருள்வான். ஏனெனில், உலகத்தில் உள்ள பொருட்கள் யாவற்றுக்கும் வாசஸ்தலமாக இருப்பவன், பகவான்.

*'அர்ஜுனா, இந்த உலகத்தின் பொருட்கள் அனைத்தும் என்னுள் அடங்கியிருக்கின்றன' என்கிறார் பகவான் ஸ்ரீகிருஷ்ணர். அதேபோல், ஒருகட்டத்தில் சிலிர்ப்பும் வியப்புமாக, 'கிருஷ்ணா, உலக உயிர்கள் அனைத்தையும் உன்னுள், உனது திருமேனியில் பார்க்கிறேன்' எனப் பெருமிதத்துடன் சொல்கிறான் அர்ஜுனன்.*

*அது எப்படி அர்ஜுனனுக்குச் சாத்தியமாயிற்று?*

*அவனுக்கு எங்கே சாத்தியமானது? பகவான் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் திருவுளப்படி என்ன நடக்க வேண்டுமோ அதுவே நடந்தது. தன்னுடைய விஸ்வரூபத்தை அர்ஜுனனுக்குக் காட்டியருளினார் பகவான் ஸ்ரீகிருஷ்ணர். ஸ்ரீநரசிம்ம மூர்த்தமாக வந்தபோதும் உக்கிரத்தைக் காட்டினாரே தவிர, விஸ்வரூபம் காட்டவில்லை. கிருஷ்ணாவதாரத்தில்தான் இந்த அளவுக்கு விஸ்வரூபம் காட்டி அருளினார் பகவான். எனவே, 'பூதாவாஸஹ' எனும் திருநாமத்தைப் பெற்றார்.*

*'பூத' என்றால் இருப்பு என்று அர்த்தம். 'வாஸஹ' என்றால், அந்த இருப்பு அனைத்துமே அதனுள் அடங்கியிருக்கிறது என்று பொருள். இந்தத் திருநாமத்துக்குப் பெருமை உண்டு. எனினும், தன் வயதையத்த குழந்தைகளுக்கு, அதாவது தன் நண்பர்களுக்கு பிரகலாதன் சொன்ன திருநாமம் என்ன தெரியுமா? 'நாராயணாய!'*

*பகவானுக்கு ஆயிரம் நாமங்கள் உள்ளன. அவற்றுள் மிக உன்னதமானதும் உயிர்ப்பானதுமான திருநாமம் இதுதான். பிரகலாதன் இந்த ஒரே ஒரு திருநாமத்தைதான் நண்பர்களிடம் வலியுறுத்தினான். ஆனால், இந்த ஒற்றைத் திருநாமத்தை, ஆயிரம் திருநாமங்கள் என வர்ணிக்கிறார்கள் ஆன்றோர்கள்.*

*'நாராயணா' எனும் திருநாமம், ஆயிரம் திருநாமங்களுக்குச் சமம் என்று சிலாகிக்கிறார் பராசர பட்டர். 'நார' என்றால், ஜீவாத்மாவை விட்டொழிந்தவை என்று அர்த்தம். அயனம் என்றால், ஆஸ்ரயம். அதாவது, பகவானே கதி; அவனே நல்வழி; அவனுடைய இருப்பிடமே புகலிடம் என்று அர்த்தம். ஆகவே, பகவான் ஸ்ரீமந் நாராயணனின் திவ்விய நாமங்களைச் சொல்வது உத்தமம். குறிப்பாக, ஓம் நமோ நாராயணாய எனும் திருநாமத்தைச் சொல்வது அதிகப் பலன்களைத் தரக்கூடியது!*

*ஸ்ரீகிருஷ்ணருக்கு உள்ள மற்றொரு சிறப்பு என்ன தெரியுமா? அவனே அனைத்துக்கும் ஆதாரம். இதனால்தான் அர்ஜுனன், 'ஸ்ரீகிருஷ்ணா! நீ உள்ளேயும் நிறைந்திருக்கிறாய்; வெளியேயும் நிறைந்திருக்கிறாய்!' என வியப்புடன் சொல்கிறான். அவன் எப்படியும் இருப்பான்; எங்கும் நிறைந்திருப்பான். ஏனெனில், அவன் பிரம்மம்!*

*பகிர் வ்யாபதி, அந்தர் வ்யாபதி என உண்டு. பகிர் வ்யாபதி என்றால், வெளியில் இருந்து தாங்குபவன் என்று அர்த்தம். அந்தர் வ்யாபதி என்றால், நம் ஜீவாத்மாவுக்குள் வியாபித்தபடி தாங்குபவன்; காத்தருள்பவன் என்று பொருள்.*

*எதற்காக உள்ளேயும் வெளியேயும் தாங்குபவனாக இருக்கிறான் ஸ்ரீகிருஷ்ணன்?*

*ஜீவாத்மாவின் ஆசைகளை உடல் செயல்படுத்து கிறது, அல்லவா? அதேபோல், பகவான் வெளியில் இருந்தும் உள்ளிருந்தும் தாங்கி, தான் நினைத்ததை யெல்லாம் சாதித்துக் கொள்கிறானாம்! இதனால் அவனுக்கு 'பூதாவாஸஹ' எனும் திருநாமம் உண்டானது.*

*அவதாரங்களும் அவனுடைய திவ்விய நாமங்களும் அலாதியானவை. அதில் கிருஷ்ணா*

வதாரத்தை விவரித்துக்கொண்டே இருக்கலாம்; அவன் அர்ஜுனனுக்கு அருளிய கீதையின் அர்த்தத்தை உணர்ந்துவிட்டால், அந்தச் சிலிர்ப்பில் இருந்து மீள்வது என்பது எளிதல்ல! அவனுடைய திவ்விய நாமத்தில், 'வாசுதேவஹ' என்பதும் முக்கியமானது. ஏற்கெனவே இந்த நாமத்தைப் பார்த்தோம். ஆனால், அப்போது வசுவின் பிள்ளை வாசுதேவன் என்று பார்த்தது நினைவிருக்கிறதா? இப்போதும் அதே 'வாசுதேவஹ' எனும் திருநாமம் வந்துள்ளது. ஆனால், இதற்கு என்ன அர்த்தம் தெரியுமா? 'ஓம் நமோ பகவதே வாசுதேவாய...' என்கிற மந்திரத்தை, இவ்வுலகில் ப்ரவர்த்தனம் செய்தவன் என்று அர்த்தம்.

பகவானின் பெயருக்கு முன்னே 'ஓம்' என்பதையும், பின்னால் 'நமஹ' என்பதையும் சேர்த்துக் கொண்டால், அதுவே மந்திரமாகிவிடுகிறது. ஓம் நமோ நாராயணாய நமஹ!

*'நாராயணாய வித்மஹே*
*வாசுதேவாய தீமஹி*
*தந்நோ விஷ்ணு ப்ரசோதயாத்'*

எனும் மந்திரத்தில், நாராயண நாமத்துக்கு அதிக மகத்துவம் உண்டு. அடுத்து வருகிற 'வாசுதேவாய' என்கிற நாமமும் வலிமையானது.

'ஓம்' என்றால், உனக்கு நான் அடிமை; நமஹ என்றால், எனக்கு நான் அடிமை அல்லேன் என்று அர்த்தம்! பகவானின் திருநாமத்துக்கும், அந்தத் திருநாமத்துடன் ஓம் மற்றும் நமஹ சேர்த்துச் சொல்லப்படுகிற மந்திரத்துக்கும் அளப்பரிய மகிமைகள் உண்டு. தன்னை எவன் நினைத்துச் சொல்கிறானோ, அவனை அந்த மந்திர உச்சாடனம் கட்டிக் காபந்து செய்யும் என்பதே இதன் தாத்பரியம்! ஆகவே, பகவானின் திருநாமத்தையும் அவனுடைய திவ்விய மந்திரத்தையும் சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் ஜபியுங்கள். அர்ஜுனனுக்கு அருளிய ஸ்ரீகிருஷ்ணர், உங்களுக்கும் அருளிச் செய்வார்!




'**நீ**ங்களே கதி என்று ஒருவரிடம் சொல்வதும், அவருக்கு அடியவராக இருப்பதும் தவறு. அதேபோல், 'நானே பெரியவன்' என்று சொல்வது அகங்காரம்; ஆகவே, அதுவும் தவறு'' என்று நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம், அல்லவா? ஆனால், இறைவனுக்கு இதெல்லாம் பொருந்தாது.

தன்னை 'அடியேன்' என்று சொல்லிக்கொண்டே அனைவரிடமும் பழகி, எல்லோரையும் மதித்து வாழ்ந்தவர் யார் தெரியுமா? ஸ்ரீராமச்சந்திர பிரபுதான் அவர்.

தன்னை அவதாரமாக அவர் ஒருபோதும் காட்டிக் கொள்ளவில்லை. எப்போதும், எங்கும் தன்னை 'அடியேன்' என்றுதான் சொல்லிக் கொண்டார். விஸ்வாமித்திரரிடம் 'அடியேன்' என்றுதான் பணிந்தார். பரத்வாஜ முனிவரைப் பார்த்ததும், 'அடியேன்' என்று சொல்லித்தான் நமஸ்கரித்தார். வசிஷ்டரைச் சந்தித்ததும், 'அடியேன்' எனப் பரவசப்பட்டு வணங்கினார்.

அவ்வளவு ஏன்..? சமுத்திரராஜனிடம்கூட அப்படி 'அடியேன்' என்று சொல்லித்தானே வழிவிடும்படி மூன்று நாட்கள் வேண்டினார். ஆனாலும் சமுத்திரராஜன், கடலைக் கடப்பதற்கு வழிவிடவில்லை. பிறகுதான் ஸ்ரீராமன், 'என்னுடைய வில்லையும் அம்பையும் எடுத்து வாருங்கள். இந்தக் கடலை அப்படியே வற்றச் செய்கிறேன். அப்படி வற்றினால்தான், வானரங்கள் கடலைக் கடக்க, வழி கிடைக்கும்' என்றாரே, பார்க்கலாம்!

ஆக... எவருக்கு, எப்போது, எதனால் அடிமையாக, தாசனாக, அடியவனாக இருக்கவேண்டுமோ, அப்போதெல்லாம் அப்படி இருப்பதே சிறப்பு என்பதை வாழ்ந்து காட்டிய அவதார புருஷன் ஸ்ரீராமபிரான்.

சரி... 'நானே பெரியவன்' என்று பறைசாற்றிய பகவான் யார் தெரியுமா? அவர்... ஸ்ரீகிருஷ்ணரைத் தவிர, வேறு யாராக இருக்க முடியும்?

கீதையில், பல இடங்களில், 'நானே பெரியவன்' என்று அர்ஜுனனுக்கு அருளியுள்ளார் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா. எதற்கெடுத்தாலும், எங்கே தீங்கு நேர்ந்தாலும், 'சங்கை ஊதிவிடுவேன்; சக்கரத்தை ஏவி விடுவேன்' என்பது போல், தயாராக, துடிப்புடனும் விழிப்புடனும் அஞ்சாநெஞ்சனாக, 'நானே பெரியவன்' என மார்தட்டிச் சொன்னவர், ஸ்ரீகிருஷ்ணன்.

அதனால்தான் அவருக்கு 'சர்வாசு நிலையஹ' எனும் திருநாமம் உண்டானது. 'இந்த உலக உயிர்கள் அனைத்துக்கும் இருப்பிடமாகத் திகழ்பவன்' என்று இதற்குப் பொருள். உலகத்து மனிதர்கள் அனைவருக்கும் புகலிடமாக, அடைக்கலம் தருபவனாக இருப்பவன்தானே, மிகப் பெரியவன்! அப்படியெனில், பகவான் சொன்னதில் தவறென்ன இருக்கிறது?

இப்படித்தான்... கீதையின் 16-வது அத்தியாயத்தில், அசுரர்களையும் தேவர்களையும் பிரித்துப் பகுத்து எடுத்துரைக்கிறார் அர்ஜுனனிடம்! இதையெல்லாம் கேட்ட அர்ஜுனனுக்கு சின்னதாக ஒரு பயம், பதற்றம், குழப்பம்! 'அசுரர்களையும் தேவர்களையும் பற்றிச் சொல்கிறானே கண்ணன்... நம்மை இவன் அசுரனாக நினைக்கிறானா, அல்லது தேவர்களில் ஒருவனாக மதிக்கிறானா?' என்று தவித்தான்; மருகினான்.

கண்ணனிடம் மெள்ள, 'அசுரர்கள் என்பவர் யார்? தேவர்கள் என்பவர் யார்? ஒற்றை வரியில் தெளிவாகச் சொல்லேன், கண்ணா!' என்று கேட்டான்.

உடனே கண்ணபிரான், 'சாஸ்திரங்களையும் அதன் விதிமுறைகளையும் யாரெல்லாம் அத்துமீறுகிறார்களோ அவர்கள் அசுரர்கள். அந்த சாஸ்திரத்தையும் அதன் விதிமுறைகளையும் போற்றி, அதன்படி யாரெல்லாம் வாழ்கிறார்களோ, அவர்கள் தேவர்கள்!' என்றார்.

நமக்குத் தருகிறபோது மட்டும் **அவ்வளவு சீக்கிரம் நிறைவடைய மாட்டான் கண்ணன்.** அதனால் அவனுக்கு 'அனலஹா' என்று பெயர்!



உடனே அர்ஜுனன், 'சரி கண்ணா, நான் யார்?'

என்று கேட்டான். 'இதிலென்ன சந்தேகம்? உன்னிடம் எத்தனை முறை 'நான் பெரியவன்... நான் பெரியவன்...'

என்று என்னைச் சொல்லிக்கொண்டே இருந்தேன். அதையெல்லாம் பொருட்படுத்தாமல், என் நல்லுரை களைக் கேட்டுக்கொண்டிருந்த நீ, தேவர்களில் ஒருவன் தான்!' என்று சொல்லிப் பூரித்தார் கண்ணபிரான். இதில் வியந்தும் நெகிழ்ந்தும் போனான் அர்ஜுனன்.

ஒருநாள் மாலையில், தன் கூந்தலைத் தோகைபோல் விரித்து, நெய் தடவிக்கொண்டிருந்தாளாம் திரௌபதி. அவளின் அந்தத் தலைவிரிகோலத்தைக் காணச் சகிக்காத ஸ்ரீகிருஷ்ணன், 'ம்... சீக்கிரம், சீக்கிரம்' என்று விரட்டி, அவளை உடனே தலைவாரிக் கொள்ளச் செய்தானாம். நல்லதொரு பொழுதில், அவள் சிறிது நேரத்துக்குத் தன் கூந்தலை முடிந்துகொள்ளாமல் இருந்ததையே காணப் பிடிக்காத கருணையாளனான கண்ணபிரான், 'துரியோதன- துச்சாதன ரத்தத்தைத் தடவிக் கொள்ளும் வரை, என் கூந்தலை முடிய மாட்டேன்' என்று அவள் சபதமிட்டபோது, பேசாமல் இருப்பானா, என்ன? அதைத் தாங்கமுடியாதவனாக, வெகுண்டு எழுந்து அவன் நிகழ்த்தியதே மகாபாரத யுத்தம்!

'அடியேன்' என்று ஸ்ரீராமனா கவும், 'நான் பெரியவன்' என்று ஸ்ரீகிருஷ்ணனாகவும் அவதரித்து, உலகுக்கு எப்படியெல்லாம் உணர்த்தியிருக்கிறார் பாருங்கள், பகவான்! 'அடியேன்' எனப் பணிந்தது ஸ்ரீராமரின் காலம். 'சக்கரத்தை எடுப்பேன்' என வியூகத்துக்குத் தயாராக இருந்தது ஸ்ரீகிருஷ்ணனின் காலம். துவாபர யுகத்தின் மாறுபாடு அது!

*சரி... 'நான் பெரியவன்' என மார்தட்டிச் சொன்னாலும், கண்ணன் அப்படியே இறுமாப்பும் கர்வமுமாகவே இருந்துவிட்டானா என்ன?*

*தன் அத்தனை பெருமை களையும் தூக்கிப் போட்டுவிட்டு, தன் அத்தனை சக்திகளையும் உள்ளுக்குள் வைத்துக்கொண்டு, அர்ஜுனனுக்கு சாரதியாக, அவனுடைய கால்கள் தன் தோளில் படும்படி தேரோட்டி னானே, அவனை விடவா 'அடியேன்' என்று சொல்வதற்கு ஒருவர் வேண்டும்?! எதற்கும் கலங்காத அந்த மாயக் கண்ணனும் ஒரே ஒரு விஷயத்துக்காகத் தவித்து மருகினானாம். எப்போது தெரியுமா?*

*'சபையில் மானபங்கப்படுத்திய வேளையில், திரௌபதிக்குத் துணையாக அருகில் இல்லாது போய் விட்டேனே...' என அர்ஜுனனிடம் வருந்தினானாம்.*

*அதனால் என்ன... திரௌபதி கண்ணீரும் கதறலுமாக 'கோவிந்தா' எனக் குரல் கொடுத்ததும், உலகின் எந்த மூலையில் இருந்தெல்லாமோ சட்டென்று சரம்சரமாக, புடவை புடவையாக அங்கே கொண்டுவந்து, அவளின் மானத்தைக் காத்தருளிவிட்டானே கண்ணன்? அப்படியிருக்க... அவன் எதற்காகக் கவலைப்படவேண்டும்? அதுதான் ஸ்ரீகிருஷ்ணனின் மகோன்னதம். அருளை அள்ளிக் கொடுப்பதில் அகமகிழ்பவன் அவன். ஒரு துளசி, ஒரு பூ, ஒரு பழம்... ஸ்ரீகண்ணனைத் திருப்திப்படுத்த, அவனது பேரருளைப் பெற, இவை மட்டுமே போதும். நமக்கு அருள்மழை பொழிந்துவிடுவான், அந்த அழகுக் கண்ணன். ஆனால், ஒரேயரு விஷயத்தில் மட்டும் அவனுக்குத் திருப்தியே வராதாம்! அது என்ன விஷயம்?*

*அதாவது, நாம் என்ன கொடுத்தாலும், அதில் நிறைவு பெற்றுவிடுகிற ஸ்ரீகிருஷ்ணன், நமக்குத் தருகிறபோது மட்டும் அவ்வளவு சீக்கிரத்தில் நிறைவடையவே மாட்டான். உள்ளன்புடன் அவனைச் சரணடைந்து விட்டால், அவர்களுக்கு 'இன்னும் கொடுப்போம், இன்னும் கொடுப்போம்' என்று கொடுத்துக்கொண்டே இருக்கிற தயாளன் அவன்!*

*இதனால்தான், அவனை 'அனலஹா' எனும் திருநாமத்தைச் சொல்லிப் போற்றச் சொல்கின்றனர், பெரியோர்.*

*அனல் என்றால் அக்னி. அக்னிக்கு நிகரானவன் ஸ்ரீகண்ண பரமாத்மா! அதாவது, எரிகின்ற நெருப்பில் எதைப் போட்டாலும், 'ஹா' என வாய்பிளந்து, அனைத்தையும் ஏற்றுக் கொள்ளும்; எண்ணெய், வஸ்திரம், நெய் என எதைச் சேர்த்தாலும் இன்னும் இன்னும் கனன்று எரியும். 'பகவான் ஸ்ரீகிருஷ்ணர், பக்தர்களுக்கு அருள்கிற விஷயத்தில், போதும் என்கிற மனம் இல்லாத அக்னியைப் போல் இருக்கிறார்' என்பதாலேயே இந்தத் திருநாமம்!*

*கண்ணனுக்கு தாசனாக இருந்தால், நமக்குத் தேவையானவற்றைத் தந்தருளி மகிழ்கிற, அந்த மகிழ்ச்சியில் திருப்திப்படுகிற மாணிக்கம் அவன்!*

*அவனுக்கு அடிமையாக இருங்கள்; ஆனந்தத்தில் உங்களை மூழ்கடிப்பான், அந்த மாயக்கண்ணன்!*




**கோ**யிலுக்குச் செல்கின்றீர்கள். அங்கே அந்த ஆலயம், குப்பையும் கூளமுமாகக் காட்சி தருகிறது. மதில் மற்றும் சந்நிதி விமானங்களில் சின்ன விரிசல்களும், அந்த விரிசல்களில் வேர்விட்டு வளர்கிற மரங்களும் கிளை பரப்பி நிற்கின்றன. கோயில் குளத்தின் படிக்கட்டுகளில் பாசி படர்ந்து, கற்கள் பெயர்ந்து காணப்படுகின்றன. இதையெல்லாம் பார்த்துவிட்டு, நம்மில் பலர் என்ன செய்வோம்?

கோயிலின் நிர்வாக அலுவலகத்துக்குச் சென்று, அங்கேயுள்ள அதிகாரியிடம், 'இந்தக் கோயிலுக்கு ஏதாவது செய்ய நினைக்கிறேன்' என்று சொல்லி, ஒரு ஐந்நூறோ ஆயிரமோ... நம்மால் முடிந்ததைத் தருவோம். ரசீதை வாங்கிக்கொண்டு, நன்கொடை தந்த நிறைவுடன், கிளம்புவோம். ஆனால், அந்தக் குப்பையை சட்டென்று எடுத்து அகற்ற முனைவதே இல்லை நாம்.

பிராகாரத்தில் குப்பையும் மண்ணுமாகக் கிடக்கிறதே என்று, குளத்தில் இருந்து தண்ணீரை எடுத்து வந்து பிராகாரத்தில் தெளித்துச் சுத்தப்படுத்த நினைப்பவர்களும் செயல்படுபவர்களும் மிக மிகக் குறைவு. ஆலயப் பணிக்கு நம்மால் இயன்ற தொகையைக் கொடுத்து ரசீதைப் பெற்றுக் கொள்வதும் ஒருவகைப் புண்ணியம்தான். ஆனால், நாமே நம் கைககளால் செய்யும் ஆலயப் பணிக்கு நிகரில்லை; இப்படிச் செய்வதன் மூலம் கிடைக்கிற மனநிறைவுக்கு எல்லையும் இல்லை.

ஆக, கோயிலின் உடனடித் தேவை சுத்தம், தூய்மை. அடுத்தடுத்த தேவைகள்... கோயிலின் சீரமைப்புப் பணிகள்! அதேபோல்தான் பகவானும். அதாவது, தனக்கு ஏதேனும் ஒன்றென்றால்கூடப் பொறுத்துக் கொள்வான்; தன் அடியவர்களுக்கு ஏதேனும் சங்கடம், ஆபத்து என்றால், சட்டென்று கோபம் கொள்வான், ஸ்ரீகிருஷ்ணன். 'கோவிந்தா' எனும் திருநாமத்தைச் சொன்னதும், சரசரவென புடவைகளை விட்டு, திரௌபதியின் மானம் காத்தான், கண்ண பரமாத்மா. அதனால்தான், ஸ்ரீஆண்டாள்கூட, 'கோவிந்தா என்று உச்சரித்தால், உடுத்திக் கொள்ள ஆடைகள் தருவான் அழகுக் கண்ணன்' எனப் பாடினாள்.

இத்தனைப் பெருமைகள் கிடைத்தாலும்கூட, 'இப்படிப்பட்ட நேரத்தில் அருகில் இல்லாமல் போய்விட்டேனே...' என வருந்துகிறவன் கண்ணன் என்று பார்த்தோம். அதாவது, 'காலத்தே உதவி செய்வது' என்பதைத்தான் ஸ்ரீகிருஷ்ணன் உணர்த்துகிறான்.

இறைவனிடம் நாம் என்ன கேட்கிறோம்? 'எனக்கு அதைக் கொடு; இதைக் கொடு' என்று மளிகைக் கடைப் பட்டியல் போன்று, நீளமாகக் கோரிக்கைகளை வைக்கிறோம். 'அவனுக்குச் செய்திருக்கிறாய். எனக்குச் செய்யவில்லையே..?' என்று அவனிடம் கோபித்துக்கொள்கிறோம். உங்களுக்கு ஒரு விஷயம் தெரியுமா? இதோ... இந்தப் புழுவாகவும் விலங்காகவும் படைக்காமல், செடியாகவும் மரமாகவும் உருவாக்காமல், இந்த மானிடப் பிறவியை நமக்குக் கொடுத்திருக்கிறானே, பரம்பொருள். இறைவனை வணங்குவதற்கும், அவனை நமஸ்கரித்துத் தொழுவதற்குமான இந்தத் தேகத்தைத் தந்திருக்கிறானே, அவன்! இதைவிட, வேறென்ன வேண்டும் உங்களுக்கு?!

நாம் கேட்டதை மட்டுமின்றி கேட்காததையும் கொடுத்து, வாழ வைத்துக் கொண்டிருக்கிற பெரும் வள்ளல், பகவான் ஸ்ரீகிருஷ்ணர். உண்மையில், இனி கொடுப்பதற்கு அவனிடம் ஏதும் இருக்கிறதோ இல்லையோ... தெரியாது. ஆனால், இறைவனுக்கு நாம் கொடுக்க வேண்டியதுதான் ஏராளமாக இருக்கின்றன.

இந்த உலகில், மனிதராகப் பிறந்திருக்கிற நாம் எல்லோரும் எதற்காகவேனும் அழுதுகொண்டே இருக்கிறோம். பரீட்சையில் பெயிலானால் அழுகிறோம்; நல்ல வேலை கிடைக்கவில்லை என்றால் அழுகிறோம்; வீடு- வாசல் என்று வசதியாக வாழமுடியாவிட்டாலும் கதறிக் கண்ணீர் விடுகிறோம்; 'எல்லாம் என் விதி...' என்று அழுது அரற்றுகிறோம்.

அழுதுகொண்டே பிறந்தாலும், உண்மையில் நாம் அழப் பிறந்தவர்கள் இல்லை. அப்படியெனில், நாம் அழவே தேவையில்லையா?

'ஸ்ரீகிருஷ்ண சரிதத்தைக் கேட்டு அல்லது படித்து, எவனொருவனுக்கு கண்களில் இருந்து கரகரவெனக் கண்ணீர் வழிகிறதோ, உடலின் ரோமங்கள் அனைத்தும் விதிர்த்து, ஆச்சரியத்து மயிர்க்கூச்செறிந்தபடி நிற்கின்றனவோ, சரிதத்தைக் கேட்ட தாக்கத்தால், நிற்க முடியாதபடி எவரின் உடல் துவண்டு போகிறதோ... அவனே உண்மையான பாகவதன்; அவனே, சத்தியமான அடியவன்' என்று அடியவர்களைப் போற்றுகிறார் குலசேகர ஆழ்வார். அத்தனை உணர்ச்சிகளையும் ஒருங்கே கொண்டது, ஸ்ரீகிருஷ்ண சரிதம்.

இந்த உலகையும், உலகத்து மனிதர்களையும் படைத்ததுடன் தமது கடமை முடிந்துவிட்டது என்று கருதாமல், ஆபத்பாந்தவனாக நம்மைக் காக்கிற பரம்பொருளை நினைத்து, அவனது சரிதத்தைக் கேட்டுக் கண்ணீருடன் 'பல்லாண்டு பல்லாண்டு...' என அவனை நீடுழி வாழப் பாடுவதைத் தவிர, நாம் என்ன கைம்மாறு செய்துவிடமுடியும், சொல்லுங்கள்!

நாம் கேட்டதை மட்டுமின்றி கேட்காததையும் கொடுத்து. வாழ வைத்துக் கொண்டிருக்கிற பெரும் வள்ளல். பகவான் ஸ்ரீகிருஷ்ணர்.



தனக்கொரு அபசாரம் என்றால் பொறுத்துக் கொள்கிறவன், அடியார்க்கு அபசாரம் என்றால் பொறுக்கமாட்டான் என்று சொன்னேனே... ஹிரண்ய கசிபு திடுதிப்பென்று பகவானை வெறுத்து

ஏசினானா என்ன? ஆரம்பத்தில் இருந்தே அவன் இறைவனை தூஷிக்கத்தானே செய்தான்! ஆனால், அதுவரை பொறுத்துக்கொண்டிருந்த பகவான், தன் அடியவரை அபசாரம் செய்து பேசியபோது, களங்கப்படுத்தி ஏளனம் செய்த தருணத்தில், தாங்கமுடியாமல் சட்டென்று ஆவேசமாகி, உக்கிரத்தைக்

காட்டினான் அல்லவா?!

இதனால்தான் அவனுக்கு 'அனலஹா' எனும் திருநாமம். அதேபோல், 'தர்ப்பஹா' என்றும் 'தர்ப்பதஹா' என்றும் திருநாமங்கள் உண்டு. தர்ப்பஹா என்றால்... மதம், ஆசை, கர்வம், மமதை என்று அர்த்தம். தேவதைகளின் அபிலாஷைகளை, மதத்தை, கர்வத்தை, மமதையைக் கொன்றான் இறைவன் என்பதே இந்தத் திருநாமத்தின் பொருள்!

திருமாலின் க்ஷேத்திரத்தில், திருப்பாவாடை சார்த்துதல் எனும் வைபவம் நடைபெறும். குறிப்பாக, காவிரிக்கரையில் பள்ளிகொண்டிருக்கிற அரங்கனின் ஆலயத்தில் இந்த விழா பிரமாண்டமாக நடைபெறும். ஸ்ரீரங்கம் என்றாலே பிரமாண்டம்தான்! கோயில்- பெரியகோயில்; தாயர்- பெரியபிராட்டி;

திருமஞ்சனம்- பெரிய திருமஞ்சனம்; திருப்பாவாடை- பெரிய திருப்பாவாடை... என எல்லாமே பெரிதுதான்; பிரமாண்டம்தான்!

சந்நிதிக்கு முன்னே, அன்னம் பரப்பிக் கொண்டாடுகிற அற்புத விழாவை, இந்திர வழிபாடு என்பார்கள். குழந்தைகள், திருப்பாவாடை சார்த்தி வழிபட்டபோது, ஸ்ரீகிருஷ்ணன் அவர்களிடம் 'என்ன செய்கிறீர்கள்?' என்று கேட்க... 'மழையைத் தரும் இந்திரனுக்கு விழா எடுத்து மரியாதை செய்கிறோம்' என்றார்கள். உடனே குறும்புக் கண்ணன் குழந்தைகளைப் பார்த்து, 'இந்திரனா மழையைத் தருகிறான்? கோவர்த்தன மலை அல்லவா, மழையைத் தருகிறது. அதுமட்டுமா? அந்த மலை, மழையைத் தருவதுடன், அங்கிருந்து அருவியென அதைப் பொழியச் செய்கிறது. அத்துடன், மரங்களையும் தருகிறது. பூக்களையும் காய்- கனிகளையும் வழங்குகிறது. எனவே, கோவர்த்தன மலைக்கு, பூஜை செய்யுங்கள்' என்றான் கண்ணபிரான்.

உடனே கோவர்த்தன மலைக்குப் பூஜை செய்ய ஆயத்தமானார்கள், அந்தக் குழந்தைகள். ஏன், எதற்கு என்றெல்லாம் அவர்கள் கேட்கவே இல்லை. அவர்களைப் பொறுத்தவரை, 'நம் கண்ணன் சொல்லிவிட்டான். சரியாகத்தான் இருக்கும்' என்கிற அசைக்கமுடியாத நம்பிக்கை.

இன்னொரு விஷயம்... 'கண்ணனை அன்றி நமக்கு வேறு தெய்வம் இல்லை!' என்பதில் உறுதியுடன் இருந்தனர் அவர்கள்.

அந்த உறுதியும் நம்பிக்கையும் உங்களுக்கு இருந்தால், அந்தக் கோவர்த்தன மலையை இன்னொரு முறை, உங்களுக்காகவும் தூக்கி வருவான் செல்லக்கண்ணன்!






'**த**ர்ப்பம்' என்றால் ஆசைகள், அபிலாஷைகள், கர்வம், மமதை என்று அர்த்தம். இவை அனைத்தையும் கொடுப்பவனும் இறைவன். அழிப்பவனும் அவனே!

யாதவர்களுக்கு அந்த ஆசையையும் எண்ணங்களையும் மமதையையும் கர்வத்தையும் தூண்டியவன் பகவான் ஸ்ரீகிருஷ்ணன். அதனால்தான் யதுகுலமே உருவானது. அந்தக் குலத்திலேயே தானும் பிறப்பெடுத்து, அவர்களுடன் ஒன்றிக் கிடந்தான். இதனால் யதுகுலத்தைச் சேர்ந்தவர்களுக்கு அகம்பாவமும் தலைதூக்கியது. 'போடா... அந்தக் கிருஷ்ணனே நம்முடன் இருக்கிறான்' என கர்வம் தலைக்கேறியது. மமதையுடன் திரிந்தனர். இறுமாப்புடன் வாழ்ந்தனர்.

இந்த கர்வமும் மமதையும் இறுமாப்பும் மனித குலத்துக்குச் சத்ரு என்பதை உலகத்தாருக்குப் புரிய வைக்கவேண்டும் எனச் சித்தம் கொண்டான் கண்ணபிரான். விளைவு... அந்த யதுகுலத்தையே அழிக்கவும் செய்தான்.

யதுகுலம் அழிந்தால், அந்தக் குலத்தைச் சேர்ந்த கண்ணனும் அல்லவா அழியவேண்டும்? அப்படியும் ஒரு நிகழ்வை நடத்திக் காட்டினான்.

அந்தக் குலத்தின் சிறுவர்களில் ஒருவன், வயிற்றில் உலக்கையைக் கட்டிக்கொண்டு, 'ஸ்வாமி, இவன் வயிற்றில் பிள்ளைக் கரு உண்டாகியிருக்கிறது' என்று சொல்ல... கூடிநின்ற மொத்தக் குழந்தைகளும் சிரித்து விளையாடினார்கள். இதைக் கேட்ட அந்த மகரிஷியும், 'உலக்கைக் கொழுந்து பிறந்தது' என ஆசீர்வாதம்போல், சாபமிட்டார்.

விளைவு... அந்த மகரிஷியின் சாபத்தால் அந்த ஆணுக்கு உலக்கையே பிறந்தது. விசாரித்தால்... அந்த உலக்கைதான் குலத்தையே அழிக்கும் எனத் தெரிவித்தார் மகரிஷி. அதைக் கேட்டுப் பதறிப்போன மக்கள், மன்னரிடம் ஓடிச் சென்று தகவல் தெரிவித்தனர். 'அந்த உலக்கையை பல கூறுகளாக அறுத்து, உருத் தெரியாமல் உடைத்துப் போடுங்கள். உடைத்த துகள்களை வீசியெறியுங்கள்' என்று உத்தரவிட்டார்.

அதன்படியே அந்த உலக்கையைப் பல துண்டுகளாக, துகள் துகள்களாக உடைத்துப் போட்டனர். உலக்கையின் ஒரு பக்கம் மர பாகமாகவும் இன்னொரு முனை இரும்புப் பூண் போட்டும் இணைக்கப்பட்டிருக்கும். அந்த மர பாகத்தைச் சிறுசிறு துகள்களாக்கிக் கடற்கரை மணலில் வீசியெறிந்தனர். அந்த இரும்பைத் துண்டுத் துண்டாக உடைத்து, கப்பலில் ஏறிச் சென்று நடுக்கடலில் வீசியெறிந்தனர்.

துகள்களாகி விட்ட மரத் துண்டுகள், சப்பாத்திக் கள்ளிகளாக முளைத்தனவாம்! அந்த இரும்புத் துண்டின் ஒரு துகளை, மீன் ஒன்று விழுங்கியது. அந்த மீனை, செம்படவன் ஒருவன் வலை வீசிப் பிடித்தான். கரைக்குச் சென்றதும், அதை ஒரு வேடனுக்கு விற்றான். அந்த வேடன் அதை வீட்டுக்கு எடுத்துச் சென்று அறுத்தபோது, அதன் வயிற்றினுள் ஒரு இரும்புத் துண்டு இருக்கக் கண்டான். அதை எடுத்து, தான் தயாரித்துக்கொண்டிருந்த அம்பின் நுனியில் வைத்துக் கட்டினான்.

சப்பாத்திக் கள்ளியை கத்தி எனும் ஆயுதமாக நினைத்துச் சண்டையிட்டுக் கொண்டார்கள்; செத்தார்கள். கால் மேல் கால் போட்டபடி ஸ்ரீகிருஷ்ணன் இருக்க... அந்தக் கால்களின் வடிவைக் கண்டு, மான் என்று நினைத்து, அந்த வேடன் அம்பெய்தினான். அந்த அம்பு, கிருஷ்ணனின் காலில் தைத்தது. இதையே காரணமாகக் கொண்டு, பழையபடி பரமபதத்துக்கு வந்தான் என்றொரு கதை புராணத்தில் உண்டு.

ஆக... ஆசை, கர்வம் ஆகியவற்றைக் கொடுப்பவனும் அவனே! அதனை அழித்தொழிப்பவனும் அவனே! இதனால் அவனுக்கு தர்ப்பஹா, தர்ப்பதஹா எனும் திருநாமங்கள் அமைந்ததாம்! கூடவே, 'அத்ருப்தஹா' எனும் திருநாமமும் கிருஷ்ணனுக்கு உண்டு. அதாவது, எந்த மமதையும் ஆசையும் இல்லாதவன் என்று அர்த்தம்! அடேங்கப்பா... நம்மை ஆசைக்கு உள்ளாக்கி அழகு பார்க்கிற, வேடிக்கை பார்க்கிற பகவான், எவ்வளவு சாதுர்யமாக தான் அதற்கு அடிமையாகாமல் இருக்கிறான், பாருங்கள்!

'நந்தகோபன் இளங்குமரன்' என்று கண்ணனைச் சொல்வார்கள். தந்தை நந்தகோபனுக்கு அடங்கிய பிள்ளை என்று புகழ்வார்கள்.



ஸ்ரீராமரும் அப்படித்தான். தன்னை தசரதரின் பிள்ளை என்று பிறர் சொல்வதில் அப்படியரு ஆனந்தம் அவருக்கு!

ராம- ராவண யுத்தம் முடிந்தது. 'அப்பாடா... நீ வந்த வேலை முடிந்து விட்டது. இனி, வைகுந்தத்துக்குச் செல்லலாம்' என்று ஸ்ரீபிரம்மா சொல்ல, உடனே பரமேஸ்வரன், 'என்ன விளையாடுகிறாயா? நம் வேலை சுலபமாகிவிட்டது என்று சுயலாபத்துடன் செயல்படுவது தவறு. ஸ்ரீராமனைத் தரிசிக்க அயோத்தியே ஆவலாகக் காத்திருக்கிறது. அவனும் பட்டாபிஷேகத்தைச் செய்து கொள்ளவேண்டும். உறவுகளையும் ஊரையும் பார்த்து அவன் மகிழ வேண்டும். தந்தையை இழந்து தவிக்கிறவனுக்கு, இந்த மனநிறைவேனும் கிடைக்கட்டுமே!' என அருளினாராம் சிவபெருமான்.

இதைக் கேட்ட வால்மீகி நெகிழ்ந்து போனார்; நெக்குருகினார். சிவபெருமானை மனதாரப் போற்றினார். எப்படிப் போற்றினார் தெரியுமா? 'ஷடர்த்த நயனஹா ஸ்ரீமான்' என வாழ்த்திக்

கொண்டாடினார். ஸ்ரீமான் என்றால், ஸ்ரீயாகிய தேவியை திருமார்பில் வைத்திருப்பவன் ஸ்ரீமந் நாராயணன் என்றுதான் அர்த்தம். ஆனால், சிவபெருமானை நெகிழ்ந்து புகழ்ந்தார் இப்படி! ஷட் என்றால் ஆறு; அர்த்தம் என்றால் அதில் பாதி. அதாவது, முக்கண்ணன் என்பதை சூசகமாகச் சொல்லி ஆராதித்தார் வால்மீகி.

சிவனாரின் திருவுளம் என்ன நினைத்ததோ, அதையேதான் திருமாலும் நினைத்தார். அதாவது, தன்னை எப்போதும் நந்தகோபனின் திருமகனாகவே நினைந்து மகிழ்ந்தார் ஸ்ரீகண்ணபிரான். அதேபோல், தசரதரின் மைந்தன் என்று அனைவரும் சொல்வதில் அகமகிழ்ந்தார் ஸ்ரீராமர்.

இப்படி தந்தைக்குப் பணிந்தவனாக, இன்னாரின் மகன் என்று சொல்வதில் பெருமிதம் கொண்டவனாக பகவான் ஸ்ரீகிருஷ்ணன் இருந்தாலும், இன்னொரு விஷயத்தில் தெளிவாக இருந்தான். அந்த விஷயம்... விஷமம்தான்! அவனைப் போல சேட்டைகளை எவரும் செய்ய முடியாது. அவனது சேட்டைகளுக்கு எல்லையே இல்லை. மிகுந்த வால்தனம் செய்யும் குழந்தைகளை, 'இது, சரியான விஷமக் கொடுக்கு' என்பார்களே... பகவான் ஸ்ரீகிருஷ்ணனும் அப்படியரு விஷமக் கொடுக்காகத்தான் இருந்தான்! எவராலும் அடக்கமுடியாதவனாக இருந்தான்.

பகவான் ஸ்ரீகிருஷ்ணருக்கு, 'துர்த்ரஹா', என்றும், 'அபராஜிதஹ' என்றும் இரண்டு திருநாமங்கள் உண்டு.

'துர்த்ரஹா' என்றால், எவராலும் அடக்கவே முடியாதவன் என்று அர்த்தம். 'அபராஜிதஹ' என்றால், எவராலும் வெல்லவே முடியாதவன் என்று அர்த்தம்.

அடங்கவே மாட்டாதவன்தான்; எவராலும் அவனை வெல்லவே முடியாதுதான்! ஆனால், அவனை அடக்கியாளவும் அவனை வெல்லவும் ஒரேயரு அஸ்திரம் போதுமானது. அந்த அஸ்திரமும் நம்மிடமே இருக்கிறது. அந்த அஸ்திரத்தின் பெயர்... அன்பு, பக்தி!

உண்மையான அன்பும் ஆழ்ந்த பக்தியும் கொண்டு அவனை நெருங்கினால், நமக்கு அடங்குவான்; நம்மில் வசமாவான்.

முயன்றுதான் பாருங்களேன்!

# கண்ணனை நினைத்தால்..!




'இந்த ஒட்டுமொத்த உலகையே தன் திருமேனியாகக் கொண்டவன் பரந்தாமன். அதனால், அவனுடைய அடியவர்களுக்குச் செய்யும் தொண்டையே தனக்குச் செய்கிற, தன் திருவடிக்குச் செய்கிற கைங்கர்யமாக ஏற்றுக் கொள்கிறான் அவன்' என்பார்கள் சான்றோர்கள்.

ஒருவரின் காலைப் பிடித்து விடுகிறோம். மெள்ள அவர் கால் வலியைப் போக்குவதற்காகக் கைகளால் பிடித்து விடுகிறோம். வலியில் இருந்து நிவாரணம் பெற்றவர், அப்படியே தூங்கிப் போகிறார். தூங்கி எழுந்தவரிடம் கேட்டால், 'எனக்கு அவர் எங்கே கைங்கர்யம் செய்தார்? என் கால்களைத்தானே பிடித்துவிட்டார்?' என்றா சொல்வார்? அவர் கால்களுக்குச் செய்கிற சேவை என்பது அவருக்குச் செய்கிற சேவை அல்லவா? அதேபோல், ஸ்ரீகண்ணபிரானின் அடியவர்களுக்குச் செய்கிற கைங்கர்யம், அவனுடைய திருவடிகளுக்குச் செய்கிற சேவைக்கு இணையானது!

'உலகில் உள்ள எல்லா உயிர்களின் திருமேனியாக, திருவுருவமாக இருப்பவன் இறைவன் என்கிறீர்கள். அப்படியெனில், ராவணனுக்குக் கைங்கர்யம் செய்தாலும், அது இறைவனுக்குச் செய்கிற சேவையாகத்தானே ஆகும்? கும்பகர்ணனுக்கும் சிசுபாலனுக்கும் செய்கிற கைங்கர்யமும் இறைவனுக்கு உரிய சேவை என்றுதானே ஆகும்?' என்று சிலர் கேட்கலாம். அனுமனுக்கும் ஆழ்வார்களுக்கும் செய்கிற கைங்கர்யத்தை இவர்களுக்கும் செய்யலாம் அல்லவா என்று சிலர் கேட்பார்கள்.

இதற்கும் ஆச்சார்யர்கள் அற்புதமாக விளக்கம் சொல்லி வைத்திருக்கிறார்கள். அதாவது, 'ராவணனைப் போன்றவர்களுக்குத் தாராளமாகக் கைங்கர்யம் செய்யுங்கள். ஆனால், 'நான் வெறும் சரீரம் மட்டுமே! சரீரியாக இருக்கிற இறைவனுக்கு அடிமை நான்' என்பதை அவர்கள் ஏற்றுக் கொண்டால், தாராளமாக ராவணனைப் போன்றவர்களுக்குக் கைங்கர்யம் செய்யலாம்; சேவையாற்றலாம்!' என்று விளக்கினார்கள்.

இங்கே ஒரு விஷயம்... 'நான் இறைவனின் அடிமை' எனும் மனோபாவம் பூரணமாக இருந்துவிட்டால், அவர்கள் ஏன் இப்படி அசுரத்தனத்தில் ஈடுபடப் போகிறார்கள்?!

சரி... இந்த உலகையே தன் திருமேனியாகக் கொண்டவன் ஸ்ரீகண்ணபிரான் என்றால், எவ்வளவு பிரமாண்டமானவன் அவன் என்பதை உணரமுடிகிறதா, உங்களால்? இந்த உலகம் எத்தனைப் பிரமாண்டமானது! அந்த உலகையே தன் திருமேனிக்குள் கொண்டிருப்பவன் என்பதற்காகத்தான், அவனுக்கு 'விஸ்வமூர்த்தி' எனும் திருநாமம் அமைந்தது. விஸ்வம் என்றால் ஜகத், உலகம் என்று அர்த்தம்!

அதுமட்டுமா? அப்பேர்ப்பட்ட விஸ்வமூர்த்திக்கு, மகாமூர்த்தி என்றும் ஒரு திருநாமம் உண்டு. அதாவது, ஆதியும் இல்லாமல் அந்தமும் இல்லாமல் மத்யமும் இல்லாமல் இருப்பவன் இறைவன்! தன் அவதாரங்களில், ஸ்ரீவராக மூர்த்தமாகத் திருக்காட்சி தந்த போது, அவன் எத்தகு பிரமாண்டமானவன் என்பதை விஷ்ணு புராணம் விளக்குகிறது. வராகம் எனும் பன்றியின் உருவெடுத்து நின்றபோது, அவனுடைய காலில் தண்டை அணிந்திருந்தானாம். அந்தத் தண்டையில் சின்னச் சின்னதாகக் கற்கள் பதிந்திருந்தனவாம். உற்றுப் பார்த்தால், ஒரு கல் மேரு மலையாகவும், இன்னொரு கல் இமாலயமாகவும் திகழ்ந்ததாம்! அடேங்கப்பா... பிரமாண்டத்தின் உதாரணங்களாகச் சொல்லப்படுகிற இந்த மலைகளையெல்லாம், தன் தண்டையின் கற்களாகப் பதித்து, அணிந்திருந்தான் என்றால், ஸ்ரீமகாவிஷ்ணு எவ்வளவு மகாமூர்த்தியாகத் திகழ்கிறான் என்று பாருங்கள்!

அப்படி விஸ்வமூர்த்தியாக, மகாமூர்த்தியாக, பிரமாண்ட புருஷனாக விளங்கும் இறைவனை, பரந்தாமனை அடிபணிவதைத் தவிர, வேறென்ன வேலை நமக்கு! அவனுக்கு முன்னே வெறும் தூசுகளாக இருக்கிற நமக்கு எதற்கு கர்வமும் மமதையும்! ஆக, இப்படியான மூர்த்தங்களாக வெளிப்பட்டு, நம் கர்வத்தையும் மமதையையும் அழிக்கச் சொல்கிற தத்துவங்களை உணர்ந்து தெளியவேண்டும், நாம்!

இறைத் திருநாமங்களைச் சொல்லிக்கொண்டே இருந்து, அனவரதமும் அவனின் திருப்பாதங்களைச் சரணடைந்து கிடந்தால், கர்வமற்ற, பாசாங்குகள் இல்லாத, போலித்தனம் இல்லாத மனிதர்களாக நாம் வாழலாம். அப்படி சிறப்புற வாழ்ந்தால், நமக்கு உள்ளேயும் வெளியேயும் புத்தொளி ஒன்று பரவும். அது இறைவனின் ஆசீர்வாதம்; அருட்கொடை!

அதனால்தான், ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவுக்கு தீப்தமூர்த்தி எனும் திருநாமம் அமையப்பெற்றது.

தீப்தமூர்த்தம் என்றால் என்ன?

தீப்தம் என்றால் ஒளி. இந்த உலகில் உள்ள எந்தப் பொருட்கள் எல்லாம் ஒளியைத் தருகின்றனவோ, அந்தப் பொருட்கள் அனைத்துக்கும் ஒளியாகத் திகழ்பவன் இறைவனே! மிகப் பெரிய பேரொளியாகத் திகழ்கிற மூர்த்தியைக் கொண்ட பகவான், உலக மக்களின் நலனுக்காக, உலகில் உள்ள ஒளி தரும் பொருட்கள் யாவற்றிலும் ஊடுருவியிருக்கிறான்; இரண்டறக் கலந்திருக்கிறான் என்று அர்த்தம்!



வால்மீகி, நாரதமுனி போன்றவர்களை இறைவனுக்குச் சமமாகப் போற்றி வணங்குகிற தேசம் இது! இதற்கான காரணத்தை பராசர பட்டர் எவ்வளவு அழகாகச் சொல்கிறார் தெரியுமா?

பகவானுக்கென தனிப்பட்ட கல்யாண குணங்கள் உண்டு. அந்தக் குணங்களில் ஒன்றிரண்டு இவர்களிடமும் இருப்பதாலேயே, இவர்கள் இறைவனுக்கு இணையானவர்களாகப் போற்றப்பட்டனர்; வணங்கப்பட்டனர் என்கிறார் பராசர பட்டர்.

அவனுடைய ஒளியின் சிறு பகுதியால், இந்த உலகத்துப் பொருட்கள் விசேஷ ஒளியுடன் இருந்து, நமக்கு வெளிச்சத்தைத் தருகிறது என்றால், அவனுடைய ஒரு சில குணங்களைக் கொண்டே பரந்தாமனுக்கு நிகராக ஒருவர் திகழ முடியும் என்றால், அந்தப் பொருட்கள் கிரகித்துக் கொள்வதுபோல், நாம் இறைவனைக் கிரகித்துக் கொள்ளக்கூடாதா? அவனைத் தெரிந்து அறிந்து

உணர்ந்தால், அவனுடைய பேரொளியின் சிறு துகள் அளவு ஒளி நமக்குள்ளும் இறங்காதா? அந்த ஒளியுடன் இருக்கிறபோது, இருட்டுச் சிந்தனைகளும் குருட்டுப் புத்திகளும் நம்மில் இருக்காது என்பதுபுரிகிறதுதானே உங்களுக்கு?!

அவனுடைய கல்யாண குணங்களில் ஒன்றையேனும் நாம் உள்வாங்கிக் கொண்டு, வாழத் துவங்கிவிட்டால், நாம் செய்கிற எல்லாக் காரியங்களும் நல்லதாகத்தான் இருக்கும். நம்முடைய எல்லாச் செயல்களும் எல்லோரது நன்மைக்காகவே என்றே மாறும்! அதனால்தான் 'நல்லதை நினை; நல்லதைச் செய்' என்று சூசகமாகச் சொல்லிவைத்தார்கள், பெரியோர்.

இந்த உலகில், இறைவனை விட நல்லவர் வேறு எவர் இருக்கமுடியும்? அவனுடைய ஒரேயரு குணம் வந்துவிட்டால், நாமும் நல்லவராகத்தானே இருப்போம்?

ஸ்ரீகிருஷ்ண பக்தனாக இருங்கள்; அவனுக்குத் தாசனாக மாறுங்கள்; அவன் திருவடிக்கு அடிமை என்றே எண்ணுங்கள்; நாம் நல்லவர்களாகிப் போவோம். குறிப்பாக, மனிதர்களாகி விடுவோம்!




**இ**ந்த உலகிலேயே மிகவும் கஷ்டமான, சட்டென்று புரிந்து கொள்ள முடியாத மொழி எது தெரியுமா? அதேபோல், உலகிலேயே மிக மிக இனிமையான, சொல்லிச் சொல்லிப் பூரித்து வியக்கும்படியான மொழி எது என்று அறிவீர்களா?

இரண்டுக்கும் ஒரே பதில்தான். அந்த மொழி... தமிழ். மிகத் தொன்மையான தமிழ் மொழியைப் போன்று இனிமை நிறைந்தது எதுவுமில்லை. அதனால்தான் பாரதியார், "யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழி போல் இனிதாவது எங்கும் காணோம்" என்றார். சம்ஸ்கிருதம் போன்ற மொழிகளையெல்லாம், ஆசிரியர்களின் துணை கொண்டு படித்தால் புரிந்து உணர முடியும். ஆனால், தமிழ் அப்படியில்லை. பாடப் பாட ராகம் என்பது போல், படிக்கப் படிக்கத்தான் தமிழ் மொழியின் வளமையையும் இனிமையையும் புரிந்துகொள்ள முடியும்.

நாமெல்லாம் பெருமைப்பட்டுக்கொள்ள வேண்டும். அப்படியரு மொழியை, தாய்மொழியாகக் கொண்டிருக்கிறோம் நாம். ஆனால் இதிலென்ன சோகம் என்றால், இன்றைக்குப்

பெரும்பாலான இளைஞர்கள் தமிழ் படிப்பதையோ, பேசுவதையோ விரும்பவில்லை; மதிப்புக்குறைவு என்பது போல் நினைக்கிறார்கள். இந்த நிலை, மிக வேதனையான ஒன்று. பெற்றோர்களும் தங்கள் குழந்தைகள் விருப்பப் பாடமாக எந்தெந்த மொழிகளையெல்லாமோ கற்றுக்கொள்ள வேண்டும் என்று விரும்புகிறார்களே தவிர, தமிழைப் பயிலுவதற்குக் குழந்தைகளை விடமாட்டேன் என்று முரண்டு பிடிக்கிறார்கள்.

தமிழ் மொழியைக் கொண்டு, இறைவனை எப்படியெல்லாம் போற்றி வணங்கியிருக்கிறார்கள் தெரியுமா, நம் முன்னோர்கள்? ஒரு சின்ன வார்த்தை விளையாட்டைப் பாருங்கள். திருமாலைக் குறிப்பிடும் போது, 'ஆணல்லன், பெண் அல்லன், அலியும் அல்லன்' என்று ஒரு பாடல் உள்ளது. அதாவது, கடவுள் எனும் சக்தி, பிரம்மமானது ஆண் இல்லை; அந்த சக்தி பெண்ணும் இல்லை. அலியாகவும் இல்லை என்கிறது.

இந்தப் பாடலைப் பிடித்துக்கொண்ட பௌத்தர்கள், 'ஆமாம், இதைத்தானே நாங்களும் சொல்கிறோம்! அதாவது, ஒன்றுமில்லை என்று நாங்கள் சொல்வதை வேறு விதமாகச் சொல்லியிருக்கிறது வைணவம்' என்றார்கள்.

சரி... அதை விடுங்கள். ஆண் அல்லன்; பெண் அல்லன்; அலியும் அல்லன் என்பது சரியா? ஆண் என்றால் 'ன்' விகுதி சேர்க்க வேண்டும்; பெண் என்றால் 'ள்' விகுதி சேர்க்க வேண்டும்: ஆண் - பெண்ணைச் சொல்லாதபோது, வந்தது போனது என்று 'து' விகுதிதானே சேர்க்க வேண்டும்?! அப்படியெனில், 'ஆண் அல்லன்; பெண் அல்லள்; அலியுமல்லது...' என்றுதானே சொல்ல வேண்டும்? எனில், இந்தப் பாட்டில் பிழையுள்ளதா என்ன?

இதுவொரு வார்த்தை விளையாட்டு. ஆண் அல்லன், பெண் அல்லன், அலியும் அல்லன் என மூன்றிலும் 'ன்' விகுதி சேர்த்து, இறைவன் புருஷோத்தமன் என்று, அவன் ஆண் என்பதை சூசகமாக உணர்த்துகிற பாடல் அது! இறைவன் எல்லாமுமாக இருப்பவன் என்று சொல்வதும் உண்மை. இறைவன் என்று சொல்லும்போதே 'ன்' விகுதி சேர்த்துச் சொல்வதும் பிழையல்ல!



இதையே... கம்பர் பெருமான், 'ஒண்ணேயென்னில் ஒண்ணேயாவான்' என்று பாடுகிறார். அதில் 'ஒன்றானவன் என்றால் ஒன்றானவன்; இரண்டானவன் என்றால் இரண்டானவன்; பலதுமானவன் என்றால் பலதுமாக இருப்பவன்; இருப்பவன் என்றால் இருப்பவன்; இல்லாதவன் என்றால் இல்லாதவன்' என்று சொல்லிக் கொண்டே செல்கிறார் கம்பச் சக்கரவர்த்தி.

அதாவது, இறைவன் வடிவங்களுக்கு அப்பாற்பட்டவன்; இலக்கணங்களை மீறியவன்; அனைத்து ஜீவாத்மாக்களிலும் உறைந்திருக்கிற பரமாத்மா. நீங்கள் எப்படியெல்லாம் நினைக்கிறீர்களோ அப்படியெல்லாம் இருப்பவன்.

அதனால்தான், பகவானுக்கு அமூர்த்திமான் என்று திருநாமம் அமைந்தது. அமூர்த்திமான் என்றால், வெளிப்படாதவன், வடிவங்களுக்கு அப்பாற்பட்டவன், வடிவங்கள் இல்லாதவன் என்று அர்த்தம். அதேநேரம், அமூர்த்திமான் எனும் திருநாமம் இருப்பது போல், அதற்கு

நேர்மாறாக அநேகமூர்த்தி என்கிற திருநாமமும் ஸ்ரீகிருஷ்ணனுக்கு உண்டு. சதமூர்த்தி என்றும் அவனைப் புகழ்கிறார்கள்.

சதமூர்த்தி என்றால் நூறு மூர்த்திகள்; நூறு மூர்த்தங்களைக் கொண்டவன் என்று மட்டுமே அர்த்தம் அல்ல. திருமழிசை ஆழ்வார், இறைவனைப் போற்றுகிற போது ஐந்து, ஐந்து, ஐந்து... என்று இணைந்திருப்பவன் எனப் பாடுகிறார். பஞ்ச பூதங்கள், பஞ்ச கர்மங்கள், பஞ்ச யோகங்கள், பஞ்ச ஞானங்கள்... என ஐந்தைந்தாக இருக்கிற அனைத்தையும் உள்ளடக்கியிருப் பவன், இறைவன். திருமழிசை ஆழ்வார் பாடிய சுமார் 100 பாடல்களிலும் இப்படித்தான் பாடிப் பரவசப்படுகிறார். நம்மைப் பரவசப்படுத்துகிறார். பலப் பல மூர்த்திகளைக் கொண்டவன் என்று நெக்குருகுகிறார்.

இவற்றையெல்லாம்விட புராணத்தில், 'ஷோடஸ ஸ்த்ரீ சகஸ்ரானி' என்று ஸ்ரீகிருஷ்ணனைச் சிலாகிக்கிறார் பராசர பட்டர். அதாவது, 16,108 மனைவிகளைக் கொண்டவன் ஸ்ரீகிருஷ்ணன் என்கிறார். அதாவது, 16,108 திருமேனிகளை எடுத்தவனாம் கண்ண பரமாத்மா. இத்தனை மனைவியரைக் கொண்ட பகவான் ஸ்ரீகிருஷ்ணர் அவர்களை ஒருபோதும் பிரிந்ததே இல்லை. ஆனால், ஏகபத்தினி விரதனான ஸ்ரீராமபிரான், திருமணமான பத்தே மாதங்களில் தன் மனைவி சீதாதேவியைப் பிரிந்து தவித்தான் என்று விளையாட்டாகவும் கேலியாகவும் சொல்வார்கள்.

16,108 மனைவிகளுக்காக அத்தனை திருமேனிகளை எடுத்தவன் ஸ்ரீகண்ணன். ராசக்கிரீடையின்போது, ஒவ்வொரு கோபியருக்கும் ஒரு கண்ணனாக உருவெடுத்து வியக்க வைத்தவன் அந்த மாயவன்! அதனால்தான் அமூர்த்திமான், அநேக மூர்த்தி, சதமூர்த்தி... என்றெல்லாம் அவனுக்குத் திருநாமங்கள் அமைந்துள்ளன.

இந்த உலகம் செழிப்புறுவதற்கும், உலகத்து மக்கள் சிறப்புற்று வாழ்வதற்கும் எந்தத் தருணத்தில், எப்படி வரவேண்டுமோ அப்படியெல்லாம் வந்து நமக்கு அருளுவான் பகவான் ஸ்ரீகிருஷ்ணன். உருவமின்றி வருவான்; உருவம் எடுத்தும் வருவான். கல்லாகவும் புல்லாகவும் வருவான். காற்றாகவும் மழையாகவும்கூட வருவான். தன்னை முன்னிலைப்படுத்திக் கொண்டும் வருவான்; தான் யாரோ எவரோ என்பது போலவும் வந்து நின்று உதவுவான். மாயக்கண்ணனின் லீலைகளையும் அவன் எடுக்கிற திருவுருவங்களையும் எவராலும் கணித்துச் சொல்லிவிட முடியாது.

இதனால்தான், 'அவ்யக்தஹா' எனும் திருநாமமும் அமையப் பெற்றான், இறைவன். 'அவ்யக்தஹா' என்றால், வெளிப்படாதவன், புலப்படாதவன் என்று அர்த்தம். தன் பெருமைகளைத் தானே அறியாதவனாக, மனிதப் பிறப்பெடுத்து, தன்னை மறைத்துக் கொண்டவன் அல்லவா இறைவன்! அதனால்தான் அவனுக்கு இந்தத் திருநாமம்.

சத மூர்த்தியாக, நூறு நூறு மூர்த்திகளையும் கீர்த்திகளையும் கொண்ட மகா மூர்த்தி பகவான். எல்லாவற்றிலும் அவன் இருக்கிறான்; எல்லாமுமாகவே அவன் உறைந்திருக்கிறான்!

சரி... இத்தனைப் பிரமாண்டமானவனை, மாயக்கண்ணனை, எல்லாமுமாக இருப்பவனை எப்படி நெருங்குவது? அவனின் அருளை எவ்விதம் பெறுவது?

இதற்கும் பகவானே வழி சொல்கிறார்...

பகவத்கீதையில் இப்படி நம்மைப் போல் தவித்து மருகி நிற்கிற அர்ஜுனனிடம், "யக்ஞம், யாகம், தபஸ் போன்றவற்றைச் செய்தால் என்னை அறிந்துவிடலாம், நெருங்கிவிடலாம் என்று

நினைக்கிறார்கள். புலன்களுக்கு அப்பாற்பட்டவன் நான். பக்தி எனும் ஒன்றால் மட்டுமே என்னை அறியவும் நெருங்கவும் முடியும்!" என்கிறார் பகவான் ஸ்ரீகிருஷ்ணர்.

பக்தி என்பது அன்பின் மற்றொரு வடிவம். பக்தி என்பது தேடலின் ஆரம்பப் புள்ளி. தேடலுடன் கிருஷ்ண பக்தியில் ஈடுபட்டால், அந்த அழகுக் கண்ணன், தேடியும் ஓடியும் வருவான் நம்மிடம்!

## கண்ணன் நாமம் சொல்லும் கதைகள்

வேளுக்குடி கிருஷ்ணன்






உங்கள் வீட்டுக்கு அருகில் உள்ள குழந்தை அல்லது தூரத்து உறவுக்காரரின் குழந்தையைப் பார்க்கிறீர்கள். அந்தக் குழந்தையின் பெயர் தெரியாது உங்களுக்கு. அப்போது, அந்தக் குழந்தையை... 'ராமா, வாடா' என்று அழைப்பீர்களா? 'வாமனா இங்கே வா, சாக்லேட் தரேன்' என்று சொல்வீர்களா? 'நரசிம்மா, பக்கத்துல வந்தேன்னா, ஒரு கதை சொல்லுவேன்' என்று அழைப்பீர்களா?

எல்லாமே பகவானின் திருநாமங்கள்தான்; திருமாலின் பெயர்கள்தான். ஆனால், 'கண்ணா, இங்கே வாடா!' என்றுதான் கூப்பிடுவோம். கண்ணனின் திருநாமத்துக்கு மட்டுமேயான பெருமை அது!

கண்ணன் என்பவன் அழகானவன். அனைவரையும் ஈர்ப்பவன். அந்த அழகை, 'கஸ்தூரி திலகம் லலாட படலே...' எனும் ஸ்லோகம் அழகுற விவரிக்கிறது.

ஒருவரைப் பார்க்கிறபோது, முதலில் அவர் முகம் பார்ப்போம். அப்படிப் பார்க்கிற வேளையில், சட்டெனத் தட்டுப்படுவது அவரின் நெற்றிதான். அந்த நெற்றி நிர்மலமாக, ஒன்றுமில்லாததாக இருந்தால் நன்றாகவா இருக்கும்?! நெற்றியில் விபூதியோ, கோபி சந்தனமோ, திருமண்ணோ (ஸ்ரீசூர்ணத்துடன்) ... அவரவர் சம்பிரதாயப்படி இட்டுக் கொள்ளவேண்டும்.

நெற்றியில் (ஸ்ரீசூர்ணத்துடன்) திருமண் வைத்திருப்பதற்கு உங்களையும் என்னையும் உதாரணமாக எடுத்துக் கொள்ள வேண்டாம். சாட்ஷாத் ஸ்ரீகண்ணனையே எடுத்துக் கொள்வோம். அவனே எப்போதும் திருமண் (ஸ்ரீசூர்ணத்துடன்) இட்டுக் கொண்டுதான் காட்சி தருகிறான்.

திருமண் என்பது, பகவானின் திருவடி. அவனுடைய திருவடியை நாம் நம் சிரசில், நெற்றியில் சூடிக் கொள்வதாக ஐதீகம். ஆனால், பகவானே தன் நெற்றியில் திருமண் இட்டுக் கொண்டிருக்கிறானே?! அது எவருடைய திருவடி?

சீதாதேவிக்கும் ஸ்ரீராமபிரானுக்கும் பங்குனி மாத உத்திர நட்சத்திர நன்னாளில் திருக்கல்யாணம் நடைபெற்றது. ஸ்ரீரங்கத்தில் 364 நாளும் இல்லாத ஒரு விஷயம், பங்குனி உத்திர நாளில் நடைபெறும். அந்த நாளில், ஏக சிம்மாசனத்தில் அதாவது ஒரே சிம்மாசனத்தில், பெருமாளும் பிராட்டியும் எழுந்தருளி சேவை சாதிப்பார்கள். அதுமட்டுமா? பெருமாள் எப்போதுமே தெற்கு வாசல், பிராட்டி எப்போதுமே வடக்கு வாசல் என்று இருக்கிற ஸ்ரீரங்கத்தில், அன்றைய நாளில், தாயார் சந்நிதிக்கு வந்து எழுந்தருள்வார் பெருமாள்.

திருமணமாகி பெண்கள் புகுந்த வீட்டுக்குச் செல்கிறார்களோ இல்லையோ, வேட்டகத்துக்கு அதாவது பெண்ணின் வீட்டுக்கு, மாப்பிள்ளை நிச்சயம் செல்வார் அல்லவா?! அதன் பிறகுதான் பெண்ணை அழைத்துக்கொண்டு புகுந்த வீட்டுக்குச் செல்வார்கள். அதேபோல், தாயாரின் சந்நிதிக்கு வருவாராம் பெருமாள்!

சரி... திருமண் விஷயத்துக்கு வருவோம்.

கம்ப ராமாயணத்தில், சீதா கல்யாணத்தின்போது, ஸ்ரீராமபிரானை விவரிக்கிற வேளையில், 'தன் திருநாமத்தை தானே சார்த்தி...' எனப் போற்றுகிறார் கம்பச்சக்கரவர்த்தி.

எதற்காக அவரே திருமண் இட்டுக் கொண்டாராம்?!



வைஷ்ணவ அடியவர்கள் அனைவரும் திருமண் (ஸ்ரீசூர்ணத்துடன்) இட்டுக் கொள்கிறார்களே, நாமும் இட்டுக்கொண்டு பார்ப்போமே என விரும்பினாராம் பகவான். 'கற்கண்டு சாப்பிட்டேன். எவ்வளவு சுவையாக, பிரமாதமாக இருக்கிறது தெரியுமா?' என்று ஒருவர் சொன்னால் போதுமா? கற்கண்டின் சுவை குறித்து காதாரக் கேட்டாலோ, அல்லது பேப்பரில் எழுதியிருப்பதைப் படித்தாலோ அந்தச் சுவையை உணர்ந்துவிட முடியுமா? இரண்டு கற்கண்டை எடுத்து வாயில் போட்டுக்கொண்டால்தானே, அதன் சுவையை நம்மால் அறிய முடியும்?! அதனால், அடியவர்கள் திருமண் இட்டுக் கொள்வதால் கிடைக்கிற சுகானுபவத்தைத் தானும் அனுபவிக்க ஆவல் கொண்டார் பகவான். தவிர, திருமண் இட்டுக் கொள்ளுங்கள்; வெறும் நெற்றியாக இருக்காதீர்கள் என்பதை உலகுக்கு உணர்த்தவும் அவர் திருமண் இட்டுக்கொண்டு காட்சியளித்தார்.

பகவானின் திருநாமங்களைச் சொல்வதும், (ஸ்ரீசூர்ணத்துடன்) திருமண் இட்டுக் கொண்டு அவனை ஸேவிப்பதும் மிகுந்த பலனைத் தரக்கூடியவை.

நம்மில் சிலர், 'விபூதி, கோபி சந்தனம், திருமண் போன்றவற்றை நெற்றியில் இட்டுக் கொண்டு வெளிவேஷம் போடமாட்டேன்' என்பார்கள். இன்னும் சிலர், 'கோயிலுக்குப் போய் ஸ்வாமி கும்பிடுவதில்லை' என்பார்கள்.

ஒன்றை நினைவில் கொள்ளுங்கள்... சுக்கிராச்சார்யர், வால்மீகி, வேதவியாசர் எனப் பெருமக்கள் அனைவரும் (ஸ்ரீசூர்ணத்துடன்) திருமண் இட்டுக் கொண்டார்கள்; ஆலயங்களுக்குச் சென்று வழிபட்டார்கள். அவனின் பேரருளையும் பெற்றார்கள்.

நம் வீடுதான். என்றாலும் குளிக்கிற இடத்தில் சமைக்கிறோமா, என்ன? சமைக்கிற இடத்திலா படுத்துக்கொள்கிறோம்? அல்லது, வரவேற்பறையின் நடுவே நின்றுகொண்டு குளிக்கிறோமா? குளியலறையில் சமைத்தால், பருப்பும் அரிசியும் வேகாதா? வரவேற்பறையில் குளித்தால், நம் அழுக்கு போகாதா? சமையலறையில் துண்டை விரித்துக்கொண்டு படுத்துத் தூங்கினால், தூக்கம் வராமலா போய்விடும்?! ஆனால், அந்தந்த விஷயத்துக்கு என்று ஒதுக்கி வைத்து, அதன்படி செயல்படுவதுதானே முறை! கோயில்களும் அப்படித்தான். பகவானை ஆழ்ந்த ஈடுபாட்டுடன் ஒன்றி, அவனுடைய திருவடியைப் பற்றிக்கொண்டு வணங்கி வழிபடுவதற்குக் கோயில்களே சிறந்த இடம். அப்படிப்பட்ட சூழலுடன் கோயில்களை நிர்மாணித்ததே, வழிபடுவதற்காகத்தான்.

உருவமாகவும் உருவமில்லாதவனாகவும் இருப்பவன் இறைவன். ஆனால், நாம் வழிபடுவதற்கு, விக்கிரகத் திருமேனி என்பது மிகவும் அவசியமாகிறது.

அந்த விக்கிரகத் திருமேனிக்கு முன்னே நின்று கொண்டு, 'நாராயணா... நாராயணா... நாராயணா' என்று சொல்லியோ, 'கோவிந்தா... கோவிந்தா... கோவிந்தா...' என்று ஜபித்தோ வேண்டி நில்லுங்கள். வேறு எதுவும் நீங்கள் கேட்க வேண்டாம். உங்களுக்கு என்னென்ன கொடுக்க வேண்டும் என்பது பகவானுக்குத் தெரியும்?!

ஆகவே, காலையில் நீராடி, பூஜையறையில் நின்று விபூதியோ குங்குமமோ, சந்தனமோ கோபி சந்தனமோ, திருமண்ணோ (ஸ்ரீசூர்ணத்துடன்) இட்டுக் கொண்டு, இறைவனை முழுவதுமாகச் சரணடையுங்கள். நெற்றியில் உள்ள அந்தத் திருச்சின்னம், உங்கள் ஒவ்வொரு நாளிலும் பொழுதிலும் உங்களுக்குத் துணை நின்று உங்களைக் காப்பாற்றும். எந்தவொரு தவறான பாதைக்கும் செல்லாமல், உங்களை வழிநடத்தும்!

திருமண் என்பது திருச்சின்னம் மட்டுமல்ல; அது பகவானின் திருவடி. பகவானின் திருவடியை திருச்சின்னமாகக் கொண்டுவிட்டால், தவறான பாதையில் நீங்கள் திசை மாறவே முடியாது!

ஸ்ரீகிருஷ்ணருக்கு 'ஏகஹ... ந ஏகஹ' என்றொரு திருநாமம் உண்டு. அவன், ஒருவனாகவும் இருப்பவன்; ஒருவன் அல்லாதவனாகவும் அதாவது எதுவும் அற்ற நிலையிலும் இருந்து அருள்பவன்!

அவன் திருவடியை திருமண்ணாக இட்டுக் கொள்ளுங்கள். உங்களை நல்ல வழிக்கு இட்டுச் செல்வது அவன் பொறுப்பு!






'**ச**த்தியம் எங்கே இருக்கிறதோ அங்கே ஸ்ரீகண்ணனும் இருப்பான். ஏனெனில், அந்தச் சத்தியம் என்பதே சாட்ஷாத் அவன்தானே!' என்று போற்றுகின்றனர் வைணவப் பெருமக்கள்.

பகவான் இருக்குமிடத்தில் சத்தியம் நிறைந்திருக்கும். பஞ்ச பாண்டவர்களிடம் இருந்த சத்தியமும் தர்மமும்தான் அவர்களைக் காத்தன. அதாவது, பகவான் பாண்டவர்களுடன் இருந்ததால்தான் அவர்கள் வென்றனர்.

"ஒரேயரு பாணத்தில் பாண்டவ வம்சத்தில் உள்ள அனைவரையும் அழித்துவிட முடியும். ஆனால், அவர்களுக்கு ரட்சகனாக ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா இருக்கிறாரே... அவர் மட்டும் இல்லையென்றால், விரல் சொடுக்கும் நேரத்துக்குள் அழித்துவிடலாம்" என பீஷ்மரும் துரோணரும் சொன்னார்கள்.

ஆச்சார்யர்கள் சொன்னதை விடுங்கள்... ஸ்ரீபரமேஸ்வரனே சொல்கிறார்... "கண்ணபிரான் அவர்களுடன் இருக்கும் வரைக்கும், பாண்டவர்களை யாரும் எதுவும் செய்ய முடியாது' என்று!

பகவான் ஸ்ரீகிருஷ்ணரின் திருநாமங்களைச் சொல்லி, அவனை மனதார ஸேவித்தால், சத்தியத்துடனும் தர்மத்துடன் நிறைவாக வாழலாம் என்பதை மறந்துவிடாதீர்கள்.

'சரக சம்ஹிதை'யின் ஔஷத சாஸ்திரம், அற்புதமாக இதை விவரிக்கிறது. 'எப்படி வாசுதேவனுக்குத் தோல்வி என்பதே கிடையாதோ, இந்தச் சமுத்திரம் எப்படி வற்றாமல் இருக்கிறதோ, என் தாயாரின் திருமணத்தை எப்படி நான் பார்த்தது கிடையாதோ... இந்த சத் வாக்கியங்கள் அனைத்தும் உண்மையானதைப் போல, இந்த மருந்தும் வேலை செய்து குணமாக்கும்' என்கிற மந்திரத்தைச் சொல்லியபடி, மருந்து தயார் செய்வார்களாம்.

இத்தனை பெருமைகளைக் கொண்டவன் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா. இதனால்தான், அபராஜிதன் எனும் திருநாமம் அமையப் பெற்றான். அபராஜிதன் என்றால், தோல்வியே இல்லாதவன் என்று அர்த்தம்!

பகவானின் ஒவ்வொரு அவதாரத்துக்கும் அவனுடைய ஒவ்வொரு திருநாமத்துக்கும் அளப்பரிய சக்தி உண்டு. அந்தக் காரணங்களைத் தெரிந்து கொண்டால், காரியங்களை எளிதாக அறிந்து கொள்ளலாம். உடுத்துகிற ஆடை, பஞ்சில் இருந்து வருகிறது; அந்தப் பஞ்சு, புடவையாகவும் வேஷ்டியாகவும், சட்டையாகவும் துண்டாகவும் எப்படியெல்லாம் மாறுகிறது பார்த்தீர்களா? பகவானின் திருமேனி அவதாரமும் திவ்விய நாமங்களும் அப்படித்தான்!

சஜாதிபய பேதம், விஜாதிபய பேதம், ஸ்வத்த பேதம் என மூன்று பேதங்கள் உள்ளன. அதாவது, தென்னையும் வாழையும் மரம்தான்! ஆனால், தென்னை என்பது ஒரு வகை மரம்; வாழை என்பது வேறொரு வகையானது! ஆனால், இரண்டுமே மரம் என்பதில் மாற்றுக் கருத்தே இல்லை. இது, சஜாதிபய பேதம்!

அடுத்து, விஜாதிபய பேதம். அது வேறு, இது வேறு. அதாவது, ஒன்று மரமாகவும், இன்னொன்று மலையாகவும் இருக்கிறது. ஆகவே, மரத்தையும் மலையையும் எப்படி ஒரே வகை என்று சொல்ல முடியும்?

மூன்றாவதாக, ஸ்வத்த பேதம். அதாவது ஒரு மரம் இருக்கிறது. அதில் வேர், கிளை, இலை, பழம் என அனைத்தும் இருக்கின்றன. இப்போது, வேரைப் பார்த்து மரம் என்பீர்களா? கிளையை அல்லது இலையைப் பார்த்து மரம் என்று சொல்வீர்களா? வேரை வேர் என்றும் கிளையை கிளை என்றும், இலையை இலை என்றும் கனியை கனி என்றும்தானே சொல்வோம்?! மொத்தமாக மரம் என்று சொன்னாலும், தனித்தனியே ஒவ்வொரு பெயருடன் வேறுபட்டுத் திகழ்கின்றன, பார்த்தீர்களா?

இறைவன் எனும் பிரமாண்டமானவனும் இப்படித்தான்! பரமாத்மாவான அந்தப் பரந்தாமன், அனைத்துக்கும் அப்பாற்பட்டவன். எல்லாமுமாக இருப்பவனும் அவனே; எதுவுமற்றுத் திகழ்பவனும் அவனே! ஏகஹ என்றும் ந ஏகஹ என்றும் ஸ்ரீகிருஷ்ணனை இரண்டு விதமாகவும் அழைப்பது அதனால்தான்! இதைச் சொல்லும் விதமாகத்தான், உணர்த்துகிற வகையாகத்தான் அவனுடைய ஒவ்வொரு திருநாமமும் அமைந்தது.

'நீராய் நிலனாய்...' என்று துவங்குகிற பாடல் உண்டு. அதில் நீராகவும் இருக்கிறாய்; நிலமாகவும் இருக்கிறாய்; நெருப்பாகவும் இருக்கிறாய்; காற்றாகவும் இருக்கிறாய் என்று ஆழ்வார் வியந்து பாடுவார். அந்த வியப்பின் நிறைவாக, 'அட போப்பா... உன்னை எப்படிக் கூப்பிடுறதுன்னே எனக்குத் தெரியலை!' என்று ஏக்கமாகச் சொல்வார். ஆனால் ஒரு விஷயம்... இங்கே பல இடங்களில், வரிகளில்... இறைவன் ஒருவனே என்பதைத் தெளிவுறச் சொல்லிக் கொண்டே வருகிற உத்தி ரசனைக்கு உரியது!

மண்ணை எடுத்துச் சாப்பிட்டான் கண்ணன். இதை பலராமன் யசோதைக்குச் சொல்ல... 'எல்லாரும் பொய் சொல்றாங்கம்மா... நான் மண்ணைச் சாப்பிடலை' என்று குறும்பு கொப்பளிக்கச் சொல்கிறான் கண்ணன். 'நீ விஷமக்காரனாச்சே... செஞ்சாலும் செய்திருப்பே. எங்கே வாயைத் திறந்து காட்டு' என்கிறாள் யசோதை.

வேறு வழியின்றி, தன் வாயைத் திறக்கிறான் கண்ணபிரான். அங்கே, ஏழுலகையும் தன் தாயாருக்குக் காட்டி அருள்கிறான் பகவான். அதாவது, பகவான் ஸ்ரீகிருஷ்ணன் என்பது ஒருவன்தான். ஆனால், அவன் காட்டியது ஏழுலகங்களையும்! 'வையம் ஏழும் கண்டாள்...'

என்றொரு பாடல், 'காட்டியது ஒருவன்; கண்டது ஏழு' எனும் பொருள்படும்படி, அழகுற விவரிக்கிறது.

ஸ்ரீகிருஷ்ணனுக்கு 'சஹா' எனும் திருநாமம் அமைந்தது அதனால்தான்! அதாவது... கொடுப்பது, கொடுப்பவன் என்று அர்த்தம். நமக்கெல்லாம் ஞானத்தை அள்ளிக் கொடுப்பவன் ஸ்ரீகிருஷ்ணன் அல்லவா?

சத்தியத்தையும் தர்மத்தையும் நிலைநாட்ட உபதேசித்தவன், அந்தக் கருணாமூர்த்தி அல்லவா?

சர்க்கரையை, பச்சை மிளகாய் என்றோ வேம்பு என்றோ மாற்றிச் சொல்லிவிட்டு, அந்தச் சர்க்கரையைச் சாப்பிட்டால் அது காரமாகிவிடுமா? கசப்பாகிவிடுமா? சர்க்கரையின் இயல்பை மாற்ற எவராலும் முடியாது. அப்படித்தான்... பகவானின் எந்தத் திருநாமங்களைச் சொன்னாலும், அவனுடைய பரிபூரண அன்பும் ஆசீர்வாதமும் நமக்கு என்றைக்கும் உண்டு.

இதேபோல் 'வஹா' எனும் திருநாமமும் கொண்டிருக்கிறான் பகவான். வஹா என்றால் வசிப்பது, வசிப்பவன் என்று அர்த்தம்.

இதைத்தான் பராசர பட்டர், தன் சிஷ்யரான மைத்ரேயரிடம்... 'ஜகத் முழுவதுமாக, ஜகத்தில் உள்ள உயிர்கள் அனைத்திலுமாக ஊடுருவிப் பரவியிருக்கிறான் பரந்தாமன்' என்கிறார். அதாவது அந்தராத்மாவாக, அந்தராமியாக, அனுப்பிரவேசம் பண்ணியிருக்கிறான்.

அட... இதைத்தானே பிரகலாதனும் சொன்னான் என்கிறீர்கள்தானே?!

ஆமாம். 'இறைவன் எங்கே இருக்கிறான்?' என்று இரணியன் கேட்டதற்கு, 'எங்கும் உளன்' என்றான் பிரகலாதன். உடனே 'இங்கே இருக்கிறானா?' என்று கேட்டான் இரணியன். எவ்வளவு முட்டாள்தனமான கேள்வி இது. பின்னே... எங்கும் இருப்பவன் என்று சொல்லிவிட்ட பிறகு இங்கே இருக்கிறானா என்று கேட்கலாமோ?

'இந்தத் தூணில் இருக்கிறானா?' என்று அவன் கேட்க, 'இருக்கிறான்' என்று பதில் சொன்னால், 'அந்தத் தூணில் இல்லையா?' என்கிற அடுத்த கேள்வியும் வரும். இதை உணர்ந்த பிரகலாதன், விதண்டாவாதத்துக்கு முற்றுப்புள்ளி வைக்கும் வகையில், 'தூணிலும் இருக்கிறான், துரும்பிலும் இருக்கிறான்...' எனச் சொன்னான்.

சஹா என்றால் கொடுப்பவன்; வஹா என்றால் வசிப்பவன். கொடுக்க வேண்டும் என்றால், கூட இருந்துதானே ஆக வேண்டும்?!

நம்மில், நமக்குள்... ஊடுருவியிருக்கிறான் பகவான் ஸ்ரீகிருஷ்ணன். இன்று இல்லையேனும் நாளை... நாளை இல்லையேனும் அடுத்த வாரம்... அதுவும் இல்லையெனில் அடுத்த மாதம்... நாம் திருந்த மாட்டோமா, நல்வழிக்கு வரமாட்டோமா எனக் காத்துக் கொண்டிருக்கிறான் கண்ணபிரான்.

'ஆடுற வரைக்கும் ஆடு. ஓய்ஞ்சு முடிஞ்சாதான் உன் புத்திக்கு எதுவுமே உரைக்கும்' என்று பிள்ளையைப் பெற்ற தாய், பொறுமை காப்பதைப் போல, நமக்குள் இருந்தபடி நமக்காகக் காத்திருக்கிறான் கண்ணபிரான். முடிந்தால், அவனை உணர முயற்சி செய்து பாருங்களேன்!






ஒரு மனிதனுக்கு முதல் தேவை ஞானம்தான். ஒருவருக்கு ஞானம் இருந்துவிட்டால், புத்தியில் தெளிவு கிடைத்துவிடும். தெளிவான சிந்தனைகளும் செயல்களும் கைகோத்தபடி இருந்துவிட்டால், கல்வியில் சிறந்து விளங்கலாம். நல்ல கல்வி வாய்க்கப் பெற்றால், உத்தியோகமும் அதன் வாயிலாக செல்வங்களும் கைகூடும்! ஆக, அனைத்து சந்தோஷங்களுக்கும் அஸ்திவாரமாகத் திகழ்வது... ஞானம்!

அந்த ஞானச்செல்வத்தை அள்ளி அள்ளி வழங்குபவன் ஸ்ரீகண்ணபிரான். அதனால்தான், சஹா எனும் திருநாமம் அமைந்தது, அவனுக்கு!

அதேபோல், வஹா எனும் திருநாமமும் கண்ண பரமாத்மாவுக்கு உண்டு. அதாவது வசிப்பவன். அங்கிங்கெனாதபடி, எல்லா இடங்களிலும் இருப்பவன்; வசிப்பவன்! இந்தப் பரந்தவெளியில் நமக்கு வெளியேயும் இருக்கிறான். நம் உள்ளுக்குள்ளேயும் இருக்கிறான்.

சஹா என்றால் ஞானத்தைத் தருபவன். வஹா என்றால் எங்கும் வசிப்பவன். அடுத்து உள்ள திருநாமம்... கஹா! ஒளிவிடுகிறவன் என்று அர்த்தம்.

அதெப்படி? மாணிக்கமானது சேற்றில் விழுந்து விட்டால், அதன் ஒளி மறைந்துவிடுகிறது. நறுமணம் கொண்ட ரோஜாப்பூ குப்பையோடு குப்பையாகக் கலந்துவிட்டால், அந்த துர்நாற்றத்தில் தன் நறுமணத்தை இழந்துவிடுகிறது. அதேபோல், உடல் மற்றும் மன ரீதியாக அழுக்குகளைக் கொண்டிருக்கிற மனிதர்களுக்குள் இருக்கிற கடவுள், மனிதனைப்போல் அதாவது ஜீவாத்மாவைப் போல தாழ்ந்துவிட மாட்டானா?

மாட்டான். ஏனெனில், அவன் பரமாத்மா. மாணிக்கங்களுக்கும் ரோஜாக்களுக்கும் அப்பாற்பட்டவன். நம் மன அழுக்கை அகற்றி தூய்மைப்படுத்துவதற்காகவும் மன இருளை அகற்றி பிரகாசிக்கச் செய்வதற்காகவும் அவன் நமக்குள்ளே வியாபித்திருக்கிறான். ஆகவே

ஒளிமயமானவன் இறைவன். எப்போதும் எல்லாக் காலத்திலும் சுடர்விட்டபடியே ஜோதியாக, பிரகாசத்துடன் திகழ்பவன் அவன்! ஒருபோதும் அவன் ஒளி குன்றுவதில்லை; மாறாக, ஒவ்வொரு நிமிடமும் நமக்குள் இருக்கிற இருளை அகற்றுகிறது.

ஆக, சஹா, வஹா, கஹா என்கிற திருநாமங்களுடன் திகழ்கிறவன் கிருஷ்ண பரமாத்மா. இவனுடைய திவ்விய நாமங்களைச் சொல்வதும் இவனை ஆராதிப்பதுமே புண்ணியம் நிறைந்தவை!

அடுத்ததாக இன்னொரு திருநாமத்தைப் பார்ப்போம்.

'இறைவன் எங்கு இருக்கிறான்?'

'இறைவன் எங்கும் இருக்கிறான்!'

ஆனால், 'கிம்' என்கிறது ஒரு திருநாமம்.

'கிம்' என்றால் என்ன?

'யார் என்று தேடினால் இறைவன் கிடைப்பான்?'




இதைக் கேட்டுச் சிலர் கேலி செய்யலாம். பகபகவெனச் சிரிக்கலாம். இன்னும் சிலர் குழம்பித் தவிக்கலாம். 'இறைவன் எங்கு இருக்கிறான் என்று கேட்டுவிட்டு, அதற்கு 'இறைவன் எங்கும் இருக்கிறான்' என்று பதிலும் சொல்லிவிட்டு, 'யார், எங்கே என்று தேடினால், கிடைப்பான்' என்று சொன்னால், முரண்பாடாக இருக்கிறதே... எனச் சொல்லி எள்ளி நகையாடலாம்.

சட்டைப் பையின் ஓட்டையில் இருந்து எட்டணா விழுந்துவிட்டது. விழுந்த அந்த நிமிடமே, அந்த இடத்திலேயே அந்த இருட்டு வேளையில் தேடுகிறோம். தரையில் கை வைத்து துழாவுகிறோம். மெள்ள இருட்டுக்கு கண்களைப் பழக்கமாக்கிக் கொண்டு, கூர்ந்து கவனிக்கிறோம். இருட்டில் லேசான பளபளப்புடன் அல்லது ஏதோ ஒன்று வட்டமாகத் தெரிய... கைகளால் தடவி, கண்களால் ஊடுருவி, கடைசியில் காசை எடுத்து விடுகிறோம்.

அதாவது, இறைவன் எல்லா இடங்களிலும் இருக்கிறான். ஆனால் எங்கே, எப்படி, எந்தவிதமாக இருக்கிறான் என்பதை அறிந்து கொள்வதற்கான சாதுர்யமும் சங்கல்பமும் நமக்கு வேண்டும். அவை இருந்தால்தான் இறைவனை அறிய முடியும்! எல்லா இடங்களிலும் பரந்தாமன் இருந்தாலும் அவன் நம் கண்ணுக்குத் தெரியவேண்டும் என்பதுதானே முக்கியம்?!

'கறந்த பாலுள் நெய்யே போல்...' என்றொரு பாசுரம் கேட்டிருக்கிறீர்களா? எவ்வளவு அழகான பாடல் அது. எத்தனை உயிர்ப்பான உதாரணங்கள் அவை.

மாடு நெய் தருகிறது என்றால், 'என்ன இது முட்டாள்தனம். அது பால் அல்லவா தருகிறது?' என்போம். அந்தப் பாலை உறைக்குத்தி வைத்தால், தயிராகி விடுகிறது. அந்தத் தயிரை நன்றாகக் கடைந்து, பிரித்தெடுத்தால்... வெண்ணெய் கிடைத்துவிடும். அந்த வெண்ணெய்யை உருக்கிப் பார்க்க நெய் வந்துவிடும். மாடு, பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் என சகலமும் தருகிறது அல்லவா! பாலில் துவங்கி நெய்யாக உருமாறுகிறது அல்லவா! இந்த உண்மையை கருத்தில் கொண்டு, கடவுள் எங்கே, எந்த வடிவத்தில், எப்படியாக இருக்கிறார் என்பதை நாம்தான் தேடிக் கண்டு கொள்ள வேண்டும். அதற்காகத்தான் 'கிம்' என்று 'தேடிக் கண்டறியலாம் பரந்தாமனை...' என்று திருநாமம் அமைந்தது.

பரம்பொருளை அடைய வேண்டும் என்றால் தேடத்தான் வேண்டும். இந்த உலகில் எல்லா மனிதர்களும் பிரம்மத்தை அறிவதிலும் அடைவதிலும் ஆர்வம் கொள்கிறவர்களாகத்தானே இருக்கிறார்கள்! ஆனால் அடுத்ததாக இன்னொரு திருநாமத்தைச் சொன்னால், நீங்கள் குழம்புவீர்கள்; வியப்பீர்கள்; குதூகலம் கொள்வீர்கள். 'அடடா, கண்ணனே... உன் கருணையே கருணை' என்று சிலிர்ப்பீர்கள். அந்தத் திருநாமம் - 'யத்'. பரந்தாமனைத் தேடுகிற மகரிஷிகளையும் மக்களையும் அரவணைக்கவும் காப்பாற்றவும் பிரயத்தனப்படுகிறான் ஸ்ரீகண்ணபிரான். யத் என்றால் யத்தனம்; முயற்சி மேற்கொள்பவன் என்று அர்த்தம். என்ன முயற்சி? எதற்காக யத்தனம்?

"தாமரையானது தண்ணீரில் இருந்து எப்படி மேலேறி வெளிவந்து, தன் உருவத்தையும் நறுமணத்தையும் காட்டுகிறதோ... அதேபோல் நரகம் எனும் பிறவியில் உழன்று தவிக்கும் என் அடியவர்களை நான் அதனிலிருந்து மீட்பேன்" என்கிறார் பகவான் ஸ்ரீகிருஷ்ணர்.

முதல் திருநாமத்தில், 'தேடினால்தான் கிடைப்பான் இறைவன்' என்று பொருள் படும்படியாகவும், அடுத்ததாகவே நமக்கு அருள் வதற்காகவும் நம்மை ஆட்கொள்வதற்காகவும் அவன் முயற்சி மேற்கொள்கிறான் என்றும் முரண்பாடான, அதேநேரம் பகவானின் கருணையையும் நம் பக்தியையும் ஒருசேரச் சொல்லி வைத்திருக்கிறார்கள், பெரியோர்!

பகவானை அடைவதற்கு இரண்டு வழிகள் உண்டு. ஒன்று பக்தி மார்க்கம். ஸ்லோகங்களைச் சொல்லி, பாசுரங்களைப் பாடி, தீப-தூபங்கள் காட்டி ஆராதித்து, 'சதாசர்வ காலமும் உன்னையே நினைத்திருக்கும் எனக்கு அருள்வாயாக!' என்று பிரார்த்திப்பது!

'நீதான்டாப்பா எனக்குக் கதி. உன் பாதார விந்தங்களில் என்னைச் சேர்த்துக்கொள். உன் திருவடியின் கீழ், ஒரு துரும்பாக இருக்கிற அடியேனை ஏற்றுக்கொள். உன் திருவடியைத் தவிர வேறு கதியில்லை எனக்கு!' என்று சரணாகதியாவது, இன்னொரு வகை!

இந்த இரண்டு வகை என்பது ஒரு கணக்கு தான். நாம் இந்த இரண்டில் எந்த வகையாக இருந்தாலும் நம்மை அந்தக் கண்ணபிரான் ஏற்றுக் கொள்வான்; ஆட்கொள்வான்.

ஆனாலும், கண்ணனைச் சரணடைதல் மிகவும் உசத்தியான விஷயம். பாண்டவர்கள் அப்படித்தானே இருந்தார்கள்?!

கண்ணன் நாமம் சொல்லும் கதைகள்!

வேளுக்குடி கிருஷ்ணன்




**இ**ந்த உலகிலேயே மிகப்பெரிய பொய்யைச் சொல்லி, உலகத்து மக்களை நம்ப வைத்தவன் யார் தெரியுமா?

வேறு யார்? சாட்ஷாத் கண்ணபிரான்தான்.

அடேங்கப்பா... இல்லாததை இருப்பதாகவும், இருப்பதை இல்லாததாகவும், உண்மையைப் பொய்யாகவும், பொய்யை மெய்யாகவும் எடுத்துரைப்பதில் வல்லவனாயிற்றே அவன்!

சகாதேவன் ஜாதக சாஸ்திரத்தை அறிந்தவன் என்பதால், துரியோதனன் அவனிடம் வந்து, 'யுத்தத்தில் நாங்கள் வெற்றி பெற வேண்டும். அதற்கு நீதான் தேதி குறித்துக் கொடுக்க வேண்டும்' என்று கேட்டான். அமாவாசை நாளைக் குறித்துக் கொடுத்து, 'வெற்றி உங்களுக்கே!' என்றான் சகாதேவன்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த கிருஷ்ண பரமாத்மாவுக்கு வந்ததே கடும் கோபம்..! "துரியோதனன், நம்மிடம் போர் செய்வதற்காகத்தான் தேதி குறிக்கச் சொல்கிறான். நம்மை வெல்வதற்காகத்தான் நல்ல நாள் பார்த்து தரச் சொல்லிக் கேட்டிருக்கிறான். அப்படியிருக்கும்போது, எப்படித் தேதி குறித்துக் கொடுக்கலாம் நீ? சரி... அந்தத் தேதி பொய்யான நாள்தானே?! தப்பான நேரத்தைத்தானே குறித்துக் கொடுத்தாய்?" என்று கண்ணபிரான் கேட்டான்.

சகாதேவன் மெல்லியதாகச் சிரித்தபடி... "ஜோதிட சாஸ்திரத்தைப் பொய்யாக எடுத்துரைப்பது பாவம்! அப்படிச் சொல்வது ஜோதிடத்தையே அவமதிப்பதாகிவிடும். ஒருநாளும் அப்படியரு தவற்றை நான் செய்யமாட்டேன். எனவே, நான் குறித்துக் கொடுத்த தேதியில், அமாவாசை திதியில் யுத்தம் செய்தால்... துரியோதனன் நிச்சயம் வெல்வான். நானும் என் சகோதரர்களும் தோற்கலாம். ஆனால், ஜோதிடத்தை நம் லாப- நட்டங்களுக்காகப் பயன்படுத்திக்

கொள்ளக்கூடாது. ஜோதிட சாஸ்திரத்தில் இருந்து வழுவாமல் இருப்பது இந்த சகா தேவனின் வேலை. கள்ளத்தனம் செய்து, தகிடுதத்தம் பண்ணி, ஜெயிக்கச் செய்வது உன்னுடைய வேலை! அதை நீ பார்த்துக் கொள்!" என்று பளிச்சென்று முகத்துக்கு நேராகச் சொன்னான் சகாதேவன்.

'அதெல்லாம் எனக்குத் தெரியும்' என்று சிரித்துக்கொண்டே வந்த கண்ணபிரான், 14-ஆம் நாளான சதுர்த்தசியன்று, ஆற்றங்கரைக்குச் சென்று தர்ப்பணம் செய்வதில் மும்முரமாக ஈடுபட்டான். அதைக் கண்ட அனைவரும் அதிர்ந்து போனார்கள். 'இதென்ன குழப்பம்! நாளைக்குத்தானே அமாவாசை! கிருஷ்ண பரமாத்மா இன்றைக்குத் தர்ப்பணம் செய்கிறாரே...' என்று பிரகஸ்பதியிடம் கேட்டார்கள். அதே நேரத்தில் சூரியனும் சந்திரனும் குழம்பிப்போன நிலையில் ஒன்று கூடினார்கள். புலம்பித் தீர்த்தார்கள். 'என்ன இது... ஒன்றுமே புரியவில்லையே..?' எனத் தவித்து மருகினார்கள்.

இறுதியாக, ஸ்ரீகிருஷ்ணரிடமே சென்று, "அமாவாசையன்றல்லவா தர்ப்பணம் செய்ய வேண்டும்?" என்று கேட்டார்கள். உடனே, ஸ்ரீகிருஷ்ணர், 'முதலில் அமாவாசை என்றால் என்ன? அதைச் சொல்லுங்கள்?' என்று கேட்டார் சிரித்தபடி. "இதென்ன கேள்வி... சூரிய பகவானாகிய அவரும் சந்திரனாகிய நானும் சந்தித்துக் கொள்வதுதான் அமாவாசை திதி" என்றார் சந்திர பகவான்.

"அதானே அமாவாசை? இதோ... சூரியன் - சந்திரன், நீங்கள் இரண்டு பேரும் இப்போது ஒன்றாகத்தானே இருக்கிறீர்கள்? எனவே, இந்தத் திதி அமாவாசை திதிதானே? அதனால்தான் தர்ப்பணம் செய்கிறேன்" என்று குறும்புப் பார்வையுடன் சொன்னார் ஸ்ரீகிருஷ்ணர். அதுமட்டுமா? "என் அனுஷ்டானத்துக்கு இடையூறு செய்யாதீர்கள். நான் அமாவாசை தர்ப்பணம் செய்யவேண்டும்" என்று சொல்லிவிட்டு, விறுவிறுவென தர்ப்பணம் செய்வதில் ஈடுபட்டார் கிருஷ்ண பரமாத்மா.

அடேங்கப்பா... ஒரு பொய்யை அழகிய நாடகத்தின் மூலம் எப்படி உண்மையாக்கிவிட்டார்! பஞ்ச பாண்டவர்கள் ஜெயிக்க வேண்டும் என்பதற்காக, எப்படி எல்லாம் தந்திரங்களைக் கையாண்டிருக்கிறார்!

இவை அனைத்துக்கும் ஒரே காரணம்...

பாஞ்சாலிதான்! துகில் உறியும் தருணத்தில், கதறியபடி... 'கோவிந்தா' என்று ஒரேயரு திருநாமத்தைச் சொல்லி அழைத்தாள் அல்லவா! அந்த ஒற்றைத் திருநாமம் சொன்னதற்காக, கண்ணன் பட்டபாடு கொஞ்சமா, நஞ்சமா?



கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். ஒற்றைத் திருநாமத்தைச் சொன்னதற்காக, கண்ணன் எப்படியெல்லாம் அன்பு செலுத்தி, வெற்றிக்கு வித்திட்டான். அப்படியெனில், சகஸ்ர நாமங்களையும் நாம் பாராயணம் செய்தால், நமக்குக் கண்ண பரமாத்மா என்னென்ன நன்மைகளையெல்லாம் செய்வான்? நன்றாக யோசியுங்கள். பகவானின் திவ்விய நாமத்தை உச்சரித்தால், அளப்பரிய பலன்களைப் பெறலாம். மறந்துவிடாதீர்கள்!

இந்த உலகம் நன்றாக இருக்கவும், உலகத்து மனிதர்கள் க்ஷேமமாக இருக்க வேண்டும் என்று அனவரதமும் நினைத்துச் செயல்படுபவன் பகவான். இதனால்தான்

அவனுக்கு லோகபந்து எனத் திருநாமம் அமைந்தது. அம்மா, அப்பா, மாமன், மைத்துனன், மனைவி, மக்கள்... என உறவுகள் எல்லோர்க்கும் உண்டு என்றாலும், அவை எதுவும் நிரந்தரமில்லை. ஆனால் பகவான் ஸ்ரீகிருஷ்ணருக்கும் இந்த லோகத்துக்குமான பந்தம், உலகம் இருக்கும் வரைக்குமான பந்தம்; என்றுமே பிரியாத பந்தம்; எல்லோர்க்கும் அனுக்கிரகிக்கிற அற்புதமான பந்தம்!

உலக மாந்தர்கள் அனைவருக்கும் பந்தமாக, சொந்தக்காரனாக இருப்பவன் என்பதால் லோகபந்து! அப்படியெனில் லோக நாயகனும் அவன்தானே! அழகிய மணவாளனாக, செங்கோல் ஏந்தியபடி இந்த உலகத்துக்கே நாயகனாக, உலகநாயகனாக இருந்து ஆட்சி செய்து வருபவன் அல்லவா, பரந்தாமன்! உலகை ஆள்பவன் கையில் செங்கோல் வைத்து ராஜ பரிபாலனம் செய்திருப்பான். ஸ்ரீரங்கத்தில் செங்கோலுடன் காட்சி தருகிறான் ஸ்ரீஅழகிய மணவாளன்! இதனால் பரம்பொருளுக்கு ஸ்ரீலோகநாதஹ: எனும் திருநாமம் அமைந்தது.

ஆக, லோகபந்து, லோகநாதன் என்று திருநாமங்களுக்கான காரணங்களைப் பார்த்தோம்.

கையில் செங்கோலுடன் பரந்து விரிந்த உலகை ஆள்பவன், எத்தனை கவலைகளுடனும் ஆவேசத்துடனும் பரபரப்புடனும் இருப்பான்? அவனிடம் கருணையை எவ்விதம் எதிர்பார்க்க முடியும்?

"அதைப் பற்றி நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்? அவருடனேயே இருந்து உங்களுக்கெல்லாம் கருணையையும் அருளையும் வாரி வழங்க நானிருக்கிறேன்" என்கிறாள் பெரியபிராட்டி.

அதுவும் எப்படி? பக்கத்திலோ

அருகிலோ எதிரிலோ இருந்தால் கூட, அடியவர்களைப் பற்றி எடுத்துச்

சொல்ல சற்றே தாமதமாகும் என்று நினைத்தவள், திருமாலின் திருமார்பிலேயே குடியமர்ந்தாள். என்னே ஒரு கருணைத் தெய்வம் அவள்!

பெண்ணின் குணநலன்களால்தான் ஒரு ஆண் உயர்வு பெறுவான்; பெறமுடியும். அப்படியரு உயர்வைப் பரந்தாமன் பெற்றதால், அவனுக்கு மாதவஹ: எனும் திருநாமம் அமைந்தது.



வேளுக்குடி கிருஷ்ணன்






***மா*** எஎன்றால் அம்மா; தாயார். அவளின் சிபாரிசுடன் அவள் சொன்னபடி நமக்கு அருள்பவன் அல்லவா கண்ணன்! எனவே, 'மாதவன்' எனும் திருநாமமும் மகத்தானது.

நல்லதும் கெட்டதும் நாராயணன் அறிவான். நன்மையை வழங்குவோரையும் தீமையைத் தருபவர்களையும் அவன் அறியாமல் வேறு எவர் அறிவார்? அதனால்தான் பஞ்ச பாண்டவர்களுடனேயே இருந்து அவர்கள் வெல்வதற்கு அத்தனை முஸ்தீபுகளையும் செய்து, வெற்றி பெறச் செய்தான் ஸ்ரீகிருஷ்ணன். நாச சிந்தனை கொண்ட கௌரவர்களை, துரியோதனக் கூட்டத்தை துவம்சம் செய்தான்.

நல்ல சிந்தனைகளை வளர்த்துக்கொண்டு நல்லவிதமாகச் செயல்பட்டால்தான் உங்களின் அடுத்த சந்ததி, நோய் நொடியில்லாமல், கல்வியும் ஞானமும் கொண்டு சிறப்புற வாழும். சந்ததிகள் மீது அக்கறை இல்லாதவர்கள் இங்கே, எவருமில்லை.

ஆகவே, நல்ல சிந்தனைகள், நல்ல செயல்பாடுகள் உங்களிடம் இருந்தால், அவனது திருநாமத்தைச் சொல்லிக் கொண்டிருந்தால்... உங்களிடம் ஓடிவருவான் அந்த நாராயணன்!

அத்தனை வாத்ஸல்யமானவன், அவன்! அதனால் அவனுக்கு 'பக்த வத்சலன்' எனும் திருநாமம் அமைந்தது.

பக்தி என்பது வேறு; சரணாகதி என்பது வேறு. பக்தியுடன் ஒருவன் இருந்தால், அவனுடைய மரண வேளையில், பகவானை நினைத்துக் கொண்டிருக்க வேண்டும். அப்படி நினைத்தால், அவனுக்கு நற்கதி கிடைக்கச் செய்வான் பரந்தாமன். மாறாக, இறக்கும் வேளையில் அவன் என்ன நினைக்கிறானோ... அப்படியாகவே பிறப்பெடுப்பான்.

இப்படித்தான் ஒருவன்... மரணப் படுக்கையில் கிடந்தான். எதிரில் அவன் கண்ணுக்கு எதிரே விளையாடிக் கொண்டிருந்த மான் குட்டியைப் பார்த்தான். 'அடடா... இந்த மான்குட்டி எவ்வளவு

அழகு' என்று பிரமித்தான். 'சிறு வயதில் இருந்தே இந்தக் குட்டியை நாம்தானே வளர்த்து வருகிறோம்' என்று நினைத்து மகிழ்ந்தான். 'சரி... என் மறைவுக்குப் பிறகு, இந்த மானுக்கு யார் தண்ணீர் தருவார்கள்; உணவு கொடுப்பார்கள்?' என மானைப் பற்றிய நினைப்பிலேயே இருந்தவன்... இறந்து போனான். இதனால் அவன் அடுத்த பிறவியில் மானாகப் பிறந்தான்! ஆக, பக்தியுடன் திகழும் ஒருவர், தன் இறுதிக் காலத்தில் பகவானை நினைத்தால்தான் பகவானை அடையமுடியும்.

ஆனால் சரணாகதி அடைகிற சிந்தனையுடன் திகழ்பவனுக்கு அதெல்லாம் இல்லை. 'உன்னைத் தவிர வேறு கதியே இல்லை எனக்கு. நீதான் என்னை வழிநடத்தணும்; நீதான் என்னைக் காபந்து செய்யணும்; நீதான் என்னை ஆட்கொள்ளணும்' என்று இறைவனிடம் எவனொருவன் சரணாகதி அடைகிறானோ, அவன் தன் இறுதிக் காலத்தில், கடவுள் பற்றி நினைக்கத் தேவையே இல்லை. 'என்னிடம் சரணாகதி அடைய நினைப்பவர், மரண வேளையில் என்னை நினைக்க வேண்டும் என்று அவசியமில்லை. அவர் நினைவு தப்பியபடி மரணத்தைத் தழுவினாலும் நான் நினைவில் வைத்திருந்து, அவனை ஆட்கொள்வேன்; என் திருவடியில் அவனைச் சேர்த்துக் கொள்வேன்' என்கிறார் பகவான் ஸ்ரீகிருஷ்ணர். அதுதான் ஸ்ரீகிருஷ்ண மகிமை!





நாம் எல்லோரும் நினைத்துக் கொண்டிருக்கிற ஒரு விஷயம்... உலகாயத விஷயங்களில் தெளிவாக இருக்கிறோமோ இல்லையோ... கடவுள் பற்றிய விஷயத்தில் மிகத் தெளிவாக இருக்கிறோம். தினமும் காலையில் எழுந்து குளித்ததும், ஒரு கால் மணி நேரமோ அரை மணி நேரமோ, அவனை நினைப்பதற்கும் துதிப்பதற்கும் நேரத்தை ஒதுக்கி விடுகிறவர்கள்தானே நாம்?! அப்படி வணங்கி வழிபடுவதை, மிகத் தெளிவாகச் செய்து வருவதாகச் சொல்லிக் கொள்ளவும் செய்கிறோம், அல்லவா?

ஆனால் மிகத் தெளிவாகச் சிந்திக்கக் கூடிய மகா ஞானி யான விதுரனை, பகவான் ஸ்ரீகிருஷ்ணர் எதற்காக பரவசம் பொங்க ஏற்றுக் கொண்டார் தெரியுமா?

எவர் அழைத்தும் போகாமல், விதுரனின் வீட்டுக்குச் சென்றார் ஸ்ரீகிருஷ்ணர். 'நம்ம வீட்டுக்காவது, கிருஷ்ண பரமாத்மாவாவது, வருவதாவது' என நினைத்திருந்த விதுரன், அவரின் வருகையைக் கண்டு நிலை தடுமாறினான். இங்கும் அங்குமாக அலைந்தான். என்ன செய்வது என்று பரபரத்தான். ஏதேனும் சாப்பிடக் கொடுக்க வேண்டுமே... என்று நினைத்துக் கொண்டே, அடுப்படிக்கு ஓடினான். 'அடடா... ஒண்ணுமே இல்லையே...' என்று அல்லாடினான். கண்ணில், வாழைப்பழங்கள் தென்பட்டன. அப்படியே அள்ளியெடுத்துக் கொண்டு, கிருஷ்ணரிடம் வந்து, 'கிருஷ்ணா... இப்போது என்னிடம் இருப்பது இவை மட்டுமே! மறுக்காமல் சாப்பிட்டு, உன் பசியை ஆற்றிக் கொள்வாயாக!' என்று கெஞ்சினான். அந்தப் பழத்தை வாங்க மறுத்துவிட்டார் கண்ண பரமாத்மா!

'கண்ணன் எப்பேர்ப்பட்டவன். அவன் நம் வீட்டு வாசலை மிதித்ததே மிகப் பெரிய புண்ணியம். நம் வீட்டிலெல்லாம் சாப்பிடுவானா?' என்று யோசித்தபடியே... 'பசியாயிருக்குமே கண்ணா... அதான்... இந்தப் பழங்களை...' என்று தயங்கித் தயங்கிச் சொன்னான்.

உடனே ஸ்ரீகிருஷ்ணர், "உன் கலக்கமே என் பசியை ஆற்றிவிட்டது விதுரா" என்றார். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. அதேநேரம், 'ச்சே... வீட்டுக்கு வந்தவரை, ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவை இப்படியா நிற்க வைத்து உபசரிப்பது?' என்று தன்னைத் தானே நொந்து கொண்டவன்... ஓடிப் போய் ஓர் ஆசனத்தை எடுத்து வந்து அவருக்கு அருகில் வைத்து, அமரச் சொன்னான். முன்னதாக, அந்த ஆசனத்தைத் தடவித் தடவிப் பார்த்துக் கொண்டே இருந்தான்.

'என்னடா இது? நம் வீட்டுக்கு ஒருவர் வந்துவிட்டால், அவரை நாற்காலி அல்லது சோபாவில் உட்காரச் சொல்லி விடுவோம். ஆனாலும் இந்த விதுரன் ஏன் இப்படி அந்த ஆசனத்தை இவ்வளவு நேரம் தடவித் தடவிப் பார்த்தபடி இருக்கிறான்?' என்று குழப்பம் வருகிறதுதானே, நமக்கு?!

'நான் துரியோதனனின் உப்பைச் சாப்பிடுகிறவன். அவன்தான் எனக்குச் சோறு போடுகிறான். பாண்டவர்களுக்காக கண்ணன் தூது வந்தபோது, மிகப்பெரிய பள்ளம் தோண்டி, அதன் மேல் கம்பளம் விரித்து, அந்தக் கம்பளத்தின் மீது ஆசனமிட்டு கண்ணனை உட்காரச் செய்தான் துரியோதனன். ஸ்ரீகிருஷ்ணரின் பாரம் தாங்காமல், அந்த இருக்கை முறியவே... அவன் அந்தப் பள்ளத்திற்குள் விழுந்தான். அங்கிருந்த வீரர்கள் அவனைச் சிறைப்பிடிப்பதற்காக நின்றிருக்க... அப்போது கண்ணபிரானின் திருவடியானது பூமியைத் தொட்டபடி இருக்க, அவன் திருமுடியோ... அந்த ஆகாயத்தைத் தொட்டபடி விஸ்வரூபமெடுத்து நிற்க, அந்த வீரர்கள் திகைத்துப் போனார்கள். திண்டாடினார்கள். தலைதெறிக்க அலறியடித்துக் கொண்டு ஓடினார்கள்' என்று மிக அழகாக விவரிக்கிறார் வேதவியாசர்.

சரி... அந்த ஆசனத்தை ஏன் தடவித் தடவிப் பார்த்தபடியே இருந்தான் விதுரன்?!

துரியோதனனின் சாப்பாட்டில் வளர்ந்த நாம், அவனைப் போலவே சிந்தனை கொண்டு, சுயநினைவின்றி, பகவான் ஸ்ரீகிருஷ்ணரை அவமானப்படுத்தும் வகையில் ஏதேனும் பள்ளம் தோண்டி வைத்திருக்கிறோமோ... அந்த ஆசனத்தில் ஊசியைச் செருகி வைத்து, இம்சிக்கச் செய்திருக்கிறோமோ... துரியோதனின் சாப்பாட்டை சாப்பிட்ட எனக்கு, அவன் புத்தியானது நம்மையும் அறியாமல் வந்திருக்குமோ... எனப் பதைபதைத்தானாம் விதுரன்.

'விதுரா... கவலை எதற்கு? என் பசியை ஆற்றிவிட்டாய் நீ. நான் வந்ததும் என்ன செய்வது, என்ன தருவது என்று தெரியாமல் கலங்கித் தவித்தாயே... அந்த உன் கலக்கமே என் பசியைப் போக்கிவிட்டது. அதனால்தான் நீ பழம் தந்ததும் வேண்டாம், பசியாறிவிட்டேன் என்று சொன்னேன்" என்றார் ஸ்ரீகிருஷ்ணர்.

எவ்வளவு பெரிய ஞானி விதுரன்! ஆனால் அந்த ஞானியின் கலக்கத்தைக் கண்டு ரசித்தான் கண்ணபிரான்.

ஞானிகளிடம் தெளிவு இருப்பதை பகவான் விரும்புவதே இல்லை. எவனொருவன், ஒரு விஷயத்தைக் கண்டு கலங்கித் தவிக்கிறானோ அவனே ஞானி. அப்படி ஞானியாகத் திகழ்பவரையே மதிக்கிறான்; அருள்கிறான்; அரவணைக்கிறான்; ஆட்கொள்கிறான் ஸ்ரீகண்ண பரமாத்மா என அற்புதமாக விளக்குகிறார் வேதவியாசர்.

உலக விஷயங்களில் தெளிவாக இருங்கள்; பகவத் காரியத்தில் கொஞ்சம் கலங்கி, குழம்பியபடியே இருங்கள். குழப்பங்களுக்குத்தான் விடை கிடைக்கும்; கலங்கியபடி இருப்பவர்களுக்குத்தான் கடவுளின் பேரருள் கிடைக்கும்!




'**வை**குண்டம் புகுவது மண்ணவர் விதியே!' என்பார்கள். திருமால் குடிகொண்டிருக்கும் வைகுண்டத்துக்குச் சென்று, அவன் திருவடியைப் பற்றிக்கொள்ள வேண்டும் என்பதை விரும்பாத மனிதர்கள் இருக்கிறார்களா, என்ன?

கோயிலுக்குச் சென்று, பெருமாளின் திவ்விய ரூபத்தை சேவித்துப் பிரார்த்தித்து, அவனுடைய அடியவன் என்று சொல்லிக் கொள்வதில் ஆனந்தப்படுகிற பக்தர்கள், 'என்னை வைகுண்டத்துக்கு அழைச்சுக்கோ பகவானே' என்று ஒருகட்டத்தில் பிரார்த்திக்கின்றனர்.

'பதம் அநுத்தமம்' என்றொரு சொல் உண்டு. பதம் என்றால் இடம்; அநுத்தமம் என்றால், அதை விட வேறில்லை என்று அர்த்தம். அதாவது, நாம் அடைக்கலம் அடைவதற்கு பரந்தாமன் குடிகொண்டிருக்கிற வைகுண்டத்தைவிட ஆகச் சிறந்த இடம் வேறில்லை என்று பொருள்!

நிறைவில் இறைவனிடம் அப்படித்தான் வேண்டுகிறோம். ஆனால், ஆரம்பத்தில்... பகவானின் திருமேனியில் சிலிர்த்துப் போகிறோம்; அப்பேர்ப்பட்ட பொன்னான திருமேனி உடையவன் ஸ்ரீபகவான். அதனால்தான் அவனுக்கு 'ஸ்வர்ண வர்ணஹா' எனும் திருநாமம் அமைந்தது.

'என்ன இது குழப்பம்! கண்ணபிரான் நீலமேக சியாமளன் ஆயிற்றே... அவனுடைய நிறம் கறுப்பும் நீலமும் கலந்தது அல்லவா! அப்படியிருக்க, ஸ்வர்ண வர்ணம் என்று சொல்லி அதைக் கொண்டே திருநாமம் சூட்டியிருக்கிறார்களே..?!' என்று குழப்பம் அடைகிறீர்களா?

ஸ்வர்ணம் என்றால் பொன்; ஸ்வர்ண வர்ணம் என்றால் பொன்னின் நிறம் என்று அர்த்தம். ஆனால், கண்ணபிரான் நீல வண்ணம் கொண்டவன்தான். ஆனால், அவன் திருமேனி எந்த நிறத்தில் இருந்தால் என்ன... அவன் பொன்னின் நிறத்தைப் போல ஜொலிஜொலிக்கிறான்; தங்க

நிறத்தில் தகதகக்கிறான். அதாவது, தங்க நிறத்தைப்போல் ஒளி கொண்டு திகழ்கிறான் என்று அர்த்தம்.

'சரி... கண்களும் தலைமுடியும் கறுப்பு நிறத்தில்தானே இருக்கும்? அதுவுமா தங்க நிறத்தில் காட்சி தந்தது?!' என்கிறீர்களா?

இன்றைய காலகட்டத்தில், தலைமுடியை 'அப்படிப் பண்ணிக்கிறேன்... இப்படி செஞ்சுக்கறேன்' என்கிறார்கள். 'ப்ளீச் ' பண்ணிக்கொண்டு, செம்பட்டை நிறத்தில் முடியை மாற்றிக் கொள்கிறார்கள். அப்படி முடியின் நிறத்தை மாற்றிக் கொள்வதற்காக ஏகப்பட்ட செலவுகளைச் செய்கிறார்கள்.

ஆனால், கருமை நிறக் கண்ணனான பரமாத்மாவின் தலைமுடியும் கண்களும் கறுப்பு நிறமாகத்தான் தெரிந்தன. அதேநேரம், கண்ணபிரானின் மேனியெங்கும் ஒருவித ஒளி படர்ந்து, பரவியிருந்தது. கறுப்பு நிறத்தில்கூட, தங்க நிற ஒளி பிரகாசமாக ஜொலித்தபடி காட்சி தந்ததாம்!

இன்னொரு விஷயம்... சாஸ்திரப்படி மீசை வைத்துக் கொள்ளக்கூடாது என்பார்கள். ஆனால், ஆயர் குலத்தில் பிறந்தவன் என்பதால் மீசை வைத்திருந்தானாம் ஸ்ரீகண்ணபிரான். 108 திவ்விய தேசங்களில், எத்தனையோ திருக்கோலங்களில் பகவான் திருக்காட்சி தந்தாலும், பெரிய மீசையுடன் ஸ்ரீவேங்கடகிருஷ்ணனாக, ஸ்ரீபார்த்தசாரதிப் பெருமாளாகக் காட்சி தருவது திருவல்லிக்கேணி திருத்தலத்தில்தான்!



சென்னை, திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தசாரதியின் திவ்வியமான மேனியைத் தரிசித்தால், அவன் ஸ்வர்ண வர்ணன் என்பதை அறிந்து சிலிர்ப்பீர்கள். 'பரஞ்ஜோதி' அல்லவா பரம்பொருள்!

அதேபோல், 'வீரஹ' எனும் திருநாமமும் அவனுக்கு உண்டு. வீரமானவன் என்று அர்த்தம்.

அந்த வீரம் எப்படி இருக்க வேண்டும் என்பதைச் சொல்லாமல் செயல் மூலமாகவே உணர்த்தியிருக்கிறான்.

போஜனப் பாத்திரத்தில் மிச்சம் வைக்கவேண்டும்; தீர்த்தப் பாத்திரத்தில் மிச்சம் வைக்கக்கூடாது என்பார்கள். அதாவது, சாப்பிடுகிற இலையில் மிச்சம் வைத்தால், அவற்றை நாயோ பூனையோ சாப்பிடும். ஆகவே, மீதம் வைக்க வேண்டும். உணவு முடிந்ததும் பக்கத்தில் வைத்திருக்கிற சொம்புத் தண்ணீரை மீதம் வைக்காமல் குடித்தால்தான், அந்தத் தண்ணீரானது உணவைக் கரைக்கவும் செரிக்கவும் வைப்பதற்கு பேருதவி செய்யும்!

அதேபோல், மிச்சம் வைக்கக்கூடாத முக்கியமான விஷயங்கள் என்னென்ன தெரியுமா? சத்ருக்கள் எனப்படும் எதிரிகளை ஒருபோதும் மிச்சம் வைக்கவே கூடாது! எதிரிகளில் மிச்சசொச்சமாக ஒருவரேனும் இருந்துவிட்டால், அவரால் நமக்கு எப்போது வேண்டுமானாலும் தொல்லைகள் நேரலாம்.

ஸ்ரீராமருக்கும் ஸ்ரீகிருஷ்ணருக்கும் உள்ள முக்கியமான வித்தியாசமும் இதுதான்!

அதாவது, ஒவ்வொரு முறையும் ஒருவரை மிச்சம் வைத்துக்கொண்டே வந்து, அவர்களால் தொல்லைகளையும் அனுபவித்து, பிறகு அழித்தொழித்தான் ஸ்ரீராமபிரான். எல்லோரையும் அழித்தபோது மாரீசனை மட்டும் விட்டுவிட்டான் ஸ்ரீராமன். பிறகு, அவனால் வந்த விளைவைச்

சந்தித்தான். அதேபோல், சூர்ப்பணகையைக் கொல்லாமல், அவள் காது- மூக்கை மட்டும் சேதப்படுத்தி அனுப்பி வைத்தான். அவளும் அழுதுகொண்டே அண்ணனிடம் சென்று முறையிட்டாள்.

இப்படி... எதிரிகளை மிச்சம் வைத்து, அதனால் தொல்லைகளை அனுபவித்த பிறகுதான் அழித்தான் ஸ்ரீராமன். ஆனால் ஸ்ரீகண்ண பரமாத்மா, துரியோதானாதிகள் ஒருவரைக்கூட விடாமல் அழித்தொழித்தான். அதனால்தான் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவுக்கு 'வீரஹ' எனும் திருநாமம் அமைந்ததுபோலும்!

அப்படி வீரனாக, முறுக்கு மீசை கொண்ட சூரனாக இருந்தாலும், கண்ணனைப் போல கருணையாளன் வேறு எவருமில்லை.

'பணமும் பத்தா இருக்கணும்; குணமும் முத்தா இருக்கணும்' என்பார்கள். இங்கே பணத்தைப் பார்க்கவேண்டாம்; குணத்தைப் பார்ப்போம்.

ஸ்ரீகிருஷ்ணனுக்கு 'ஹேமாங்கஹ' எனும் திருநாமம் உண்டு. ஹேமம் என்றால் சுத்தமான, சாத்விகமான திருமேனியைக் கொண்டவன் என்று அர்த்தம். சுத்தமான திருமேனி கொண்ட கிருஷ்ணரைத் தரிசிக்க தரிசிக்க... அவனையே அனவரதமும் நினைந்துருக உருக... நம் மனமும் சுத்தமாகும். நமக்கு உள்ளேயும் சாத்விக குணம் பரவும்! அதனால்தான் 'கண்ணா கண்ணா...' என்றோ, 'கிருஷ்ணா கிருஷ்ணா...' என்றோ நாம் அடிக்கடி உச்சரிக்கிறோம்.

வீரன் என்று குறிக்கும் வகையில் ஒரு திருநாமம்; எதிர்மறையாக, அமைதியான சாத்விக மேனி கொண்டவன் என்று குறிப்பிடும்படியாகவும் ஒரு திருநாமம். இவை தவிர, எல்லோருக்கும் தெரிந்த அவனுடைய இயல்பான குணத்தைக் கொண்டும் ஒரு திருநாமம் உண்டு. ஆம்... விஷமங்கள் செய்வதில் சூரனான கண்ணபிரானுக்கு 'விஷமஹ' எனும் திருநாமமும் உண்டு!

# கண்ணன் நாமம் சொல்லும் கதைகள்!

வேளுக்குடி கிருஷ்ணன்




இந்த உலகில், மிக அதிக விஷமங்கள் செய்யக் கூடியவன் கண்ணபிரான்தான்! விஷமம் என்றால் சாதாரண குறும்பு அல்ல; வெறும் சேட்டைத்தனம் மட்டுமே அல்ல!

அவன் வெண்ணெயைத் திருடிச் செல்வான் என்று நினைத்திருக்கும்போது, தாழியையே எடுத்துச் சென்றிருப்பான். மண்ணை எடுத்துத் தின்பான் என்று பார்த்தால், தன் வாயில் இருந்து ஏழு லோகங்களையும் காட்டி அதிசயிக்கச் செய்வான்!

எளியவனாகவும் இருப்பான் கண்ணன். சரி, எளியவன்தானே என்றிருந்தால், பெரியவனாகவும் மாறி, நம்மை மிரட்டுவான். 'உன்னைப் போல் என்னிடம் ஒரே விதமான பக்தியை எவர் கொண்டிருக்கிறாரோ, அவரை எப்போதும் நான் கைவிடமாட்டேன்' என்று அர்ஜுனனிடம் உபதேசித்திருக்கிறான் ஸ்ரீகிருஷ்ணன். ஆனாலும், விஷம குணங்களைக் கொண்டவன் அவன்!

பசுக்கள் மீது பிரியம் கொண்டு, அவற்றை அழகாக மேய்ச்சலுக்கு இட்டுச் செல்வான் கண்ணபிரான். அதேநேரம், பசுவில் இருந்து கிடைக்கும் நெய்யின் மீதும் அவனுக்கு அலாதி விருப்பம் உண்டு. குன்றிருக்கும் இடத்தையே பெயர்த்துத் தூக்கி வருவான் கண்ணன்; அதே வேளையில், ஒரு கல்லாக அகலிகை இருந்தாலும், அந்தக் கல்லுக்கு உயிர் தந்து, விமோசனம் தருவான் பகவான்!

இதனால்தான் இறைவனுக்கு 'விஷமஹ' எனும் திருநாமம் அமைந்தது. இத்தனை விஷமங்களைக் கொண்டிருந்தாலும், விகல்பம் இல்லாதவன் கண்ணன்! வேறுபாடுகள் பார்க்காமல் அனைவருக்கும் அருள்பாலிப்பவன். அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்து, அவர் இவர் என்றில்லாதபடி எல்லோரையும் அரவணைத்து அருள் புரியும் வள்ளல் அவன்!

அடுத்து, 'சூன்யஹ' எனும் திருநாமமும் ஸ்ரீகண்ணபிரானுக்கு உண்டு.

'சூன்யஹ' என்றால் 'எந்தக் குற்றமும் இல்லாதவன்' என்று அர்த்தம். 'ஹிரண்யகசிபுவின் நெஞ்சைப் பிளந்தவன்தான் பரமாத்மா என்றாலும், அவனைப் போல் புனிதன் வேறு எவருமில்லை! எல்லோரும் பயப்படும்படியாக கடும் உக்கிரத்துடன் சிம்ம முகத்துடன் தோன்றினாலும், அவனைப் போல் கருணாமூர்த்தி எவரும் இல்லை.

விஷமமும் சூன்யம் அற்ற நிலையும் கொண்ட பரமாத்மாவின் விந்தையான செயல்பாடுகள் கொஞ்சமா நஞ்சமா?

ராவணன் ராட்சசன்; அவனை அழித்த ஸ்ரீராமர், விபீஷணனை மட்டும் விட்டுவிட்டார். குரங்கினத்தைச் சேர்ந்த வாலியை வதம் செய்த பரப்பிரும்மம், அதே குரங்கினத்தைச் சேர்ந்த சுக்ரீவனை ரட்சித்து, மன்னித்தது. ஹிரண்யகசிபுவின் நெஞ்சைப் பிளந்து, கொடூரமாகக் கொன்றாலும்கூட, பிரகலாதனை ஆட்கொண்டு அருளினார்.

அசுரர்கள், ராட்சசர்களை அழித்திருந்தாலும், பகவானுக்கு எந்தக் குற்றமும் இல்லை; எந்தப் பாபமும் கிடையாது! அதனால்தான் 'சூன்யஹ' என்கிற திருநாமம் பகவானுக்கு வந்தது. புனிதமானவனை எதுவும் தீண்டாது என்பதை நமக்கு இங்கே சொல்லாமல் உணர்த்துகிறார் பகவான்!

இறைவன், புனிதமானவனாகத்தான் இருப்பான். நாம் புனிதனாக வேண்டாமா? நமக்குள் இருக்கிற தீய எண்ணங்களும் துர்குணங்களும் அகல வேண்டாமா? சக உயிர்களிடமும் மனிதர்களிடமும் அன்பு பரிமாறிக்கொள்ள வேண்டாமா? தீய சக்தி அழிந்து இறைச் சக்தியானது நம்முள் இரண்டறக் கலக்க வேண்டாமா? வேண்டும்தானே!

அதற்காகத்தான், பகவான் இன்னொரு காரியத்தையும் செய்கிறான். அதாவது 'என் குணங்களை இந்த உலகம் முழுவதற்குமாகத் தெளித்துத் தெளித்துக் கொடுத்துக் கொண்டிருக்கிறேன்' என்கிறான்.

தன்னுள் இருக்கிற ஆனந்தத்தை, பரிபூரணத்தை, உலகம் முழுக்க உள்ள மக்களுக்குத் தெளித்தபடி தந்தருள்கிற ஸ்ரீகண்ண பரமாத்மா, எத்தனை கருணையுள்ளவன் பாருங்கள்!

பூமி மொத்தத்துக்கும் ஆனந்தம் தருகிற அந்த வள்ளலை, 'க்ருதாஸிஹி' என்று திருநாமம் சொல்லிப் போற்றுகின்றனர், பெரியோர். 'க்ருத' என்றால் பூமி. அதாவது, பூமியை ஆனந்தப்படுத்திக் கொண்டிருப்பவன் என்று அர்த்தம்.



யாதவ குலத்தைச் சேர்ந்த கண்ணபிரான், உலகுக்கே ஆனந்தம் தருவதை எப்படிச் சொல்லிப் பூரிக்கிறார்கள் தெரியுமா? 'தன் வீட்டு நெய் மீது மட்டும் பிரியம் வைத்திருக்காமல், அடுத்தவர் வீட்டு நெய்யின் மீதும் விருப்பம் உள்ளவனாகத் திகழ்கிறான் ஸ்ரீகண்ணன்' என்கிறார்கள்.

நமக்குத்தான் விருப்பு- வெறுப்பு என்பதெல்லாம் உண்டு. அவனுக்கு விருப்பு மட்டுமே உண்டு; வெறுப்பு என்பதே எவரிடமும் எதன் பொருட்டும் இல்லை.

'அசலன்- சலன்' என்பார்கள். எக்காரணம் கொண்டும், எந்தச் சூழ்நிலையிலும் எவ்விதச் சலனமும் இன்றி இருப்பவனே அசலன்! அசைவற்றிருப்பவன் அசலன். மலை என்பது எவ்வளவு பிரமாண்டம். அந்த பிரமாண்ட மலையானது அசையுமா என்ன? ஸ்ரீகண்ணபிரான், அசைவே இல்லாதிருக்கும் மலையைப் போன்றவன் என்று திருநாமம் சொல்லிப் போற்றுகிறார்கள் வைணவ ஆச்சார்யர்கள்.

துரியோதன சபையில் முக்கியமானவர்கள் அனைவரையும் அழைத்தானாம் திருதராஷ்டிரன். எல்லோரும் காரணம் தெரியாமல் குழம்பியபடி அங்கே வந்து அமர்ந்திருக்க, திருதராஷ்டிரன்...

"பஞ்சபாண்டவர்களின் பக்கம் இருக்கிற கண்ணபிரான், நாளை இங்கு வருகிறான். அவன் வரும்போது, ஏராளமான கிராமங்களையும் செல்வங்களையும் அவனுக்குத் தந்துவிடலாம். அதில் மகிழ்ந்து போகும் ஸ்ரீகிருஷ்ணன், பஞ்சபாண்டவர்களை 'அம்போ' என விட்டுவிட்டுச் சென்று விடுவான்" என்று சொன்னான்.

உடனே அங்கிருந்த சஞ்சயன், "பூரண கும்ப மரியாதைக்கே மயங்காதவன் ஸ்ரீகண்ணன். அவனா, நீங்கள் தருகிற சொத்து - பத்துகளுக்கு மயங்கிவிடப் போகிறான்?! அவன் இதற்கெல்லாம் அசையவே மாட்டான். அன்புக்கும் சத்தியத்துக்கும் கட்டுப்பட்டவன் கண்ணபிரான்!" என விளக்கினான்.

உண்மைதான். சலம் என்றால் மலை. இங்கே, சென்னை- வேலூர் சாலையில், சோளிங்கர் எனும் அற்புதமான தலம் உள்ளது. இதனை கடிகாசலம் என்பார்கள். கடிகை என்றால் ஒரு நாழிகை என்று அர்த்தம். அதாவது, இந்த இப்பிறவியில் ஒரேயரு நாழிகை, இந்த மலையின் மீது அமர்ந்து இறைவனை நினைத்தால் போதும்... நம் பாவமெல்லாம் பறந்தோடிவிடும் என்பது ஐதீகம்!

"சரி... எதற்கும் அசையாது, மலையென உறுதியுடன் இருக்கும் கண்ணபிரானுக்கு கிராமங் களையும் ஆபரணங்களையும் தருவதாகச் சொன்னீர்களே... ஸ்ரீகிருஷ்ணனுக்குப் பதிலாக, பஞ்சபாண்டவர்களுக்கு அந்த நிலங்களைத் தந்துவிட்டால், இந்தச் சண்டைக்கும் யுத்தத்துக்குமே வேலை இருக்காதே!" என்று கேட்டானாம்

சஞ்சயன். கூடவே, திருதராஷ்டிரனைப் பார்த்து, "உனக்கு ஊனக்கண்தான் இல்லையென்று நினைத்திருந்தேன். இப்போதுதான் தெரிகிறது, உனக்கு ஞானக்கண்ணும் இல்லையென்று!" என்று சொல்லிச் சிரித்தானாம்.

இந்த திருதராஷ்டிர புத்தி, பல தருணங்களில் நமக்கும் இருக்கத்தான் செய்கிறது. சாட்சிக்காரன் காலில் விழுவதைவிட சண்டைக்காரன் காலில் விழுந்துவிட்டால், சண்டை சச்சரவுக்கு வேலையே இல்லைதானே?!

கண்ணன் நாமம் சொல்லும் கதைகள்! வேளுக்குடி கிருஷ்ணன்




***பீ***ஷ்மர், சரமாரியாக அம்புகளை விட்டுக்கொண்டே இருந்தார். அத்தனை அம்புகளும் ஸ்ரீகிருஷ்ணரின் முகத்தில் வந்து காயத்தை ஏற்படுத்தியபடி இருந்தன. 'எந்தச் சூழலிலும் ஆயுதம் எடுக்கமாட்டேன்' என்று பகவான் ஸ்ரீகண்ணபரமாத்மா செய்து கொடுத்த சத்தியம் அர்ஜுனனுக்கு நினைவுக்கு வந்தது. இதனால் ரொம்பவே கலவரமாகிப் போனான் அவன்.

இந்தச் சத்தியத்தைத் தெரிந்து வைத்திருந்த பீஷ்மர், மேலும் மேலும் அம்புகளை விட்டுக்கொண்டே இருந்தார். எல்லா அம்புகளும் கிருஷ்ண பரமாத்மாவின் திருமுகத்தில் காயங்களை ஏற்படுத்திக்கொண்டே இருந்தன. அவை அனைத்தையும் சிரித்த முகத்துடன் தாங்கிக்கொண்டார் ஸ்ரீகிருஷ்ணன்.

அதுமட்டுமா? அதே சிரித்த முகத்துடன், திருமுகத்தில் உண்டான அத்தனைத் தழும்புகளுடன் இன்றைக்கும் நமக்குத் திருக்காட்சி தந்துகொண்டிருக்கிறார் திருவல்லிக்கேணி திவ்விய தேசத்தில்!

ஒருவேளை போர் முனைக்கு ஸ்ரீருக்மிணிதேவியும் வந்திருந்தால் என்னாகியிருக்கும்?

அவனுக்கு முன்னே நின்றபடி, அத்தனை அம்புகளையும் தடுத்திருப்பாள் தழும்புகள் இல்லாத கிருஷ்ண பரமாத்மாவாக இருந்திருப்பார், பகவான்!

ஸ்ரீருக்மிணிதேவி வராததும் ஒருவகையில் நல்லதுக்குத்தான்! அப்படி அவள் வராததால்தான், ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் தழும்பேறிய முக தரிசனம் நமக்குக் கிடைத்திருக்கிறது.

அர்ஜுனன் எனும் உண்மையான பக்தனுக்காக, பாண்டவர்கள் என்கிற நல்லவர்களுக்காக எதையும் தாங்கிக்கொள்வான்; எதனையும் ஏற்றுக் கொள்வான் ஸ்ரீகிருஷ்ணன் என்பதை உலகுக்குக் காட்டுகிற ஒப்பற்ற திருத்தலம் அல்லவா அது?!

ஒருகட்டம் வரை அமைதியாக இருந்து, அத்தனை அம்புகளையும் முகத்தில் வாங்கிக்கொண்ட கண்ணன், அடுத்து அர்ஜுனனுக்கு பீஷ்மர் குறி வைத்தபோது, பொங்கியெழுந்தான். விறுவிறுவென தேரில் இருந்து இறங்கினான். பீஷ்மரை நோக்கி வேகம் வேகமாக நடந்தான். சட்டென்று அவன் கையில் சக்ராயுதம் சுற்றியது. 'ஆயுதத்தையே எடுக்கமாட்டேன் என்று சத்தியம் செய்தாயே கிருஷ்ணா...' என்று எல்லோரும் கேட்பதாக ஒருகணம் தோன்றியது அவனுக்கு.

ஆனாலும், அவன் ஆயுதத்தை எடுத்தான்; சத்தியத்தை மீறினான். 'எனக்கு ஆபத்து வந்தால் அதைப் பொறுத்துக் கொள்வேன். என் அடியவருக்கு ஏதேனும் ஆபத்து என்றால், ஆயுதம் எடுக்கவும் தயங்கமாட்டேன்' என்பதைச் சொல்லாமல் சொல்லி, உலகுக்கு உணர்த்தினான் ஸ்ரீகிருஷ்ணன். அதனால்தான் கண்ணபிரானுக்கு 'சூன்யஹ:' எனும் திருநாமம் அமைந்தது.

சூன்யஹ என்றால், ஒரு தீமையும் துர்க்குணமும் இல்லாதவன் என்று அர்த்தம். தீமைகளுக்கும் துர்க்குணங்களுக்கும் ஆட்படாதவன் என்று பொருள்.

ஸ்ரீகிருஷ்ணரைப் பற்றிச் சொல்லும்போது, அவருடைய அடியவர்களுக்கு அவன் தரும் முக்கியத்துவம் நமக்குத் தெரிகிறது அல்லவா? அப்படி நமக்காக அவன் ஓடோடி வரவேண்டும் என்றால், நமக்காக அவன் எதையும் செய்யத் துணியவேண்டும் என்றால் நாம் காமத்துடன் இருக்கவேண்டும்.

காமம் என்றால் ஆசை என்று அர்த்தம். நாம் ஆசைப்படுவது முக்கியமில்லை; எவரிடம் ஆசை கொண்டிருக்கிறோம் என்பதே முக்கியம். ஸ்ரீகிருஷ்ணரிடம் ஆசை கொண்டு இருப்பதே சிறப்பு. ஸ்ரீகிருஷ்ணப் பிரேமையுடன் இருந்தால்தான், எப்போதும் கிருஷ்ண கைங்கர்யத்திலேயே இருந்தால்தான், அவனுடைய பரிபூரண அருளையும் ஆசீர்வாதத்தையும் நாம் பெறமுடியும். கண்ண பரமாத்மாவின் அருளும் ஆசீர்வாதமும் இருந்துவிட்டால் அறம், பொருள், வீடு என சகல ஐஸ்வரியங்களையும் பெற்றுவிடலாம்.



'பணிவிடை செய்வதைக் காட்டிலும் நிறைவான இன்பம் வேறு எதுவுமில்லை' என்று ஸ்ரீராமனுக்குச் செய்யும் பணிவிடை குறித்து லட்சுமணன் சிலாகித்துச் சொல்கிறார். 'வாக்காலும் மனத்தாலும் காயத்தாலும் (உடல்) இறைவனுக்குப் பணிவிடை செய்யவேண்டும்' என்கின்றனர் ஆன்றோர் பெருமக்கள்.

'வாயினாற் பாடி, மனத்தால் சிந்தித்து, தூமலர்த் தூவித் தொழுவேன்' என்று ஸ்ரீஆண்டாளும் பாடுகிறாள். ஒவ்வொரு வரியிலும் உருகுகிறாள்; தன் உள்ளத்தை அப்படியே பதிவு செய்கிறாள்.

கிருஷ்ண பக்தியை, ஸ்ரீகிருஷ்ணர் மீது கொண்டிருக்கிற பிரேமையை இப்படித்தான் நாமும் கொள்ளவேண்டும். எப்போதும், எந்த நேரத்திலும், எவ்விதமான சூழல் வந்திடினும் ஸ்ரீகிருஷ்ணர் மீது கொண்டிருக்கிற பக்தியை விட்டுவிடவே கூடாது. பூலோகத்திலும் சரி... வைகுண்டத்திலும் சரி... நாம் சந்தோஷமாகவும் நிம்மதியாகவும் இருப்பதற்கு ஸ்ரீகிருஷ்ணர் மீது கொள்ளும் காதலே நமக்கு நல்ல நல்ல பலன்களை ஈட்டித் தரும்.

அந்தக் காலத்தில் ரேடியோ கேட்டவர்கள் அதிகம். ஆகவே, அதில் விளம்பரங்கள் நிறைய வந்தன. பிறகு, தொலைக்காட்சிப் பெட்டி வந்தது. இதிலும் ஏகப்பட்ட விளம்பரங்கள் வருகின்றன. இந்த விளம்பரங்கள் அனைத்துமே நம்மைக் குறி வைத்து, அந்தப் பொருளை வாங்கவேண்டும் என்கிற ஆவலை நமக்குள் தூண்டிவிடுவதற்காகவே திரும்பத் திரும்பச் சொல்லப்படுகின்றன.

ஒரு பொருளுக்கும் நமக்குமான தொடர்பு அங்கே கிடைக்கிறது. அதற்குச் சங்கம் என்று பெயர். அந்தத் தொடர்பு, வாங்குகிற ஆசையை நமக்குள் விதைக்கிறது. அந்த ஆசை, ஒரு கட்டத்தில் அடைந்தே தீரவேண்டும் என்கிற துடிப்பையும் தவிப்பையும் ஏற்படுத்துகிறது. ஒரு பொருளின் மீதான ஆசையே நம்மை இந்த அளவுக்குத் தூண்டிச் செல்கிறபோது, ஸ்ரீகிருஷ்ணர் மீது நாம் வைத்திருக்கும் ஆசை, நம்மை எந்த இடத்துக்கு நகர்த்திக்கொண்டு செல்லும் என நினைத்துப் பாருங்கள்!

அதாவது, ஸ்ரீகிருஷ்ணரைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும் எனில், முதலாவதாக அவர் மீது பக்தி நமக்கு இருக்கவேண்டும். 'நீதாம்பா எனக்கு எல்லாமே!' என்று சரணாகதி அடையவேண்டும். தெரிந்துகொள்ளத் தெரிந்துகொள்ள... பக்தி பெருகும்; ஆசை அதிகரிக்கும்; பிரேமை பொங்கித் ததும்பும்.

'பகவான் ஸ்ரீகிருஷ்ணரைப் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்களேன்' என்று தெரிந்தவர்களிடம் கேட்டுத் தெரிந்துகொள்ளத் தூண்டும். 'கிருஷ்ண பகவான், எப்பேர்ப்பட்டவர் தெரியுமா?' என்று தெரிந்ததைப் பற்றி, எவரிடமேனும் விளக்கத் தோன்றும். அவனுடைய திருநாமங்களைச் சொல்லிச் சொல்லிப் பூரிக்கத் தோன்றும்.

'ஸ்ரீகிருஷ்ணரின் மகோன்னதங்களைச் சொன்னாலும் புண்ணியம்; சொல்லச் சொல்லிக் கேட்டாலும் புண்ணியம்; சொல்பவருக்கும் புண்ணியம்; கேட்டவர்க்கும் புண்ணியம்' என்கிறது கீதை.

அதுவும் எப்படி? அந்தப் புண்ணியம் 21 தலைமுறைக்கும் போய்ச் சேருமாம்!

ஆகவே, ஸ்ரீகிருஷ்ண காதைகளைக் கேளுங்கள்; சொல்லுங்கள்; புண்ணியம் தலைமுறை கடந்து தொடரட்டும்!

வேளுக்குடி கிருஷ்ணன்




நம்மில் நிறையப் பேருக்கு மிகப் பெரிய சந்தோஷம் என்ன தெரியுமா? குழந்தைகள் கேள்விகளால் தங்களைத் துளைத்தெடுப்பதுதான்! 'அட... நம்ம குழந்தை எத்தனை புத்திசாலியா இருக்கு? வாய் கொள்ளாத எத்தனைக் கேள்வி கேட்கறது!' என்று பெருமைப்பட்டுக் கொள்வார்கள் பலரும்.

'அடடா... என்னமாக் கேக்கறான் என் குழந்தை? பதில் சொல்ல முடியாம நானே திணறிப் போற அளவுக்கு மடக்கி மடக்கிக் கேக்கறான்' என்று பெருமைப்பட்டுக் கொள்கிற அதே நேரத்தில், நாம் ஒன்றைக் கவனிக்கவேண்டும்; கடமையெனக் கொண்டு செய்ய முற்படவேண்டும்.

'சீதையை ஏன் ராவணன் தூக்கிச் சென்றான்?', 'அவனுக்கு ஏன் பத்துத் தலைகள்?' 'அனுமன் ஏன் குரங்காகப் பிறந்தான்?' 'அவனுக்கு எப்படி இத்தனை பலம்?' என்று குழந்தைகள் கேட்கிற கேள்விகளுக்கு உங்களுக்குத் தெரிந்தால், பதில் சொல்லுங்கள். இல்லையெனில், தெரிந்தவர்கள் அறிந்தவர்கள் எவரிடமேனும் கேட்டுத் தெரிந்துகொண்டு, அவர்களுக்கு எடுத்துச் சொல்லுங்கள்! அப்படியெல்லாம் மெனக்கிட்டுச் சொல்லாது போனால், 'குழந்தைக்கு என்ன தெரியப்போகிறது' என்று, நம் மனத்தில் அப்போதைக்குத் தோன்றிய ஏதோ ஒரு பதிலைத் தப்பும் தவறுமாகச் சொல்லிவிட்டால்... குழந்தைகள் வளர்ந்த பின்பு, ராமாயணத்திலும் மகாபாரதத்திலும் எந்த நல்ல விஷயமுமே இல்லை போல என்பதாகவே அர்த்தப்படுத்திக்கொண்டு விடுவார்கள்.

குழந்தைகள் அடுத்த தலைமுறையினர். நமது வித்துக்கள். அந்த வித்துக்களைச் சரியானபடி விதைக்கிற கடமை நமக்கு நிறையவே உண்டு எனும் பொறுப்பை உணர்ந்து செயல்படுங்கள்.




பகவான் ஸ்ரீகிருஷ்ணர், எல்லாத் தருணத்திலும் அப்படியரு பொறுப்புடன் செயல்பட்டார். ஸ்ரீகிருஷ்ணர் என்பவர் சாதாரணர் அல்லர்; பரம்பொருள். ஆனாலும், எத்தனை விஷயங்களில் தன்னைத் தாழ்த்திக்கொண்டிருக்கிறார்? அர்ஜுனனுக்குச் சாரதியாக இருந்தார். அதுவும் எப்படி? அவன் தேரில் ஏறுவதற்கும் இறங்குவதற்கும் தோள் கொடுத்தார். ஸ்ரீகிருஷ்ணரின் தோளில் கால் வைத்துத்தான் அர்ஜுனன் தேரில் ஏறினான்; இறங்கினான். இதைவிட ஒருவர் தன்னைத் தாழ்த்திக்கொள்ள முடியுமா என்ன?

அர்ஜுனனுக்கு மரியாதை வழங்கினார் ஸ்ரீகிருஷ்ணர். கம்சனின் சிறையில் இருந்த உக்கிரசேனனுக்கு விடுதலை தேடித் தந்து, மீண்டும் அவனை ராஜபரிபாலனம் செய்யச் சொல்லி, கௌரவப்படுத்தினார். தருமபுத்திரருக்கு ராஜ்ஜியத்தைப் பெற்றுத் தந்தார். இவை அனைத்துக்கும் கண்ண பரமாத்மாதானே காரணம்! அதனால்தான் அவருக்கு 'மானதஹ' எனும் திருநாமம் சொல்லிப் பூரிக்கின்றனர் ஆன்றோர். அதாவது, மானம் கொடுத்தவன்; மரியாதையை வழங்கியவன் என்று அர்த்தம். இப்படி எத்தனை எத்தனை வெகுமானங்களை, எவ்வளவு பேருக்கு வாரி வழங்கியிருக்கிறார் வள்ளல் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா.

இத்தனை பேருக்கு மானம்- மரியாதையை வழங்கிக் காத்தருளிய அவர், தன்னுடைய மானத்தைப் பற்றிக் கவலைப்படாதவனாக இருந்தார். பரந்தாமனான ஸ்ரீகிருஷ்ணர், பொய்யன் என்று பெயரெடுத்தார்; பெண்ணிடம் ஈடுபாடு கொண்டவர் என்று எல்லோரும் சொல்லும்படி நடந்துகொண்டார்; விஷமக்காரன், தந்திரக்காரன் என ஊரே சொல்லும்படி செயல்பட்டார்; சூழ்ச்சிக்காரன் என துரியோதனாதிகள் புலம்பும்படி நடந்து கொண்டார். அர்ஜுனனுக்கு தேரோட்டியவர் என்று அனைவரும் பரிகசித்தார்கள். பாண்டவ சகோதரர்களுக்காகத் துரியோதனனிடம் தூதுவனாகச் சென்றார். பாண்டவ தூதன் என்று எல்லோரும் சொன்னதைப் பெருமையாக ஏற்றுக்கொள்ளவும் செய்தார்.

ஸ்ரீகண்ண பரமாத்மா, எந்த நிலையிலும் எக்காலத்திலும் தன்னைப் பெருமைப்படுத்திக் கொள்ளவே இல்லை. மாறாக, ஒவ்வொரு சூழலிலும் தன்னைச் சிறுமைப்படுத்திக்கொண்டபடியே, தாழ்த்திக் கொண்டபடியே இருந்தார். தன்னுடைய மான-அவமானங்களைப் பற்றியெல்லாம் அவர் கவலைப்படவே இல்லை. மானத்தைப் பற்றிக் கவலைப்படாதவன் என்பதால், அவருக்கு 'அமானி' என்கிற திருநாமமும் அமைந்தது.

நேர்மையை வலியுறுத்தியவர் ஸ்ரீராமபிரான். சூழ்ச்சியால் எதிரிகளை வீழ்த்தலாம் என அறிவுறுத்தியவர் ஸ்ரீகண்ணபிரான். ராமாயணம், நேர்மையையும் சத்தியத்தையும் வலியுறுத்துகிறது. அதே நேரம் ஸ்ரீகிருஷ்ணர் சூழ்ச்சியை சூழ்ச்சியால் வெல்லலாம் என்பதை மகாபாரதத்தின் மூலம் உணர்த்துகிறார். அதற்காக நாங்களும் சூழ்ச்சி செய்கிறோம் என்று செயல்பட்டுவிடாதீர்கள். சூழ்ச்சியை அழிப்பதற்காகத்தான் சூழ்ச்சி கையாளப்பட்டது. பட்டயம் எடுத்தவன் பட்டயத்தாலே வீழ்வான் என்பதை நமக்கு அறிவுறுத்துவதற்குத்தான் அத்தனை அவப்பெயர்களையும் தாங்கிக் கொண்டார் கண்ணபிரான். 'போற்றுவார் போற்றட்டும்; தூற்றுவார் தூற்றட்டும்... போகட்டும் கண்ணனுக்கே!' என்பதை அறிந்தவர்கள்தானே நாம்!

இங்கே நம் வீடுகளிலும் தெருக்களிலும் மின் விளக்குகள் இருக்கின்றன. இருட்டத் துவங்கியதும் நாம் என்ன செய்கிறோம்? ஸ்விட்ச்சைப் போடுகிறோம். பளிச்சென்று விளக்கு எரிந்ததும் இருட்டு எங்கேயோ ஓடிவிடுகிறது.



இந்த மின்சாரம் எங்கிருந்து வந்தது? எப்படி வந்தது? ஸ்விட்ச்சைப் போட்டதும் எப்படி விளக்கு எரிகிறது? மின்சாரம் எப்படி விளக்கைத் தொடுகிறது என்பதையெல்லாம் ஆராய்ந்து, தெரிந்து கொண்டா நாம் செயல்படுகிறோம்.

வெளி இருளை அகற்றுகிற மின்விளக்கையும், மின்சார விஷயங்களையும் நாம் ஊன்றிக் கவனிக்கிறோமோ இல்லையோ... நம் அக இருளை விரட்டி, நமக்குள் வெளிச்சம் பாய்ச்சுகிற விஷயத்தைக் கூர்ந்து கவனிக்கவேண்டாமா? அக இருளை விரட்டுகிற, உள்ளுக்குள் ஒளியேற்றுகிற பகவானை அறிந்து கொள்ளும் ஆவல் நமக்கு இருக்கிறதுதானே?!



**குழந்தை பாக்கியம் அருளும் ஸ்ரீகிருஷ்ணர்**

மதுரை பெரியார் பேருந்து நிலையத்துக்கு அருகில் ஸ்ரீமதன கோபால ஸ்வாமி கோயில் அமைந்துள்ளது. இங்கே, ஒரு கையில் வெண்ணெய் உருண்டை, இடுப்பில் வெண்ணெய் குடத்துடன், கலைநயத்துடன் வடிக்கப்பட்ட ஸ்ரீகிருஷ்ணர் அருள்பாலிக்கிறார். இவருக்கு அழகான ஜடைகூட உண்டு.

குழந்தை பாக்கியம் இல்லாமல் வருந்தும் தம்பதிகள் இந்தக் கோயிலுக்கு வந்து வெண்ணெய், சர்க்கரை சமர்ப்பித்து இவரை வழிபட்டு வந்தால், விரைவில் குழந்தை பாக்கியம் கிடைக்கும் என்பது நம்பிக்கை.

இங்கே ஸ்ரீகிருஷ்ண ஜயந்தி விழா 12 நாட்கள் விசேஷமாகக் கொண்டாடப்படுகிறது.

– ஜி.ஜெயலெட்சுமி, சென்னை-64

வேதங்களை நமக்குத் தந்த ஞானிகளும் ரிஷிகளும் ஆச்சார்ய புருஷர்களும்... அவ்வளவு ஏன், ஆழ்வார் பெருமக்கள் முதலானவர்களும் ஆராய்ந்து, தெளிந்து, உணர்ந்து, சிலிர்த்து, நமக்கு அருளியிருக்கிறார்கள். நாம் ஆராய்வதற்குப் பதிலாக, நமக்காக, இந்த உலகுக்காக அனுபவித்திருக்கிறார்கள். அனுபவபூர்வமாக அறிந்ததை நமக்கு விரிவாக, அழகாகச் சொல்லியிருக்கிறார்கள்.

ஞானிகள் சொல்வதை ஆராயாமல் ஏற்றுக்கொள்கிற மனப் பக்குவத்துக்கு நாம் வரவேண்டும். ஏனெனில், பகவானைவிட அவரின் அடியவர்களே போற்றத்தக்கவர்கள் என்கின்றன, ஞான நூல்கள். 'எனக்குச் செய்ய வேண்டாம்; என் அடியவர்களுக்குப் பணிவிடை செய்யுங்கள். அவர்களுக்கு நீங்கள் செய்கிற பணிவிடைகளையும் சிஷ்ருஷைகளையும் எனக்குச் செய்ததாக ஏற்றுக்கொண்டு உங்களைக் காத்தருள்கிறேன்' என்கிறார் பகவான்.

பகவான் ஸ்ரீகிருஷ்ணர், எப்போதுமே தன்னைத் தாழ்த்திக் கொள்கிறவர். அதே நேரம் தன் அடியவர்களை உயர்த்திவிடுபவர். 'கிருஷ்ணா...' என ஒரு முறை அழைத்தால் போதும்... சேவகனைப் போல் ஓடோடி வருவார் நம்மிடம்.

எங்கே... ஒருமுறை மனதார, ஆழ்ந்த ஈடுபாட்டுடன் 'கிருஷ்ணா...' என்று அழைத்துத்தான் பாருங்களேன்!




*'**இ**வன், நான் தவமா தவமிருந்து பெற்ற பிள்ளை' என்கிற வசனத்தை நெகிழ்ச்சியும் மகிழ்ச்சியுமாகச் சொல்லாதவர்கள், நம் தேசத்தில் மிகக் குறைவுதான். குழந்தை என்பது இங்கே மிகப் பெரிய உன்னதமான வரமாகப் பார்க்கப்படுகிறது. வரம் என்பது தவத்தால் அடையக்கூடியது.*

*தேடல் இருப்பவர்களே தவம் இருக்க முடியும். அது கடவுள் தேடலாக இருந்துவிட்டால், அந்தத் தவத்தின் பலனைச் சொல்லவே வேண்டாம். அப்படியரு தவத்தின் பலனாக, வரமாகக் கிடைப்பது காணக் கிடைக்காத ரத்தினமாக, பொக்கிஷமாக இருக்கும் என்பதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை!*

*தசரத மகாராஜா, தனக்கும் தன் தேசத்துக்கும் வாரிசு வேண்டும் என்று ஆசைப்பட்டார். புத்திர பாக்கியம் இல்லையே என்கிற சோகத்தைத் தவிர, வேறு எந்தச் சோகமும் அவருக்கு இல்லை. புத்திர பாக்கியம் என்கிற ஒரு சந்தோஷம் இருந்துவிட்டால், வேறு எந்தச் சந்தோஷமும் இந்த உலகில் முக்கியமில்லை.*

*அப்பேர்ப்பட்ட தசரத மகாராஜா, இறைவனை வேண்டித் தவமிருந்தார். கோயில் கோயிலாக அலைந்து தரிசித்து, மனமுருகப் பிரார்த்தித்தார். குருமார்களின் ஆசியுடனும் அறிவுரையுடனும் புத்திர காமேஷ்டி யாகம் செய்தார். அந்த தவத்தின் பலனாக, யாகத்தின் பலமாக, கேட்ட வரம் அவருக்குக் கிடைத்தது. சந்தான பாக்கியம் கேட்டவருக்கு நான்கு குழந்தைகள் பிறந்தார்கள்.*

*இங்கே ராமாயணத்தில் இப்படி என்றால், அங்கே மகாபாரதத்தில் என்ன நிகழ்ந்தது?*

*'அழகிய மகனைப் பெறுகிற பாக்கியத்தைக் கொடு' என்று யசோதை வேண்டினாள். நந்தகோபனின் சிந்தனையில் பிள்ளை வரம் தவிர, வேறு எதுவும் இல்லை. இதேபோல், அனவரதமும் வசுதேவன், குழந்தைச் செல்வம் வேண்டும் வேண்டும் என்றே பிரார்த்தித்து வந்தார். மனமுருகி, ஆத்மார்த்தமாக, உள்ளுணர்வுடன்... குழந்தை கேட்டு தேவகியும் கண்ணீர்விட்டுப் பிரார்த்தனை செய்தாள்.*

நந்தகோபன்- யசோதை, வசுதேவன்- தேவகி ஆகிய நான்கு பேரும் வேறெந்தச் சிந்தனையுமின்றி, 'எனக்கும் இந்த உலகுக்கும் நன்மை செய்யும் விதமாக குழந்தை வேண்டும்' என்பதையே வரமாகக் கேட்டனர். அந்த நான்கு பேரின் தவத்தை நிறைவேற்றும் விதமாக, ஸ்ரீகிருஷ்ணர் அவதரித்தார்.

அதாவது, ஒரேயருவர் மட்டுமே வேண்டிக்கொள்ள, ஸ்ரீராமபிரான் உட்பட நான்கு பேர் பிறந்தார்கள். இங்கே நான்கு பேர் வேண்டி விரும்பிப் பிரார்த்திக்க, ஒரேயரு கிருஷ்ண பகவான் அவதரித்தார். என்ன விளையாட்டு இது?

'சரி, அப்படின்னா... ஒருத்தர் வேண்டிக்கிட்டதுக்காக, நாலு பேர் பிறந்தது உசத்தியா? நாலு பேர் பிரார்த்தனை பண்ணினதுக்காக ஒருத்தர் பிறந்தாரே, அது உசத்தியா?' என்று கேள்வி எழலாம்.

இதில் உசத்தி என்ன, தாழ்த்தி என்ன? இரண்டு பேருமே உசத்திதான்! அதுவொரு விதம், இதுவொரு விதம்! ஒருவர் விரதமிருந்து நான்கு பேர் பிறந்தனர். அங்கே... மூத்தவருக்கு, ஸ்ரீராமபிரானுக்கு ஸ்ரீராம ரத்தினம் என்று பெயர் அமைந்தது. அதேபோல் நான்கு பேர் விரதம் மேற்கொண்டு, பிரார்த்தனை அனுஷ்டித்தனர். அந்தக் குழந்தைக்கு, ஸ்ரீகோபால ரத்தினம் எனும் பெயர் அமைந்தது. அவர்... ராமரத்தினம்; இவர்... கோபால ரத்தினம், இரண்டு பேருமே உலகை உய்விக்க வந்தவர்கள்தான்.

ஆக, தவமிருந்து, விரதம் மேற்கொண்டு பிறந்த ஸ்ரீகண்ணபிரானுக்கு 'மேதேஜ:' என்று திருநாமம் அமைந்தது. மேதேஜ என்றால் விரதத்தில் இருந்து பிறந்தவன் என்று அர்த்தம். நான்கு பேர் மட்டுமின்றி தேவர்களும் ஸ்ரீகிருஷ்ணரின் வருகையையும் பிறப்பையும் அவதரிப்பையும் ஆவலுடன் எதிர்பார்த்துப் பிரார்த்தித்தனர்.

அதுமட்டுமா? ஸ்ரீகிருஷ்ணர் இன்னொரு காரணத்தினாலும் அவதரித்தாராம்!

அதாவது, நந்தகோபனும் யசோதையும், வசுதேவரும் தேவகியும், தேவர்பெருமக்களும் வேண்டிக் கொண்டதற்காக மட்டுமின்றி, இந்த உலக மக்களுக்காக, அவர்கள் நன்மை பெற வேண்டும் என்பதற்காக, அவதரிக்க வேண்டும் என தாமே விரும்பி, விரதம் போல் உறுதிகொண்டு, பூமியில் அவதரித்தாராம் பகவான் ஸ்ரீகண்ணன்.

இப்படி, தாமே விரும்பி விரத உறுதி கொண்டு, அவதரித்ததால், சமேதஹ என்கிற திருநாமமும் கண்ண பரமாத்மாவுக்கு உண்டு. கிருஷ்ணாவதாரம் என்பது மிக உன்னதமானது. ஆகவே, வாழ்வில் ஒவ்வொரு நாளும் சந்தர்ப்பம் கிடைக்கிற தருணங்களில் எல்லாம் கிருஷ்ணரை மனதாரப் பிரார்த்திக்கொள்ளுங்கள்.

ஸ்ரீகிருஷ்ணரின் பிறப்பு குறித்து பெரியாழ்வார் பாடும்போது, ரோகிணியில் அவதரித்தவன் என்று நேரிடையாகச் சொல்லவில்லை. அஸ்தத்தில் இருந்து 10-ஆம் நாள் அவதரிப்பவன் என்று குறிப்பிடுகிறார். அதற்கு நேரடியாகவே ரோகிணி நட்சத்திரம் என்று சொல்லியிருக்கலாமே!

ரோகிணி நட்சத்திரம் என்று பளிச்சென்று சொன்னால், அந்த நட்சத்திரத்தில் பிறந்த குழந்தையை, கம்சன் நிமிட நேரத்தில் கண்டுபிடித்துவிடுவான். பிறகு, ஆவேசத்துடன் குழந்தைக்கு ஏதேனும் தீங்கு விளைவிப்பான். கோபமும் ஆத்திரமும் ஆவேசமும் மரண பயமும் கொண்டு திரிகிற கம்சனுக்கு அஸ்தத்தில் இருந்து பத்தாம் நாள் அவதரித்த குழந்தை என்றால், சட்டென்று எந்த நட்சத்திரம் என்று தெரியாதாம்! அப்படித் தெரிந்து கொள்வதற்கு சில விநாடிகள் பிடிக்குமாம். தவிர, அஸ்தத்தில் இருந்து பத்தாம் நாள் என்றால் முன்னே வரவேண்டுமா பின்னே செல்ல

வேண்டுமா என்று குழம்பித் தவிப்பானாம் கம்சன். இந்தத் தவிப்பு அடங்கி, ரோகிணி நட்சத்திரத்தில் பிறந்த குழந்தை என்று தெரிவதற்கு முன்பாக, தன்னை எப்படித் தற்காத்துக் கொள்வது என வியூகம் அமைத்துவிடுவானாம், குறும்புக் கண்ணன்!

பெரியாழ்வாரின் ஸ்ரீகிருஷ்ண பக்தி எத்தகையது என கொஞ்சம் நினைத்துப் பாருங்கள். நினைக்க நி¬னைக்க... கண்ண பரமாத்மா மீதும் பெரியாழ்வார் மீதும் அளப்பரிய பக்தி வந்து நம்முள் வியாபிக்கிறது!

பகவான் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவுக்கு யசோதை போல், நந்தகோபனைப் போல, வசுதேவரைப் போல, தேவகியைப் போல, ஏன்... நம் பெரியாழ்வார் போல், எத்தனையோ தன்யன்கள் இருக்கிறார்கள். கிருஷ்ண பிறப்பைச் சொல்லிச் சொல்லிப் பூரித்து, அவன் திருவடியை அடைந்தார்கள்.

ஆனால், இந்த உலக மக்களுக்கெல்லாம் அந்த கண்ண பரமாத்மா தன்யனாக இருக்கிறான். நம்மை அளவுக்கு அதிகமாக நேசிக்கிறான். நம் ஒவ்வொருவரின் நலனிலும் அதீத அக்கறை கொண்டிருக்கிறான். அதனால் அவனுக்கு தன்யஹ என்கிற அழகிய திருநாமமும் அமைந்தது.

நாம் அவனுக்குத் தன்யனாவோம். ஸ்ரீகிருஷ்ண ஜயந்தியை, அவனுடைய மகா பிறப்பை நினைத்துப் பூரிப்போம். அவன், நமக்குத் தன்யனாவான். நம் வீட்டுக்கு வந்து, இல்லத்தையே சுபிட்சமாக்குவான்!






ஊர்ப்பாசம் யாருக்குத்தான் இல்லை? பிறந்த ஊரின் பெயரைச் சொன்னாலே மகிழ்ந்து போகிறவர்கள்தானே நாம்? வருடத்துக்கு ஒருமுறையோ அல்லது பண்டிகைக் காலங்களிலோ பிறந்த ஊர் மண்ணில் கால் வைத்ததும், ஒரு கணம் நம் உடம்பு சிலிர்ப்பதை நாம் உணர்ந்திருக்கிறோம்தானே!

'எங்க ஊரு மாதிரி வருமா? எங்க ஊரு தண்ணியோட சுவையும், நதியோட அழகும் காணக் கிடைக்காதது' என்று ஊர்ப் பெருமை பேசுகிறவர்கள் அதிகம் உலவுகிற பூமி இது!

ஊர்க்காரர்கள் எவரையேனும் எங்கேனும் பார்த்தால், 'ஏங்க... நம்மூர்ல மழை உண்டுங்களா?' என்று விசாரிப்போம். 'காடு கண்மாயெல்லாம் நிறைஞ்சிருக்கா?' என்று அக்கறையுடன் கேள்வி கேட்போம். அப்படிக் கேட்கிறபோதே நம் முகமும் மனமும் பிரகாசமாகிவிடும்!

ஊர்ப்பாசம் என்பது நமக்கு மட்டும்தானா? கண்ணனுக்கும் உண்டு. பிறந்தவுடனேயே கோகுலத்துக்குச் சென்றுவிட்ட கண்ண பரமாத்மா, தன் பத்தாவது வயதில் மீண்டும் மதுராவுக்கு வந்தார். அக்ரூரர்தான் ஸ்ரீகண்ணனை தேரில் அழைத்து வந்தார். மதுராவை நெருங்கியதும் தேரை நிறுத்திய அக்ரூரர், "கண்ணா... உன் ஊர் வந்துவிட்டது. நீ பிறந்த பூமியின் மீது உன் திருவடிகள் படட்டும். நடந்து வாயேன், கண்ணா!" என்றார். மதுரா நகரில் காலடி எடுத்து வைத்தார் கண்ண பரமாத்மா. ஒவ்வொரு அடியையும் ஆழ்ந்த ஈடுபாட்டுடன் எடுத்து வைத்தார். அந்த ஊரின் பெரிய தெருக்களில் நடந்தார். சிறிய சந்துகள் போன்ற குறுகலான தெருக்களுக்கும் சென்றார். ஒவ்வொரு தெருவையும், அதில் உள்ள வீடுகளையும் பார்த்துக்கொண்டே வந்தவர், 'அடடா... அலங்கரித்துக் கொள்ளாமலே வந்துவிட்டோமே!' என்று ஒரு கணம் யோசித்தார். உடனே, அந்தக் குறுகிய தெருவில் இருந்த துணி துவைப்பவரின் வீட்டுக்குச் சென்றார். அவரிடம் துவைக்கப்பட்ட ஆடைகளை வாங்கி அணிந்து கொண்டு, மீண்டும் தெருக்களில் இறங்கி நடந்தார். அவர் நடையில் பெருமிதம் தெரிந்தது. கண்களில் பரவசம் மின்னியது. ஒரு சிறிய குடிசை வீட்டினுள் நுழைந்தார் கிருஷ்ணன்.

அது மாலாகாரகரின் வீடு. பூக்களையெல்லாம் பறித்து, மாலையாகத் தொடுப்பவரின் இல்லம். 'நான் கிருஷ்ணன் வந்திருக்கேன். எனக்கு ஒரு பூமாலை தருவீர்களா?' என்று ஸ்ரீகிருஷ்ணன்

கேட்க... அந்த மனிதர் நெக்குருகிப் போனார். 'கண்ணா... கண்ணா..!' என்று அவரைச் சுற்றி வந்து நமஸ்கரித்தார். இரண்டு கைகளையும் தலைக்கு மேலே தூக்கிக் கைகூப்பி வணங்கி, பின்பு கண்மூடியபடி நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கினார். 'இந்த ஊரில் எத்தனையோ பெரிய தெருக்கள் இருக்கின்றன. அந்தத் தெருக்களில் எத்தனையே பெரிய மனிதர்கள் இருக்கிறார்கள். அவர்களிடம் தங்க ஆபரணங்கள் ஏராளமாகக் கொட்டிக் கிடக்கின்றன. அவர்களது இல்லங்களுக்குச் செல்லாமல், இந்தச் சிறியவனின் எளிய குடிசைக்கு வந்து, உரிமையாக பூமாலை கேட்கிறாயே... இதற்கு நான் என்ன பாக்கியம் செய்தேனோ..!' என்று நெகிழ்ந்து, நெக்குருகி கண்ணபிரானையே பார்த்தார்.

கூடைகூடையாகப் பூக்களை எடுத்து வந்து, ஸ்ரீகிருஷ்ணரின் சிரசில் அப்படியே சொரிந்தார். இரண்டு கைகளாலும் பூக்களை எடுத்து, ஸ்ரீகிருஷ்ணரின் திருப்பாதங்களில் வைத்து, பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டார். கண்களில் நீர் வழிய, கிருஷ்ணருக்கு அழகியதொரு பூமாலை சூட்டி மகிழ்ந்தார். ஸ்ரீகிருஷ்ணரும் இதில் மிக மகிழ்ந்து போனார்.

ஸ்ரீமத் பாகவதத்தில் உள்ள இந்த அற்புதமான விஷயத்தை அடுத்தடுத்த யுகங்களிலும் எல்லோரும் சொல்லிப் பூரித்துப் போனார்கள். ஸ்ரீவில்லி புத்தூரில் தாம் நிகழ்த்திய ஓர் உபந்யாசத்தில் இந்த விஷயங்களை மிக அழகாகவும் தெளிவாகவும் உணர்ச்சிபூர்வமாகவும் அந்த உபந்யாசகர் விவரிக்க... அதைக் கேட்டுக்கொண்டிருந்தவர்கள் திக்குமுக்காடிப் போனார்கள். 'இது எனக்கும் நடக்குமா? என் கைகளால் நான் கட்டிய மாலைகளை ஸ்ரீகிருஷ்ணர் ஏற்றுக்கொள்வாரா? என் வீட்டுக்கும் அவர் வருவாரா?' என்று ஏங்கித் தவித்தனர்.

வேறு எவருக்கும் கிடைக்காத பாக்கியம் அவருக்குக் கிடைத்தது. அவருடைய நந்தவனத்தில் இருந்த பூக்கள் யாவும் திருமாலுக்கு மாலை ஆகின. அவர்... பெரியாழ்வார். துளசிச் செடிகளுக்கு மத்தியிலே அவதரித்தவள் கோதை எனும் ஆண்டாள். ஆழ்வார்களில் பெரியாழ்வாருக்குக் கிடைத்த பாக்கியம்... அந்தப் பரம்பொருளுக்கே மாமனார் ஆனது!

இறைவன் இந்த உலகுக்கு ராமபிரானாக அவதரித்து வந்ததற்குக் காரணம் ராவணனை அழிப்பது என்றும், கிருஷ்ண பரமாத்மாவாக வந்தது கம்சனை அழிப்பதற்கு என்றும் பலரும் சொல்வார்கள். உண்மையில், இந்த அகண்ட உலகில் ராவணனும் கம்சனும் மிகச் சிறிய துகள்; சின்னஞ் சிறிய கொசுக்கள்! இவர்களை இருந்த இடத்தில் இருந்தபடியே பகவானால் அழித்திருக்கமுடியும். ஆனால், உலகத்தில் உள்ள அடியவர்களை, சாதுக்களை ரட்சிப்பதற்காகவே, அவர்களுக்கு சேவை சாதிப்பதற்காகவே இங்கே இறைவன் அவதரித் தார். தன் தேஜஸ் மூலம் அனைவருக்கும் அருள் வழங்குவதே அவர் நோக்கம்!

இதனால் அவருக்கு தேஜோப்ருஷ: எனும் திருநாமம் அமைந்தது. பகவான் ஸ்ரீகிருஷ்ணரின் தேஜஸால் அவரின் அடியவர்கள் அனைவரும் அருளைப் பெற்றனர் என்பதுதான் நாம் அறிந்ததாயிற்றே! ஒவ்வொரு தருணத்திலும் அந்தக் கண்ணபிரான் நமக்காக, நம் பிரச்னைகளைத் தீர்ப்பதற்காக தன் தேஜஸ் முழுவதையும் கொண்டு நமக்குச் சேவை சாதிக்கிறார்.

வானில் உள்ள நட்சத்திரங்களையும், கடலின் அலைகளையும் எப்படி எண்ண முடியாதோ, அதுபோல் கண்ணபிரானைச் சுற்றிலும் உள்ள ஆநிரைகளின் எண்ணிக்கை யையும் எண்ணமுடியாதாம். பசுவும் கன்றுமாக ஆயிரக்கணக்கில் சூழ்ந்திருக்க, அவற்றை மேய்ச்சலுக்கு ஓட்டிச் செல்வான் ஸ்ரீகிருஷ்ணன். அவனுடன் ஆயிரக்கணக்கான பசுக்கள் மட்டுமா வரும்? நண்டும்சிண்டுமாகக் குழந்தைகளும் குதூகலமாக வருவார்கள்.

ஒருநாள்... வழியில் அகாசுரன் என்பவன் படுத்துக் கிடந்தான். கம்சன் ஏவிவிட்ட ஆள் இவன். மலைப்பாம்பு போல் மிகப் பிரமாண்டமாக வாயைத் திறந்தபடி படுத்துக் கிடந்தவனைப் பார்த்துக் குழந்தைகள் அதிர்ந்து போகவில்லை. இன்றைக்குப் பொருட்காட்சிகள், ஷாப்பிங்

மால்கள் என ஏகமாக வந்துவிட்டன. அங்கெல்லாம் ஒரு பிரமாண்ட உருவத்தில் டைனோசர் அல்லது ராட்சச பொம்மை ஒன்று வாய் பிளந்து நிற்கும். அதன் வாயில் நுழைந்து வாலின் வழியே வெளியே வரலாம். குழந்தைகள் அதைப் பார்த்துக் குதூகலிப்பார்களே தவிர, பயப்பட மாட்டார்கள்.

ஆனால், அன்றைக்கு இப்படியெல்லாம் இல்லை என்றாலும், அந்தக் குழந்தைகள் அந்த அசுரனைப் பார்த்துப் பயப்பட வில்லை. ஏனென்றால், அருகில் எது வந்தாலும் காத்தருளுவதற்குத்தான் கண்ணபிரான் இருக்கிறானே!

ஆமாம்... கண்ணன் இருக்க, கவலையும் பயமும் எதற்கு?








**உ**ணவு விஷயத்தில் நம்மில் எவ்வளவு பேர் கவனமாக இருக்கிறார்கள் என்று தெரியவில்லை. உணவை எப்படிச் சாப்பிடவேண்டும், எந்த மாதிரியான உணவை உட்கொள்ள வேண்டும் என்றெல்லாம் சில வரைமுறைகளும் வரையறைகளும் இருக்கின்றன என்பது சிலருக்குத் தெரியக்கூட இல்லை.

'அட... பசிக்காகவும் ருசிக்காகவும் சாப்பிடுகிறோம். அதிலேயே இத்தனை கணக்கு வழக்குகள் இருக்குதா?' என்று பலர் ஆச்சரியப்படவும் கூடும்.

உண்மைதான். நம் வயிற்றில் பாதி அளவு மட்டுமே சாப்பிட வேண்டும். மீதி கால்பாகம் தண்ணீர் குடித்து நிரப்ப வேண்டும். அடுத்த மீதியில், வாயு நிரம்பியிருக்கவேண்டும். அதாவது, சும்மா விட்டுவிடவேண்டும். அரை வயிற்றுக்குச் சாப்பிட்டுவிட்டு, மீதி வயிற்றுக்குத் தண்ணீரையும் வாயுவையும் நிரப்பிக்கொள்கிறவர்கள் புத்திசாலிகள் மட்டுமில்லை; ஆரோக்கியமானவர்கள்கூட!

*ஆனால், உணவு வரையறைகள் என்பதெல்லாம் ஸ்ரீகண்ணபிரானுக்கு இல்லை. அவன் இஷ்டத்துக்குச் சாப்பிடுவான்; எப்போது வேண்டுமானாலும் சாப்பிடுவான். சர்க்கரை நோய் உள்ளவர்கள், மூன்று வேளை உணவைப் பிரித்து ஆறு வேளையாக மாற்றிச் சாப்பிடுவார்கள் இல்லையா! அதுபோல் ஆறேழு வேளைகளில், ஆனால் உணவின் அளவைக் குறைக்காமல் சாப்பிடுபவன் ஸ்ரீகிருஷ்ணன். சர்க்கரையைப் போல் இனிப்பானவன் அல்லவா... அப்படித்தான் சாப்பிடுவான்!*

*நூற்றுக்கணக்கான குழந்தைகளை அழைத்துக்கொண்டு, நூற்றுக்கணக்கான பசுக்களை ஓட்டிக்கொண்டு மேய்ச்சலுக்கு வந்தான் அல்லவா கண்ணபிரான்... அப்போது அகாசுரன் என்பவன் வாய் பிளந்து படுத்துக்கொண்டிருக்க, அவனை அழித்தொழித்தான்!*

*அதைக் கண்டு குழந்தைகள் ஆனந்தப்பட்டனர். துள்ளிக் குதித்தனர். 'அகாசுரன் என்பவனை இன்று நம் கண்ணன் கொன்று போட்டான்' என்று குதூகலத்துடன் தெரிவித்தனர். ஆனால், இங்கே ஒரு விஷயம்... இந்தத் தகவலை அவர்கள் ஒரு வருடம் கழித்துதான் சொன்னார்கள்.*

*சரி... ஒரு வருடம் கழித்துச் சொல்லட்டும்; ஆனால், 'போன வருஷம் அகாசுரனைக் கொன்றான் கண்ணன்' என்றுதானே சொல்லவேண்டும்? 'இன்று அகாசுரனைக் கொன்றான் கண்ணன்' என்று ஏன் சொன்னார்கள்?*

*அதற்குக் காரணம் இருக்கிறது. 'இந்த இடையர் குலத்தைச் சேர்ந்த கண்ணனுக்குதான் எத்தனை செல்வாக்கு! எவ்வளவு மரியாதை!' என்று பொறாமைப்பட்ட ஸ்ரீபிரம்மா, நேராக பூலோகம் வந்தார். கண்ணபிரான் மாடு மேய்க்கும் இடத்துக்கு வந்தார்.*



*அங்கே... கடும் பசியில் இருந்த கண்ணன், பாலும் தயிருமாக ஊற்றிக் குழைத்துப் பிசைந்த தயிர்சாதத்தை பரமானந்தமாகச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். அதுவும் எப்படி? அங்கே கண்ணுக்கு எட்டிய தூரத்தைக் கடந்து, மாடுகள் மேய்ந்து கொண்டிருக்க, இங்கே குழந்தைகளுடன் அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தான் கண்ண பரமாத்மா. இவனிடம் இருந்து குழந்தைகள் ஒரு வாய் வாங்கிக்கொள்ள... பிறகு குழந்தைகள் இவனுக்கு ஊட்டிவிட... கொண்டாட்டத்துக்கும் பாசத்துக்கும் குறைவே இல்லாமல் பசியாறல் நடந்துகொண்டிருந்தது அங்கே!*

*நாமெல்லாம் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது, நடுவில் எழுந்திருப்பது தவறு என்று திட்டுவார்கள் பெரியோர். நிறைவாகச் சாப்பிட்டு முடித்த பிறகுதான் எழுந்து கையலம்ப வேண்டும் என அறிவுறுத்தியுள்ளார்கள். ஆனால், ஸ்ரீகிருஷ்ணன் என்ன செய்தான் தெரியுமா? அதைப் பிறகு பார்ப்போம்.*

*அதற்கு முன்னதாக... இவற்றையெல்லாம் கவனித்து வந்த ஸ்ரீபிரம்மா, மாடுகள் மேய்ந்து கொண்டிருக்கும் இடத்துக்கு விறுவிறுவெனச் சென்றார். சட்டென்று மாடுகள் அனைத்தும் மறைந்தன. 'பசுக்களின் சத்தத்தையே காணோமே...' என யோசித்த ஸ்ரீகிருஷ்ணர், 'நீங்கள் எல்லோரும் இங்கேயே இருங்கள். நான் போய்ப் பார்த்துவிட்டு வருகிறேன்' என்று குழந்தைகளிடம் சொல்லிவிட்டு, பசுக்களைத் தேடிச் சென்றார்.*

*அப்போது சாப்பிட்டுக் கொண்டிருந்தார் அல்லவா பகவான்? அந்தச் சாப்பாட்டை அவர் என்ன செய்தார்? எவருக்குக் கொடுத்தார்?*

யாருக்கும் தரவில்லை. அப்படியே சாப்பிட்டுக்கொண்டே பசுக்களைப் பார்ப்பதற்காக எழுந்து போனாராம் பகவான். இப்படி அவர் செய்த குறும்புகள் ஒன்றா... இரண்டா?

மேய்ந்து கொண்டிருந்த இடத்துக்கு வந்து பார்த்தால், அங்கே ஒரு பசுவைக்கூடக் காணோம். குழப்பத்துடன் திரும்பி வந்தால்... அங்கே நின்றிருந்த குழந்தைகளையும் காணவில்லை. 'ஓஹோ... இது பிரம்மாவின் காரியம்' என அறிந்தவர், சட்டென்று பிரம்மாவின் உருவத்துக்கு மாறினார். சத்தியலோகம் வந்தடைந்தார். அனைவரும் வரவேற்க, ஸ்ரீபிரம்மதேவனின் அரியணையில் கம்பீரமாக அமர்ந்தார் பகவான் ஸ்ரீகிருஷ்ணர்.

சிறிது நேரத்தில், குழந்தைகளுடனும் பசுக்களுடனும் சத்தியலோகத்தின் வாசலுக்கு ஸ்ரீபிரம்மா வந்தார். 'உள்ளே பிரம்மா இருக்கிறார். நீ அவரைப் போலவே வேடமிட்டு வந்திருக்கிறாயா? உள்ளே நுழையமுடியாது!' எனத் தடுத்து நிறுத்தினார்கள் சேவகர்கள்.

இதற்கிடையில், குழந்தைகளைக் காணோமே என்று அவர்களின் பெற்றோர்களும், பசுக்கள் எங்கே போயின என்று அவற்றின் உரிமையாளர்களும் கவலையும் பதற்றமும் கொள்ள... இங்கே பிரம்மாவாக உருக்கொண்ட அதே நேரத்தில், பூலோகத்தில் குழந்தைகளாக, பசுக்களாக, பசுக்களை விரட்டுகின்ற சாட்டைகளாக, கையில் வைத்திருந்த தயிர்சாதமாக, ஊறுகாயாக... என சகலமாகவும் உருவம் கொண்டார் பகவான் ஸ்ரீகிருஷ்ணர். ஆக, பூலோகத்தில் எந்தக் குழப்பமும் இல்லை.

இங்கே ஸ்ரீபிரம்மா, தன்னைத் தடுத்த சேவகர்களை மீறிச் செல்ல முற்பட... அங்கே நடந்த தள்ளுமுள்ளுவில்... புறப்பட்ட இடமான பூலோகத்தில், மாடுகள் மேய்ந்து கொண்டிருந்த இடத்திலேயே வந்து விழுந்தார் அவர். அந்த இடத்தில்தான் ஸ்ரீபிரம்ம சூத்திரம் உருவானதாகச் சொல்வர்.

நமக்கு ஒரு வருடம் என்பது தேவர்களுக்கு ஒரு நாள் என்பது தெரியும்தானே?! எனவே தான், இந்திராதி தேவர்களிடம் இருந்து வந்த குழந்தைகள், 'அகாசுரன் என்பவனை இன்று நம் கண்ணன் கொன்று போட்டான்' என்றார்கள். இப்போது புரிந்ததா?

இத்தனை விசேஷங்களுக்கு உரியவனான, ஸ்ரீபிரம்மாவுக்காகவும் இந்திரர்களுக்காகவும் அத்தனை ஆச்சரியங்களையும் செய்தவனான பகவான் ஸ்ரீகிருஷ்ணனை எப்போதும் யாவரும் துதித்து வணங்கலாம். இதனால், இவருக்கு துதிதரஹ எனும் திருநாமம் அமைந்தது.

அதேபோல், சர்வசஸ்திர பிரதாம் வரஹ என்கிற திருநாமமும் ஸ்ரீகிருஷ்ணருக்கு உண்டு. அதாவது, எல்லா சஸ்திரங்களைத் தரிப்பவர்களுக்கு உள்ளேயும் தாமே சிறந்தவன் என்கிறான் கண்ணபிரான். அதுமட்டுமா? 'எந்த சஸ்திரத்தை யார் தரித்தாலும், அவருக்கு உள்ளே ஸ்ரீராமனாக நான் இருக்கிறேன்' என்கிறான்.

இதில், ஸ்ரீகண்ணபிரானின் பெருந்தன்மை மட்டுமல்ல; ஸ்ரீராமபிரானின் மகோன்னதமும் நமக்கு விளங்குகிறது அல்லவா?



## கண்ணன் நாமம் சொல்லும் கதைகள்!



வேளுக்குடி கிருஷ்ணன்






**கேட்பது** என்பது வேறு; உணர்வது என்பது வேறு! கேட்டதை உணர்வதாக, உணர்ந்துவிட்டதாகச் சொல்லிக்கொண்டிருக்கிறோம். உணர்ந்ததையும் சரியாக உள்வாங்கிக் கொள்ளாமல், வேறுவிதமாகக் கற்பனை செய்துகொள்கிறோம். இந்த இரண்டுக்கும் உள்ள வித்தியாசத்தை முதலில் நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

திருநெல்வேலி அல்வா ரொம்பச் சுவையாக இருக்கும் என்று ஒருவர் சொன்னால்... அதைக் கேட்டுக் கொள்ளலாம். 'அந்தச் சுவை என்ன? உண்மையில், நெல்லை அல்வாவுக்கு இணையா வேறு எதுவும் இல்லையா?' என்பதையெல்லாம் வெறுமே கேட்டுவிட்டுச் சொல்லமுடியாது. ஒரு விள்ளலேனும் சாப்பிட்டுப் பார்த்தால்தான், அதன் ருசியை அறிந்து நம்மால் உணரமுடியும்.

பகவான் ஸ்ரீகிருஷ்ணர் செய்த சத்காரியங்களை உபன்யாசமாகக் கேட்கலாம். புத்தகங்களைப் படித்தும் தெரிந்து கொள்ளலாம். கேட்பதும் படிப்பதும் ஒருவித தாக்கத்தை உள்ளுக்குள் ஏற்படுத்தும். 'கிருஷ்ணா... கிருஷ்ணா' என முணுமுணுக்கச் செய்யும். ஆனால், பகவான் ஸ்ரீகிருஷ்ணரின் மதுராபுரிக்கே சென்று வந்தால், இன்னும் முழுமையாக அந்தக் கோபாலனை அறிந்து உணரலாம்.

ஸ்ரீராமரின் அருமை பெருமைகளை, அவரின் சாந்நித்தியத்தை உணர வேண்டும் என்றால் அயோத்தி மாநகருக்கும், ஸ்ரீகிருஷ்ணரின் லீலாவிநோதங்களை அறிந்து தெளிய வேண்டும் எனில் மதுராபுரிக்கும் செல்லவேண்டும் என்பார்கள்.

உண்மைதான். ஸ்ரீகிருஷ்ணரின் திருப்பாதம் பட்ட பூமியில், அவன் ஓடியாடி விளையாடிய மண்ணில், நம் பாதம் படுவது எவ்வளவு விசேஷம் என்பதைக் கொஞ்சம் நினைத்துப் பாருங்கள். பெருமைக்கு உரிய அந்தப் பூமியில் நமது காலடி பட்டால், நமக்கும் நம் சந்ததியினருக்கும் எத்தனைப் புண்ணியம் என்பதை உங்களால் உணரமுடிகிறதுதானே? அதனால்தான், முக்கியத் தலங்களுக்குக் குடும்பத்துடன் சென்று ஸ்வாமி தரிசனம் செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தனர் முன்னோர்.

*பகவான் ஸ்ரீகிருஷ்ணருக்கு 'ப்ரக்ரஹ:' எனும் திருநாமம் உண்டு. ப்ரக்ரஹ: என்றால், கடிவாளம் போட்டு, தனக்குக் கட்டுப்பட்டு வைத்திருந்தவன் என்று அர்த்தம். மதுராபுரியை அப்படித்தானே வைத்திருந்தான்! அவனுடைய ராஜாங்கமும் லீலா விநோதங்களும் விளையாட்டுகளும் கேளிக்கைகளும் நடந்த பூமி அல்லவா அது!*

*அதுமட்டுமா? மொத்த உலகையும் கட்டிக் காபந்து செய்யும் கண்ண பரமாத்மாவின் திருப்பாதங்கள் பட்ட புண்ணிய பூமியில், நம் கால் பட்டதும் நம் பாவங்களெல்லாம் பறந்தோடிவிடும்.*



*மதுராபுரியை மட்டுமா கட்டுக்குள் வைத்திருந்தான்! தன் அடியவர்கள் அனைவரையும் அன்பு எனும் கட்டுக்குள் வைத்திருப்பவன் அல்லவா, அவன்! அர்ஜுனனுக்குச் சாரதியாக இருந்து, அவனைத் தன் கட்டுக்குள் வைத்திருந்து, யுத்தத்தை நிகழ்த்தினான் பகவான். ஸ்ரீகிருஷ்ணரிடம், 'நீ நேரடியாக யுத்தத்தில் ஈடுபட வேண்டாம் கிருஷ்ணா! எனக்குப் பக்கபலமாக இரு; அது போதும்!' என்று கோரிக்கை விடுத்தான் அர்ஜுனன். 'அப்படியே ஆகட்டும்' என்று அதனை ஏற்றுச் செயல்பட்டார் பகவான் ஸ்ரீகிருஷ்ணர்.*

*பிறகு, யுத்தம் எல்லாம் முடிந்து, பரமபதத்துக்குச் சென்றுவிட்டார் ஸ்ரீகிருஷ்ணர். அதையடுத்து அர்ஜுனன் தனது காண்டீபத்தை எடுக்க முனைந்தபோது, அதை நகர்த்தக்கூட முடியவில்லையாம்! அதேபோல், அர்ஜுனனின் தேரும் நகரவில்லை. எந்தச் செயல்பாட்டையும் செய்யமுடியாது தவித்து மருகினானாம் அர்ஜுனன்.*

*அந்த அளவுக்கு அவனைத் தன் கட்டுக்குள் வைத்திருந்ததால்தான் ஸ்ரீகிருஷ்ணருக்கு பிரக்ரஹ: என்றும், மிக்ரஹ: என்றும் திருநாமங்கள் அமைந்தன. மிக்ரஹ: என்றால் மிகுந்த சாமர்த்தியங்கள் கொண்டவன் என்று அர்த்தம்.*

*ஆயுதம் ஏந்தாமல் சண்டை செய்தவன் அல்லவா ஸ்ரீகிருஷ்ணன்! அத்தனை வியூகங்களையும் தன் சாதுர்யத்தாலும் சாமர்த்தியத்தாலும் அல்லவா தவிடுபொடியாக்கினான்.*

*ஆனாலும் என்ன... எத்தனை சாமர்த்தியங்கள் இருந்தாலும், கண்ணனிடம் பொறுமை என்பது துளியும் இல்லை. எந்நேரமும் பரபரப்புடன் செயல்பட்டுக்கொண்டே இருந்தான் ஸ்ரீகண்ணபிரான். ஒரு பக்கம் அர்ஜுனனையும் அவனுடைய சகோதரர்களையும் வழிநடத்திக்கொண்டு, திரௌபதிக்குச் சமாதானங்களைச் சொல்லிக்கொண்டு, தேரைச் செலுத்தியபடியே பீஷ்மாச்சார்யர் முதல் சகலரையும் ஒருகண் பார்த்துக்கொண்டு... என மின்னல்*

வேகத்தில் செயல்பட்டுக்கொண்டே இருந்தான் பகவான். அதனால் 'வியக்ரஹ:' என்கிற திருநாமம் அவனுக்கு அமைந்தது. வியக்ரஹ: என்றால் பொறுமை இல்லாதவன் என்று அர்த்தம்.

சரி... மகாபாரத யுத்தத்தில் ஆயுதங்கள் ஏதும் வைத்திருந்தானா பகவான்? இல்லைதானே! அதனால்தான் அவனுக்கு 'ஏக சிருங்கஹ:' என்கிற திருநாமம் அமைந்தது. அதாவது 'ஒரு ஆயுதமும் இல்லாதவன்' என்று பொருள்.

ஆனால், இந்த யுத்தத்துக்காகவும் பஞ்சபாண்டவர்களுக்காகவும் என்னவெல்லாம் செய்திருக்கிறான் அவன்? பாண்டவ தூதனாகச் செயல்பட்டான். அர்ஜுனனுக்குச் சாரதியாக இருந்து தேரோட்டினான். சதுர்த்தசி நாளில், அமாவாசை என்று பொய் சொல்லித் தர்ப்பணம் செய்தான். 'அட... இன்னிக்குதான் அமாவாசைபோல! கிருஷ்ண பரமாத்மாவே தர்ப்பணம் பண்றாரே.... வாங்க, நாமளும் தர்ப்பணம் பண்ணிடுவோம்!' என்று எல்லோரையும் அமாவாசை என நம்ப வைத்தான்.

அதாவது, பாண்டவ சகோதரர்களுக்காக, தருமம் ஜெயிக்க வேண்டும் என்பதற்காக... சாம, தான, பேத, தண்டம் என சகலத்தையும் பயன்படுத்தினான் கண்ணன். வியூகம் அமைத்து வெற்றி தேடித் தந்தான். 'எப்பாடு பட்டாவது தனது அடியவர்களை, தன்னை நம்பியவர்களை ரட்சிக்க வேண்டும்' என்பது மட்டுமே அவனுடைய நோக்கம். அந்த விருப்பத்தை நிறைவேற்றும் பொருட்டு, என்ன செய்வதற்கும் அவன் தயாராக இருந்தான். அவ்விதமாகவே செயல்பட்டான்.

பகவான் ஸ்ரீகிருஷ்ணன் அப்படித்தான்! தன்னுடைய அடியவர்களை அவன் ஒருபோதும் கலங்கவிடமாட்டான். கலங்கித் தவிக்கிற அடியவர்களை எந்நாளும் கைவிடமாட்டான். அர்ஜுன சகோதரர்களுக்காக அத்தனை செய்த பகவான், தனது அடியார்களுக்காக, அந்த அடியவர்களில் ஒருவராக இருக்கிற நமக்காக, எனக்காக, உங்களுக்காக எது வேண்டுமானாலும் செய்வான்.

'நைக சிருங்கஹ' என்கிற திருநாமம் அதனால்தான் அவனுக்கு வந்தது. அதாவது 'எப்பாடு பட்டாலும் ரட்சிப்பவன் ஸ்ரீகிருஷ்ணன்!'

ஏழைகளின் கண்ணீரைத் துடைக்கவும் ஓடி வருவான்; ஏமாற்றுபவர்களின் கொட்டத்தை ஒடுக்கவும் ஓடி வருவான்.

இதற்கு நாம் செய்ய வேண்டியது என்ன?

ஒன்றே ஒன்றுதான்... பகவான் ஸ்ரீகண்ணனை மனதார நினைக்கவேண்டும்!

கண்ணன் நாமம் சொல்லும் கதைகள்! வேளுக்குடி கிருஷ்ணன்




**பொ**றுமையும் சகிப்புத்தன்மையும் இருந்தால்தான் இந்தப் பூவுலகில் நாம் நிம்மதியாக வாழமுடியும். ரேஷன் கடை, ரயில் நிலையம், பேருந்துகள், சாலைகள் என எங்கு பார்த்தாலும் கூட்டம்; எங்கு பார்த்தாலும் நெரிசல்; டிராஃபிக். இந்த நிலையில் பொறுமையைக் கடைப்பிடித்து சகிப்புத் தன்மையுடன் இருந்தால்தான், இந்தப் பிறப்பை நாம் சந்தோஷமானதாக ஆக்கிக் கொள்ளமுடியும்!

ஆனால், பகவானுக்கு இவை ஏதும் இல்லை. அவன், பொறுத்துக்கொள்ளவும் தேவையில்லை; சகித்துக்கொள்ளவும் அவசியமில்லை. தவிர, பகவான் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா சகிப்புத்தன்மைகளுக்கு அப்பாற்பட்டவர். பொறுமை என்றால் கிலோ என்ன விலை என்று கேட்கிற அளவுக்குப் பொறுமையற்று இருப்பவர். அதனால்தான், அப்பேர்ப்பட்ட மகாபாரத யுத்தத்தின்போதுகூட, 'அர்ஜுனா... இன்னுமா யுத்தத்தை முடிக்காமல் இருக்கிறாய்? எப்போதுதான் முடிப்பாய் யுத்தத்தை?' என்று அவசரப்படுத்தியபடியே இருந்தார்.

இத்தனை அவசரமும் வேகமும் இருந்தாலும், பகவான் எப்போதுமே புண்டரிகாக்ஷன்தான்! அதாவது, மிகப்பெரிய தாமரைப் பூக்களைப் போன்ற கண்களை உடையவன். அத்தனை ஒளிர்ந்த, விசாலமான, தீட்சண்யமான, மலர்ந்த கண்களைக் கொண்டவன் என்று அர்த்தம்.

இப்படியெல்லாம் பகவானையும் அவனுடைய கண்ணழகையும் வியந்து போற்றுவோர் யார் தெரியுமா? விண்ணவர்கள்! அவர்களே போற்றிக் கொண்டாடுகிற அளவுக்கு அழகன் என்றால், சாதாரணர்களாகிய நாம் எந்த வார்த்தைகளைச் சொல்லி அவனைப் பாராட்டிப் புகழ்வது?

பகவான் ஸ்ரீகண்ணபரமாத்மாவுக்கு ஆயிரமாயிரம் வேலைகள் உண்டு. மண்ணுலகில் உள்ள நம் அனைவரையும் ரட்சிப்பவனாயிற்றே! நம்முடைய சின்னக் குறையைக்கூடத் தீர்த்து வைக்க முனைந்து செயல்படுபவனாயிற்றே அவன்! அதனால்தான் அவனுக்கு ஜகத்கரணபூதன் என்றொரு திருநாமம் அமைந்தது.

இங்கே... மூன்று விஷயங்களில் உயர்ந்து நிற்கிறான் கமலக்கண்ணன். முதலாவது... எந்தக் காரணங்களையும் காரியங்களையும் வைத்துக்கொண்டு அவன் செயல்படவில்லை.

அடுத்து... எல்லாக் காரியங்களிலும் மிகவும் ஆர்வமாகவும், நாம் ஆச்சரியப்படும் படியாகவும் செயல்படுபவன். மூன்றாவது... முக்கியமாக, தனக்கு என்று எந்தக் காரணமும் வைத்துக்கொண்டு சுயநலமாகச் செயல்படாதவன்!

இங்கே... மனித குல வாழ்க்கையைக் கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். இங்கு ஒவ்வொருவரும் காரியம் இருக்கிற காரணத்துடன்தான் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். அடுத்தவருக்கு இந்தக் காரியத்தைச் செய்வதால், தனக்கு என்ன பலன் கிடைக்கும் என்று சிந்தித்தே செயல்படுகிறார்கள். மூன்றாவதாக, அப்படி லாபம் கிடைத்தால்தான் ஆர்வத்துடனும் வேகத்துடனும் செயல்படுகிறார்கள். பகவான் ஸ்ரீகிருஷ்ணர், மனிதர்களாகிய நமக்கு உணர்த்துகிற இந்தப் பாடத்தை அறிந்து, உணர்ந்து செயல்படத் துவங்கினால்... இந்த உலகில் போட்டிக்கும் பொறாமைக்கும் வேலையே இருக்காது. கர்வம் தலைதூக்கவும் நம்பிக்கை துரோகம் இழைக்கவும் இங்கு எந்த அவசியமும் இராது! அந்த ஜகத்கரணபூதனை உணர்ந்து, தெளிவதே வாழ்தலின் முதல்படி.

தனக்கென எந்தக் காரணமும் இல்லாமல் செயல்படுபவர் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா. ஆனால் ஓர் ஆச்சரியம்... பூமி பிராட்டியின் மீது அளவற்ற ஆசையும் அத்தனை பிரியமும் உண்டு அவனுக்கு.

அதாவது, பூமி பிராட்டிக்காக அத்தனை பாரங்களையும் தவிர்த்தார் ஸ்ரீகிருஷ்ணர். பிரளய காலத்தில், கர்ப்பக்கிரகத்தில் வைத்துக் காத்தருளினார். கம்சனையும் துரியோதனனையும் அழித்து, பூமியையும் பூமியில் உள்ள மனிதர்களையும் காத்தார்.

மறைத்து வைத்ததை மீட்டுக் கொடுக்க, வராக பெருமாளாக அவதரித்து அருளினார். ஹிரண்ய வதத்துக்காக தூணில் மறைந்து இருந்து வெளிப்பட்டார். வாமனனாக, திரிவிக்கிரமனாக உலகை அளந்தார்.

பூமி பிராட்டியார்மீது கொண்ட ஆசையின் விளைவாகவே மண்ணில் பிறந்து, பிறந்து அவதாரக் கோலங்களை எடுத்தார். பகவான் ஸ்ரீகிருஷ்ணர், இந்த பூமியில் உண்டார்; நடந்தார்; கிடந்தார்; அளந்தார். உலக மக்கள் அனைவரையுமே அரவணைத்தார். இதனால் அவருக்கு, 'க்ஷிதிஸஹ:' எனும் திருநாமம் அமைந்தது. க்ஷிதி என்றால் பூமி என்று அர்த்தம்!

'ஆதிசேஷனில் இருந்தபடி பூமியைத் தாங்குகிறாய். பிரளயத்தின்போது பூமியையே தூக்கிக் காபந்து செய்தாய். வாயில் விழுங்கி, கருவறையில் வைத்துக் காப்பாற்றினாய். பூமாதேவியை இந்த அளவுக்கு நேசிக்கிறாயே... எப்போதும் உன் மார்பில் வைத்திருக்கும் ஸ்ரீதேவி நாச்சியாள், அதற்காக வருத்தப்படமாட்டாளா? உன் மீது கோபப்படமாட்டாளா?' என்று கம்பநாட்டான்கூட சூசகமாகக் கேட்டிருக்கிறான்.

ஆனால், அதைப் பற்றி ஸ்ரீதேவி நாச்சியாரே வருத்தப்படாதபோது, நாம் ஏன் வருத்தப்படவேண்டும்?

உண்மையில் எங்கே போனாலும், எந்தச் சூழ்நிலையில் இருந்தாலும் தன் மார்பிலேயே ஸ்ரீதேவி நாச்சியாரை வைத்திருக்கிறானே பகவான்! அப்படியிருக்க... அவள் ஏன் வருத்தப்படப் போகிறாள்?

இந்த வருத்தங்களும் கோபங்களும் தவிப்புகளும் சோகங்களும் நமக்குத்தான். உள்ளேயும் வெளியேயுமாக நமக்கு இருக்கிற பாபங்கள் பெருகிக்கொண்டே அல்லவா இருக்கின்றன? இந்தப் பாபங்களையெல்லாம் எங்கே, எப்படி, எவரால் போக்கிக் கொள்வது என்று நாம்தான் உழன்று, தவித்து, மருகி, கதறி, கண்ணீர் விட்டுக் கொண்டிருக்கிறோம்!

கவலையேபடாதீர்கள். 'என் திருவடித் தாமரைகளை எவர் பற்றிக் கொள்கிறாரோ, அவரின் சகல பாபங்களையும், நானாவித அபசாரங்களையும் நான் போக்கித் தருவேன்' என கீதையில் அருள்கிறார் ஸ்ரீகிருஷ்ணர்.

நமக்குள்ளே இருக்கிற காம- குரோதங்களை, கர்வ- அகங்காரங்களை, மத மாச்சர்யங்களை நம்மிடம் இருந்து போக்கி, அந்தப் பாவங்களில் இருந்து நமக்கு விடுதலையைத் தருபவர் பகவான் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா.

அதேபோல், நமக்குள் பக்தி எனும் சிந்தனையை வளரவிடாமல் செய்கிற தீமைக் குணங்களைப் போக்கி, சகல பாபங்களில் இருந்தும் நம்மை விடுவித்து அருள்கிறார் பரம்பொருள். இதனால் ஸ்ரீகண்ணபிரானுக்கு, 'பாபநாசனஹ' என்கிற திருநாமம் அமைந்தது.

ஆமாம்... பகவானின் திருநாமங்களைச் சொன்னால் போதும்; அல்லது, பகவானின் அவதாரங்களை ஒருகணம் நினைத்தால் போதும்... நம் இடர்கள் அனைத்தையும் நீக்கி அருள்வான் பரந்தாமன் என்பதில் சந்தேகமே இல்லை!




**ம**னிதர்களாகிய நமக்குத்தான் எத்தனை எத்தனை முகங்கள்! அதாவது, ஒவ்வொரு மனிதருக்கும் ஒவ்வொருவிதமான முகம் என்று சொல்ல வில்லை. ஒவ்வொரு மனிதரும், ஒவ்வொரு மனிதரிடத்திலும் ஒவ்வொரு சூழலிலும் எத்தனைவிதமான முகங்களைக் கொண்டு செயல்படுகிறோம், பாருங்களேன்!

வீட்டில் ஒரு முகம், அலுவலகத்தில் ஒரு முகம், வீடு- அலுவலகம் இரண்டிலும் இல்லாமல் வெளியே பொது இடங்களில் இருக்கும்போது வேறொரு முகம் என்று எத்தனை முகங்களை வைத்துக்கொண்டு திரிகிறோம்?! 'அவரு ஆபீஸ்லதாம்பா இப்படி. வீட்டுக்குப் போனா பெட்டிப் பாம்பா அடங்கிடுவாரு' என்று, அலுவலகத்தில் புலியாக இருப்பவர் தனது வீட்டில் பூனையாக இருக்கிற விஷயத்தை எவ்வளவு கேலியும் கிண்டலும் பொங்கச் சொல்கிறோம்!

அதுமட்டுமா? நண்பரோ உறவினரோ... எதிரில் நின்று பேசுகிற வரைக்கும் ஒரு முகத்தை வைத்துக்கொண்டு பேசுவதும், அவர் அங்கிருந்து நகர்ந்ததும் சட்டென்று வேறொரு முகம், வேறொரு நாக்கு, வேறொரு பேச்சு என்று அவரை ஏளனமாக ஏசுவதும் மனித வழக்கத்தில் இருக்கிறது. இப்படிப் பொய்முகங்கள் கொண்டு வாழ்கிற மனிதர்கள் நிறையவே உண்டு!

அதுசரி... பகவானே அப்படித்தான் பல முகங்களைக் கொண்டிருக்கிறான் என்று எவரேனும் சொல்லலாம்.

உண்மைதான். பெருமாளுக்குத் திருமுகங்கள் பல உண்டு. ஒரு முகத்தைக் காட்டியருளும்போது, மற்ற எல்லா முகங்களையும் மறைத்துக் கொள்கிறார். உலக பயன்பாட்டுக்காகவும், அடியவர்களுக்கு அருள்வதற்காகவும் பல முகங்கள், பல அவதாரங்கள் எடுத்துள்ளார் பகவான். ஆனால், மனிதர்களைப்போல் பொய் முகம் காட்டுகிற குணம் பகவானிடம் இல்லவே இல்லை. அவர் விருப்பு வெறுப்புகளுக்கு அப்பாற்பட்டவர். இன்ப- துன்பங்கள் அவருக்கு இல்லை. நன்மை- தீமை என்று இரண்டு வேறுபட்ட உணர்வுகள் அவருக்குக் கிடையாது. ஏனென்றால்... உலகையே உய்விக்கும் நாயகன், இறைவன்.

தேவை என்பது நமக்குள் வேறுபட்டிருக்கிறது. உங்களுக்குத் தேவையானது எனக்குத் தேவையில்லாததாகவும், எனக்குத் தேவையில்லை என்று நான் நினைப்பது உங்களுக்கு மிக மிக அவசியமானதாகவும் இருக்கிறது. எது எப்படியாயினும், உலகின் அனைத்து மனிதர்களும், தேவை என்று ஒவ்வொரு விஷயத்தை நினைக்கின்றனர். அந்த விஷயம் குறித்துக் குழம்புகின்றனர். அதற்குத் தீர்வு எங்கே கிடைக்கும் என்று தேடுகின்றனர். அப்படி ஒரு விஷயத்தைத் தேடினால், அதற்கு உண்டான அர்த்தத்தை அறிய வேண்டும் என்று விரும்பினால், அவை அனைத்தும் எங்கே கிடைக்கும் தெரியுமா? மகாபாரதத்தில் நிச்சயமாகக் கிடைக்கும்.




நமக்கான மிகப் பெரிய வித்தும் சத்தும் அதில்தான் நிரம்பி இருக்கின்றன. மகாபாரதம், நம் தேசத்துக்குக் கிடைத்திருக்கும் மிகப் பெரிய சொத்து. இறைவன் தானே விரும்பி நமக்குத் தந்திருக்கிற கொடை! மகாபாரதத்தில் ஒரு விஷயம் இல்லையெனில், அதனை வேறு எங்கே தேடினாலும் கிடைக்காது என்பதைத் தெரிந்துகொள்ளுங்கள். அப்பேர்ப்பட்ட மகாபாரதத்தைத் தந்தருளியதால், பகவான் ஸ்ரீகிருஷ்ணரை நாயகன் என்று போற்றிக் கொண்டாடுகிறோம்.

ராமாயணம், சீதையின் வைபவத்தை அழகுற நமக்குத் தந்தருளியது என்றால், மகாபாரதம் ஸ்ரீகிருஷ்ண வைபவத்தை முழுவதுமாகப் பறைசாற்றுகிறது.

ஸ்ரீராமரைப் போல் நாமும் வாழவேண்டும் என்பதே ராமாயணத்தின் சாராம்சம். ஸ்ரீராமரை முன்மாதிரியாக, ரோல்மாடலாக எடுத்துக் கொள்ளவேண்டும் என்பதே ஸ்ரீராம சரிதையின் நோக்கம்!

'அப்படியெனில், ஸ்ரீகிருஷ்ணரைப்போல் வாழவேண்டும் என்பதைச் சொல்கிறதா மகாபாரதம்?' என்று எவரேனும் குதர்க்க மாக யோசிக்கலாம்; கேட்கலாம்.

ஸ்ரீகண்ணன் திருடினான், மண்ணைத் தின்றான், ஏகத்துக்கும் பொய்கள் சொன்னான், பதினாறாயிரம் ஸ்திரீகளைக் கொண்டிருந்தான். அதற்காக, ஸ்ரீகிருஷ்ணரை முன்மாதிரியாகக் கொண்டு நாமும் அப்படியிருக்கலாமே என்று நினைப்பது பெரும் தவறு. சிந்தனையில் பிழை இருப்பதாக அர்த்தம். ஒட்டுமொத்த வாழ்வியல் தத்துவங்களைச் சொல்கிற உபதேசம் அடங்கிய மகாபாரதத்தில், அர்ஜுனனுக்குச் சொல்வதுபோல அகில உலக மக்களுக்கும் பகவான் ஸ்ரீகிருஷ்ணர் அருளிய உபதேசங்களை மனத்துள் இறக்கி, அதன்படி வாழவேண்டும் என்பதே மகாபாரதத்தின் நோக்கம். ஒவ்வொரு மனிதனும் அந்த உபதேசங்களைச் செயல்படுத்தி, செம்மையாக வாழவேண்டும் என நினைத்தாலே, நம் தேசம் இன்னும் வளமாகிவிடும்!

அப்பேர்ப்பட்ட வாழ்க்கைத் தத்துவங்களைத் தந்த கீதையை அருளிய ஸ்ரீகண்ண பரமாத்மாதான் உலகுக்கெல்லாம் நாயகன்! அதனால்தான் அவனுக்கு 'நாயகன்' என்று திருநாமம் அமைந்தது.

பரந்துபட்ட உலகை வழிநடத்துபவன் பகவான் ஸ்ரீகிருஷ்ணர். அவனே நாயகன். அப்படியெனில் நாயகி? பிராட்டி ஸ்ரீருக்மிணிதேவிதான்!

ஒருவீட்டுக்கு நாயகனாகவும் நாயகியாகவும் இருப்பது பெற்றோர். எனவே, அவர்களின் செயல்பாடுகளை அறிந்து, அவர்கள் சொல்கிற விஷயங்களின்படி நடப்பதே முக்கியம். குழந்தைகளின் முதல் ரோல்மாடலாக இருக்கிற பெற்றோர் சரியாக நடந்தால்தான், பொய்யும் புரட்டுமின்றி வாழ்ந்தால்தான், குழந்தைகளும் அவற்றைப் பார்த்து, அதன்படியே நடக்கும். அதனால்தான் தந்தையை குடும்பத்தலைவன் என்றும், தாயை குடும்பத்தலைவி என்றும் சொல்கிறோம். ஆனால், நமக்கெல்லாம் தலைவனும் தலைவியுமாக, நாயகனும் நாயகியுமாக இருப்பவர்கள் பகவான் ஸ்ரீகிருஷ்ணபரமாத்மாவும் ஸ்ரீருக்மிணி பிராட்டியாரும்.

ஸ்ரீகிருஷ்ணன் நாயகன் என்றால், யுத்தத்தில் முன் நின்று அல்லவா போர் செய்திருக்க வேண்டும் என்று கேட்கலாம். ஆமாம்... முன்னால்தான் நின்றுகொண்டிருந்தான் ஸ்ரீகிருஷ்ணன். ஒரு தேரைச் செலுத்துபவன் பின்னாடி இருந்துகொண்டு எப்படி ஓட்ட முடியும்? அர்ஜுனனை உட்காரச் சொல்லிவிட்டு, முன்னே ஏறிக்கொண்டுதானே தேரைச் செலுத்தினான்! என்னதான் அர்ஜுனன் வீரன், சூரன் என்றாலும்கூட, அம்பும் வில்லும் வைத்திருந்தாலும், தேர் எப்படிச் செல்லவேண்டும், எங்கே பள்ளம் இருக்கிறது, எந்தத் தருணத்தில் குதிரை திமிரும் என்பதை அறிந்து, அந்தத் தேரைச் செலுத்துவதற்கான கடிவாளம் பகவானிடம்தானே இருந்தது!

இந்திரியம் எனும் குதிரையை நம்மால் அடக்கமுடியாது. அதை அடக்கியாள்வதற்கு மனம் என்கிற கடிவாளம் தேவையாக இருக்கிறது. அந்த மனத்தில் இறைவனை நினைத்து அமர்த்திக்கொண்டுவிட்டால், மனத்தை அப்படியே இறைவனிடம் ஒப்படைத்துவிட்டால், கடிவாளம் போட்டு இந்திரியங்களை அடக்கி, நம்மை நிம்மதியுடனும் அமைதியுடனும் இனிதே வாழச் செய்வான் நாயகன் ஸ்ரீகிருஷ்ணன்.

மனத்தைக் கடவுள் பக்கம் திருப்புங்கள். மொத்த மனத்தையும் அவனிடம் ஒப்படைத்துவிடுங்கள். அதற்குப் பெயர்தான் சரணாகதி!

கடவுளிடம் சரணடைதல் என்பது உயர்வான விஷயம். உத்தமமான காரியம். அப்படி ஒப்புக்கொடுக்கிறவர்களே, சரணடைபவர்களே பாக்கியவான்கள்!

## கண்ணன் நாமம் சொல்லும் கதைகள்!

வேளுக்குடி கிருஷ்ணன்




**ப**ள்ளிக்கூடத்தில் ஆசிரியராக இருப்பவராகட்டும், அலுவலகத்தில் பணிபுரிபவராகட்டும்... அவர்கள் எப்படிச் செயல்படவேண்டும் தெரியுமா?

ஆசிரியர் என்றால் மாணவர்களுக்கு ஞானத்தை வழங்கி, அவர்களைக் கைதூக்கிவிடுபவர்களாக இருக்கவேண்டும். குறிப்பாக, படிப்பில் மந்தமாக இருக்கிற மாணவர்களை அடையாளம் கண்டு, கூடுதல் கவனம் செலுத்தி, அவர்களைத் தேர்ச்சி பெறச் செய்யவேண்டும். அப்படிச் செயல்பட்டால்தான், அந்த ஆசிரியர் அடுத்தடுத்த காலகட்டங்களில் தலைமை ஆசிரியராக, பள்ளி முதல்வராக எல்லாம் உயரமுடியும்.

அதேபோல் அலுவலகத்தில் பணிபுரிபவருக்கும் அடுத்தடுத்த உயர்பதவிகளை அடையவேண்டும் என்று விருப்பம் இருக்கும். தான் செய்கிற வேலையில் இருந்து விடுபட்டு, அடுத்த உயர் பதவிக்கு அவர் செல்லவேண்டும் என்றால், அவர் அதுவரை பார்த்து வந்த வேலையைத் திறம்படச் செய்வதற்கு, அவருக்குக் கீழே பணிபுரிபவரைத் தகுதியுள்ளவராகச் செய்து, தன் இடத்துக்கு உயர்த்திவிடவேண்டும். ஆக, ஒரே கல்லில் இரண்டு மாங்காய் என்பது போல, அவருக்கும் பதவி உயர்வு கிடைக்கும்; அவருக்குக் கீழே இருந்த நபரும் முன்னுக்கு வந்துவிடுவார்.

பகவான் ஸ்ரீகிருஷ்ணர் விஷயத்திலும் அப்படித்தான் நடந்தது. மகாபாரத யுத்தத்தில் வென்றவர் யார் என்றால் சாட்ஷாத் பகவான் ஸ்ரீகிருஷ்ணர்தான். இத்தனைக்கும் அவர் எந்த ஆயுதத்தையும் எடுக்கவில்லை; எவர் சிரசையும் கொய்து வீரத்தை நிலை நாட்டவில்லை. ஆனாலும், ஜெயித்தது அவர்தான். தர்மத்தை நிலைநாட்டியது கண்ண பரமாத்மாதான்.

'அப்படியென்றால், பஞ்ச பாண்டவர்கள்தானே போரில் ஈடுபட்டார்கள்? அவர்கள்தானே கடும் சண்டையிட்டு, ஒவ்வொருவராக வீழ்த்திக் காட்டினார்கள்? அவர்களுக்கு அந்தப் பெருமை சேராதா?' என்று கேட்கலாம்.

உண்மைதான். ஆனால், பஞ்ச பாண்டவர்களை உயர்த்துவதற்காக, தருமமே சிறந்தது என்று அறத்தின் வழியே வாழ்ந்தவர்களை கௌரவப்படுத்துவதற்காக ஸ்ரீகண்ணபிரான் செய்த விளையாட்டு அது! பஞ்சபாண்டவர்கள் போர் தொடுத்தார்கள்; ஆனால், அவர்கள் வெற்றியைத் தழுவுவதற்கு பகவான் ஸ்ரீகிருஷ்ணர்தான் உறுதுணையாக, பக்கபலமாக இருந்தார். அதனால்தான் பகவானை நாயகன் என்று போற்றிக் கொண்டாடுகிறோம்.

கண்ணபிரான் கால்நீட்டிப் படுத்துக்கொண்டிருந்தார். ஆனால், தூங்கவில்லை. அர்ஜுனனும் துரியோதனனும் வருவதை அறிந்தவர், தூங்குவதுபோல் நடித்தார். உள்ளே நுழைந்த அர்ஜுனன், அவரின் திருவடிக்கு அருகில் நின்றுகொண்டான். துரியோதனன் அவரின் திருமுடிக்கு அருகில் நின்றான்.

கண்களைத் திறந்த பகவானின் பார்வையில் முதலில் பட்டவன், திருவடி அருகில் நின்றிருந்த அர்ஜுனனே! 'என்ன வேண்டும்?' என்று பகவான் கேட்க, "யுத்தத்துக்கு உதவி புரியவேண்டும்" என்றான் அர்ஜுனன்.

உடனே ஸ்ரீகிருஷ்ணர், "என்னிடம் கோடிக்கணக்கான வீரர்கள் உள்ளனர். அந்தப் படை வேண்டுமா, அல்லது நான் ஒருவன் இருக்கிறேன். நான் வேண்டுமா? கேள் அர்ஜுனா?" என்றார்.

அதைக் கேட்டு துரியோதனன் திடுக்கிட்டான். சற்றே கோபமானான். ஸ்ரீகிருஷ்ணனின் பார்வையில் படும்படி வந்து நின்று, "கண்ணா, நான்தான் முதலில் நுழைந்து உன் அருகில் வந்து நின்றேன். என்னிடம் அல்லவா முதலில் கேட்க வேண்டும்? அவனிடம் முதலில் கேட்பது சரியல்ல!" என்றான்.



"அடடா..! கண் விழித்ததும் எனக்கு முன்னே அர்ஜுனன் நின்றிருந்ததைத்தான் பார்த்தேன். போகட்டும், உன்னைவிட அவன் வயதில் சிறியவன் அல்லவா! எனவே, இளையவனிடம் முதலில் கேட்பதே முறையாக இருக்கும்" என்றான் ஸ்ரீகிருஷ்ணன்.

அதையடுத்து அர்ஜுனன், "உன்னிடம் கோடி பேரென்ன... பத்து கோடி பேர் கொண்ட படை வேண்டுமானாலும் இருக்கட்டும். எங்களுக்கு அந்தப் படை வேண்டாம். நீ ஒருவன் மட்டும் எங்கள் பக்கம் இருந்தால் போதும், கண்ணா. யுத்தத்தில் எங்களுக்கு வெற்றி நிச்சயம்!" என்று உறுதிபடத் தெரிவித்தான்.

ஆமாம். பகவான் ஸ்ரீகிருஷ்ணர், நாயகன்; சகாயன்; நாதன்; ஆசிரியன்; ஆபத்பாந்தவன். அதனால்தான் பகவான் ஸ்ரீகிருஷ்ணரின் துணையை பஞ்சபாண்டவர்கள் நாடினார்கள்; வெற்றியும் பெற்றார்கள்.

பகவான் கண்ணபிரான், நம்மை அழைத்துச் செல்கிறான். நமக்குத் தேவையில்லாதவற்றை எல்லாம் அழித்தொழித்துவிட்டுத் தேவையானவற்றை வழங்குகிறான். இதனை 'நயதி' அதாவது 'அழைத்துச் செல்பவன்' என்றும், 'பிராபயததி' அதாவது 'தேவையானவற்றைத் தந்தருள்கிறான்' என்றும் போற்றியுள்ளனர் பெரியோர்.

அதுமட்டுமா? நம்மை வழிநடத்துபவனே பகவான் ஸ்ரீகிருஷ்ணன்தான். பாண்டவ சகோதரர்களை யுத்தத்தில் வழிநடத்தியதும் அவன்தானே! 'அது எப்படி? சேனைக்கு அதிபதியாக, சேனாதிபதியாக இருந்தால்தானே அவன் யுத்தத்தை வழிநடத்தியிருக்கமுடியும்? அவன் வெறும் தேரோட்டிதானே?' என்று சிலர் கேட்கலாம்.

சரி... தேரில் கண்ணபிரான் தேரோட்டுகிறான். பின்னே அர்ஜுனன் அமர்ந்திருக்கிறான். இப்போது வழிநடத்திச் செல்பவர் யார்? எவருக்குத் தரவேண்டும் மரியாதை?

முன்னே இருப்பவன் என்பதால், கண்ண பிரானுக்கு முக்கியத்துவம் தரவேண்டுமா? முதலாளி என்பதால் அர்ஜுனனுக்கு மரியாதை செய்யவேண்டுமா?

அர்ஜுனன் உட்பட இந்த உலகத்து மக்கள் அனைவருக்குமே மோட்சம் பெறவேண்டும் என்கிற விருப்பம் உண்டு. மோட்ச கதி அடையவேண்டும் என்பதற்கு என்னென்ன வழிகள் உள்ளன என்கிற தேடல் இல்லாத மனிதர்கள் வெகு குறைவு.

வீட்டில் இருக்கும்போது வீட்டுக்கான கடமைகளைச் செய்து, அலுவலகத்தில் இருக்கிற நேரத்தில் நமக்குக் கொடுக்கப் பட்ட வேலையைச் சிறப்புறச் செய்து வாழ்வதுதானே வெற்றிக்கான வழி! அதேபோல், மோட்ச கதியை அடைய வேண்டும் என்றால், பக்தி யோகத்தில் திளைக்கவேண்டும்; ஞானத்தின் மீது விருப்பம் கொண்டு ஆழ்ந்து தியானிக்க வேண்டும். உண்மையான பிரார்த்தனையை உடனடியாக ஈடேற்றித் தருவான் பரந்தாமன். ஆக, தேடலும் ஆவலும் கொண்டு இருக்கிற அர்ஜுனன், ஜீவாத்மா. எனவே, அந்த நோக்கத்தின்படி பார்த்தால், அர்ஜுனனுக்கு முக்கியத்துவம் தரவேண்டுமா? அல்லது அந்த யோகத்தையும் ஞானத்தையும் தந்தருளும் பரமாத்மாவுக்கு முன்னுரிமை அளித்து, முக்கியத்துவம் தரவேண்டுமா?

தருபவன் இறைவன்; பெறுபவன் அடியவன். நமக்கு எங்கெல்லாம் முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறதோ, அவை அனைத்துக்கும் வித்தாக நிறைந்திருப்பவன், பரமாத்மாவே! அதனால்தான், ஸ்ரீகண்ணனை நாயகன் என்று போற்றித் துதிக்கிறோம்; கொண்டாடுகிறோம்!

 கண்ணன் நாமம் சொல்லும் கதைகள்!

வேளுக்குடி கிருஷ்ணன்






ஒருவரைக் கத்தியால் குத்தித்தான் கொல்லவேண்டும் என்றில்லை; அரிவாளால் வெட்டித்தான் சாகடிக்கவேண்டும் என்பது கிடையாது; இன்றைக்கு இருக்கிற நவீன ஆயுதங்களால்தான் அழிக்கவேண்டும் என்கிற அவசியம் இல்லை. கத்தியின்றி, ரத்தமின்றி ஒருவரைக் கொன்று போடலாம்! எப்படி என்கிறீர்களா?

முடியும். பகவான் ஸ்ரீகிருஷ்ணர், அர்ஜுனனுக்கு அப்படித்தான் சொல்லிக் கொடுத்திருக்கிறார். "இதைவிட எளிமையான வழி இல்லை, அர்ஜுனா! உன் வில் தருகிற வலியைவிட, உன் அம்பு பாய்ந்து தருகிற இம்சையைவிட, நான் சொல்லும் முறையில் தாக்கலாம். அப்படித் தாக்கினால், அதை அவர்களால் தாங்கிக் கொள்ளமுடியாது. துவண்டு சரிவார்கள். ஆனால் என்ன... உன்னைப் பொறுத்தவரைக்கும் அவர் இறந்துவிட்டார்; ஆனால், அவர் இறந்திருக்கமாட்டார்..." என்று கிருஷ்ண பரமாத்மா சொல்லச் சொல்ல, தலை கிறுகிறுத்துப் போனது அர்ஜுனனுக்கு.

"அட... என்ன கிருஷ்ணா நீ! நான் கடும் குழப்பத்தில் இருக்கிறேன். நீ என்னடாவென்றால், என்னைக் கேலி செய்வதுபோல் பேசுகிறாய். ஆயுதம் வேண்டாம் என்கிறாய்; ஆயுதம் எடுக்காமலேயே அழிக்கலாம் என்கிறாய். அவன் செத்துப்போவான் என்கிறாய். ஆனால், சாகமாட்டான் என்கிறாய். ஒன்றுமே புரியவில்லை" என்று புலம்பினான்.

"காண்டீபத்தைப் புரிந்துகொண்ட உன்னால் மனிதர்களைப் புரிந்து கொள்ள முடியவில்லையே அர்ஜுனா! காண்டீபத்தைக் கேலி செய்தால், எவராக இருந்தாலும் மன்னிக்கமாட்டாய் என்பது எங்கள் எல்லோருக்கும் தெரியும். ஆனால், நேர்மையும் உண்மையும் கொண்டு வாழ்பவரைக் கொல்லும் உத்தி உனக்குத் தெரியவில்லையே" என்று பரிகாசம் செய்வதுபோல் பேசினார் கண்ண பரமாத்மா. ஆனாலும், அந்தப் பரிகாசத்தில் உண்மை ஒளிந்திருந்தது.

அதைக் கேட்டதும் ஆவேசமும் கோபமுமாக இருந்த அர்ஜுனனுக்கு அழுகையே வந்துவிட்டது.

"பின்னே என்ன கண்ணா... என் காண்டீபத்தை எவர் பழித்தாலும், அவர்களைச் சும்மா விடமாட்டேன் என்பது தெரியும்தானே உனக்கு! அப்படியிருக்க, தருமபுத்திரரே அப்படியரு இழிவான செயலைச் செய்யலாமா?




போர்முனையில், எதிரியைத் தாக்குவதற்கு தகுந்த தருணத்தை எதிர்பார்த்து காத்திருந்தேன். ஆனால், நான் வீண் தாமதம் செய்வதாகக் கருதி, என்னையும் காண்டீபத்தையும் பழித்துவிட்டார் அண்ணன். காண்டீபத்தை பழிப்பவர்களைக் கொல்வேன் என சபதம் ஏற்றிருக்கிறேன் நான். அதை நிறைவேற்ற வேண்டிய நிர்பந்தம் எனக்கு. ஆனால் நீயோ, ஏதேதோ சொல்லிக் குழப்புகிறாய்? எனக்கு எதுவுமே புரியவில்லை. நான் என்னதான் செய்ய வேண்டும். அதையேனும் சொல்!" என்றான் அர்ஜுனன்.

"நீ ஒன்றும் செய்யவேண்டாம். நேர்மையும் உண்மைக் குணமுமாக இருப்பவரை, சத்தியசீலரை, மரியாதைக்குறைவாக ஒரேயரு வார்த்தை பேசிவிடு! அது கிட்டத்தட்ட அவரைக் கொன்றதற்குச் சமம்தான்!" என்றார் பகவான்.

அதாவது... மரியாதைக்கு உரிய நபரை, எல்லோரும் போற்றிக் கொண்டாடுகிற ஒருவரை, இறைபக்தியுடன் இருப்பவரை, எல்லோரிடமும் அன்பும் பிரியமுமாகப் பழகுபவரைக் கொல்வதற்கு வேறெதுவும் செய்யவேண்டாம்; அவரை அவச்சொல்லாக, மரியாதை கொடுக்காமல் பேசினால் போதும். அதுவே... அவர் இறந்ததற்குச் சமம் என்பதை உலக மக்களுக்கு எப்படி உணர்த்திவிட்டார், பகவான்!

சத்தியத்துக்கும் நேர்மைக்கும் இருக்கிற மகத்துவத்தை அர்ஜுனனுக்குச் சொல்வதன் மூலமாக, கண்ணபரமாத்மா நமக்கு அருளிய பாடம் இது.

அவமரியாதையாகச் சொல்கிற ஒற்றை வார்த்தையே ஒருவரைக் கொல்வதற்குப் போதுமானது. அதனால் அவன் இறப்பான்; இறக்காமல் இருப்பான் என்பதாகச் சொன்னார் அல்லவா ஸ்ரீகிருஷ்ணர்! அதேவிதமாக, இறைவனின் பிறப்பை, அவனுடைய அவதாரத்தை ஆழ்வார்களும் முன்னோர்களும் போற்றியுள்ளனர். அதாவது, 'பிறக்காத எம்பெருமான் பிறக்கிறான்' என்று சொல்லிப் பூரிக்கின்றனர்.

தேரைச் செலுத்திய ஸ்ரீகிருஷ்ணர், தேரை ஓட்டிச் செல்வதில் மட்டுமா கவனம் வைத்திருந்தார்? மொத்த யுத்தத்தையும் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து நிறுத்தி, போரில் பாண்டவர்களுக்கு வெற்றிவாகை சூடித் தந்தவராயிற்றே அவர்!

இருபத்தைந்து கஜ தூரத்தில் இருக்கிற அர்ஜுனனை நோக்கி பீஷ்மர் அம்புவிடுவார். சட்டென்று 250 கஜ தூரத்துக்குச் சென்று தேரை நிறுத்தியிருப்பார் பகவான். 'ஓஹோ... 250 தூரத்தில் இருந்தால் என்னால் எதுவும் செய்யமுடியாது என்று நினைத்தாயா?' என்று ஆவேசத்துடன் மீண்டும் அம்பு தொடுப்பார் பீஷ்மர். உடனே கிருஷ்ண பரமாத்மா, 25 கஜ தூரத்துக்குக் கொண்டு வந்து தேரை நிறுத்துவார்.

வெற்றி... வெற்றி... வெற்றி... என்று ஜெயிப்பதற்கான அத்தனை சூட்சுமங்களையும் செய்தருளினார் ஸ்ரீகண்ணபிரான். அதேநேரம்... தோல்வியின் மூலமாகவும் ஜெயிக்கலாம் என்பதை உலகுக்கு உணர்த்தினார்.

'அட... அது எப்படி? தோற்றால் எப்படி வெற்றி பெற்றதாகும்?' என்று எவரேனும் கேட்கலாம்.

கணவன்- மனைவிக்கு இடையே சின்னதாக ஓர் ஊடல். லேசாக வந்த பிரச்னையில் இரண்டு பேருமே கிழக்கு மேற்காகப் பார்த்து, முறைத்துக் கொள்கின்றனர். இப்போது சமரசம் செய்யும் கணவனோ அல்லது மனைவியோ தோற்றுப் போனதாக ஆகிவிடும்; எவர் விட்டுக் கொடுக்கிறாரோ, அவர் தோல்வி அடைந்ததாக ஆகிப்போகும். ஆனால், சமரசத்துக்கு வருபவரோ, விட்டுக் கொடுப்பவரோ தோற்றுப் போனதாகத் தெரியலாமே தவிர, உண்மையில் வெற்றி பெற்றவர் யார் என்று பார்த்தால், அவர்தான் என்பது புரிய வரும். இதைத்தான் 'பத்தினியிடம் தோற்பான் பரம ரசிகன்' என்பார்கள் முன்னோர்கள்.

ஜெயிப்பதில் 3 மூன்று வகை உண்டு. ஜயம் என்கிற வெற்றி என்பது ஒன்று; தோல்வி என்பது மற்றொன்று. வெற்றியோ தோல்வியோ... அதை ஆழ்ந்து ரசிக்கிற மனோபாவம் ரொம்பவே முக்கியம். இது மூன்றாவது!

உலகில், எல்லோரும் எப்போதும் வெற்றிக் கனியைப் பறித்தே ஆகவேண்டும் என்றுதான் விரும்புவார்கள். இந்த இரண்டும் இல்லாமல், வெற்றியோ தோல்வியோ... அதை அனுபவிக்க வேண்டும்; அனுபவித்து ரசிக்கவேண்டும் என்கிற சிந்தனை ஒன்றும் உள்ளது. ஆக, எது வந்தாலும் ரசிகன் எனும் நிலையில் இருப்பது உன்னதமானது.

ஸ்ரீகிருஷ்ணர் மகாபாரத யுத்தத்தின் போது, பாண்டவர்களுக்காக எவ்வளவோ விட்டுக் கொடுத்திருக்கிறார். பல தருணங்களில், எல்லோரிடமுமே விட்டுக் கொடுத்து, தோற்றுப் போவதன் மூலம் வெற்றி வாகை சூடியிருக்கிறார். ஏனெனில்... பகவான் ஸ்ரீகிருஷ்ணர் மகா ரசிகன்!

## தலைவன்!

**நா**யகனாக, தலைவனாக, முதல்வனாக ஒருவரை வரித்துக்கொண்டு வாழ்வதற்கு ஆழ்ந்த மனோபலம் வேண்டும். குறிப்பாக, நாயகன் எனும் தகுதிக்கு உரியவராக அவர் இருக்கவேண்டும். தலைவன் என்பதற்குத் தக்கபடி, தலைமைப் பண்பு அவரிடத்திலே அமைந்திருக்கவேண்டும். முதல்வன் என்கிற சொல்லுக்கு ஏற்ப, சகல வித்தைகளிலும் ஞானத்திலும் முதல்வனாக, முதன்மையானவனாகத் திகழ வேண்டும். இவை அனைத்தையும் ஒருங்கே பெற்றவர் பகவான் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா.




பகவான் ஸ்ரீகண்ணபிரானை, நாயகன் எனப் போற்றுகிறோம். ஏனென்றால், அவர் நம்மை வழிநடத்துகிறார். மகாபாரத யுத்தத்தில், ஐவரையும் வழிநடத்திச் சென்றார் அல்லவா? இத்தனைக்கும் யுத்தத்தில் ஆயுதம் ஏந்துவதுதானே மரபு? ஆனால் அவரோ எந்த ஆயுதத்தையும் கையில் ஏந்தவில்லை.

ஆயுதம் ஏந்தாமல், வெல்ல வைத்தவர் ஸ்ரீகிருஷ்ணன். அவர்கள் ஜெயித்ததாகச் சொன்னாலும், உண்மையில் வென்றது கிருஷ்ணன்தான். ஏனென்றால், உலகின் நாயகனும், யுத்தத்தின் நாயகனும் அவரே!

சரி... அப்படியெனில் பகவான் ஸ்ரீகிருஷ்ணர், தன் திருக்கரத்தில் என்னதான் வைத்திருந்தார் என்று கேட்கிறீர்களா?



ஒரேயரு கோல் வைத்திருந்தார். அதைக் கொண்டே ஐவரையும் ரட்சித்து அருளினார். இதோ... சென்னை திருவல்லிக்கேணியில் ஸ்ரீபார்த்தசாரதியாக சேவை சாதிக்கும் பெருமாள், தன் திருக்கரத்தில் கோலுடன் காட்சி தரும் அழகைக் கண்டு சிலிர்க்கலாம்.

உபந்யாச நிகழ்ச்சி நடைபெறுகிறது என்றால், நாற்காலி வேண்டும்; மேடை அவசியம்; மைக் மிக முக்கியம். ஆனால் அதேநேரத்தில், மேடை- நாற்காலிகள் இல்லையென்றாலோ, மைக்செட் வசதிகள் வைக்காமல் இருந்துவிட்டாலோ உபந்யாசம் நடக்காமல் போய்விடுமா? பகவான் ஸ்ரீகிருஷ்ணருக்கும் அப்படித்தான்... ஆயுதங்கள் ஏதும் தேவையில்லை. உலகை உய்விக்க சாதாரண கோல் ஒன்றே போதும்!

'இவர் இல்லையென்றால் இந்த விஷயம் நடக்கவே நடக்காது' என்று எவரைப் பார்த்துச் சொல்கிறோமோ, அவரே நாயக லட்சணங்களுக்குச் சொந்தக்காரர். நாயகன் என்பவன் வழிநடத்திச் செல்பவன். அதனால்தான் அவன் முன்னே நடக்கிறான். அதுமட்டுமா... ஆபத்பாந்தவனாக இருந்து நம்மைக் காத்தருள்பவன்.

ஆபத்து காலங்களில் நம்மைக் காப்பதில் மட்டுமா நாயகனாகத் திகழ்கிறான்? சிருங்கார சாதகன் அல்லவா ஸ்ரீகண்ணன்! காதலிலும் கைத்தலம் பற்றுவதிலும்கூட அவர் நாயகனாயிற்றே!

கண்ணபிரானின் சிருங்கார சாதகத்தை, ஸ்ரீஆண்டாளிடம் கேட்கவேண்டும். அன்பு ததும்பத் ததும்பச் சொல்லித் தீர்த்திருக் கிறாள் அவள். நம்மாழ்வாரிடம் பகவா னின் சிருங்காரத்தைக் கேட்டால், சிலிர்ப்பும் சிரிப்பும் மாறாமல் எவ்வளவு பாசுரங்களில் பாடியிருக்கிறார் என்பது புரியும். திருமங்கை ஆழ்வாரும் கண்ணனின் சிருங்காரத்தை சிலாகித்திருக்கிறார்.

உலகின் சிருங்கார விஷயத்தில், காதலாகி, கைத்தலம் பற்றுகிற விஷயத்தில் நாயகனாகத் திகழ்கிறார் பகவான் கிருஷ்ணன்.

'மைத்துனன் நம்பி மதுசூதனன்' என்று அழகாகப் பாடியிருக்கிறாள் ஸ்ரீஆண்டாள். கணவரின் தம்பியை மைத்துனன் என்று இந்தக் காலத் தில் சொல்கிறோம். ஆனால், கணவ னையே மைத்துனன் என்று அந்தக் காலத்தில் அழைத்தார்கள். இங்கே, ஸ்ரீகிருஷ்ணரை, தன் அன்புக் காதலரை

மைத்துனன் என்று அழைக்கிறாள் ஸ்ரீஆண்டாள். அடுத்து 'நம்பி' என்று சொல்கிறாள். அது, அவரது குணங்களைப் போற்றிச் சொல்வதற்காக அவள் பயன்படுத்திய மிக எளிய, சிறிய வார்த்தை. தவிர, நற்குணங்களும் புனிதமும் கொண்டு மதிப்புக்குரிய உறவைக் கொண்டவர் என்று அர்த்தம்.

இந்த இடத்தில் ஒரு விஷயத்தைக் கவனிக்க வேண்டும். 'அவர் ரொம்ப நல்லவருங்க' என்று சொல்லி, ஒருவர் மீது மரியாதை செலுத்துகிறோம். ஆனால் ஒருகட்டத்தில், சில சந்தர்ப்ப சூழ்நிலைகளால், அவரிடம் இருந்த நல்ல குணங்கள் விலகிவிட்டன என்றால், உடனே நாம் அவரை வெறுத்து, ஒதுக்கிவிடுவோம். "ஹூம்...

ஒருகாலத்துல மனுஷன் ரொம்பத் தங்கமானவராத்தான் இருந்தாரு. இப்ப புத்தி பிசகி, இப்படி ஆயிட்டாரு!" என்று எள்ளி நகையாடுவோம்.

உண்மையில், காலையில் இருப்பது போல் மதியத்திலோ, மதியம் இருப்பது மாதிரி மாலையிலோ நம் குணங்கள் இருப்பது இல்லை. எனவே, ஒருவரிடம் மதிக்கத்தக்கவர் என்பதற்கான குணங்கள் இருப்பின், அவரை எந்தச் சூழலிலும் எக்காரணத்தைக் கொண்டும் மதிக்காமல் இருப்பது மாபெரும் தவறு.

நூறு சதவிகிதம் நல்லவர் என்று இந்த உலகில் எவரை யேனும் காட்டிவிடமுடியுமா நம்மால்? 'அவர் நல்லவர்' என்று இந்தப் பக்கம் பத்துப் பேர் சொல்வார்கள். அந்தப் பக்கம் இருப்பவர்களோ 'ரொம்பக் கெட்டவர்' என்பார்கள். 'அய்யய்யோ... அவர் மேல இருக்கிற நம்பிக்கையே போயிடுச்சு. அவர் சொல்றது எல்லாமே பொய்' என்று விமரிசிப்பார்கள்.



ஆனால் பொய்யும் சொல்லி, மெய்யும் சொல்லி, மெய்யே ஜெயிக்கும் என்று நிலைநிறுத்தியவர் பகவான் ஸ்ரீகிருஷ்ணன். பொய் சொல்வதில் தப்பு இல்லை. அந்தப் பொய்யால், எவருக்கேனும் நன்மை கிடைக்கும் என்றால், எவரையேனும் ஆபத்தில் இருந்து காப்பாற்ற முடியும் என்றால், தாராளமாகப் பொய் சொல்லலாம். இதைத்தான் பகவான் ஸ்ரீகிருஷ்ணர், தன் அவதாரத்தின் மூலம் வாழ்ந்து காட்டி அருளியிருக்கிறார்.

எத்தனை பொய்கள் சொன்னாலும், எவ்வளவு வஞ்சகமான சூழ்ச்சிகளும் நாடகங்களும் போட்டாலும் கண்ணனைக் குறைத்து மதிப்பிடுகிறோமா, என்ன? எப்போதும் எல்லோராலும் மதிக்கத்தக்கதான நாயக குணங்களைக் கொண்டவர் ஸ்ரீகிருஷ்ணன்.

அதேபோல், இந்த உலகில் ஒரேயரு குணம் கொண்டவரை எவரும் மதிப்பதும் இல்லை; ஸ்நேகித மாகப் பழகுவதும் இல்லை. அது எந்தக் குணம் தெரியுமா? தற்பெருமை. எதற்கெடுத்தாலும் தன்னைத் தானே புகழ்ந்து பெருமை பீற்றிக் கொள்பவரை உலகில் எவருமே விரும்புவது இல்லை. தற்பெருமை, கர்வம், அலட்டல் என்பவையெல்லாம் அழிவுக்கான அறிகுறிகள்; மிகக் கொடிய விஷக்கிருமிகள். கண்ண பரமாத்மா ஒருபோதும் தன்னைப் பற்றிப் பெருமையாகப் பேசிக்கொண்டதே இல்லை.

ஆனால், மிகத் தேவையான தருணத்தில், மிகச் சரியான சந்தர்ப்பத்தில் பெருமை பேசாமல் இருப்பதும் தவறு. அப்படியரு சந்தர்ப்பம் கிடைக்க... பகவான் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனிடம் பேசினார். அதுதான் கீதை எனும் வாழ்வியல் தத்துவம்!






**மு**தலாளியிடம் சம்பள உயர்வு கேட்கவேண்டும் என்று அந்த வேலையாளுக்குத் தோன்றியது. தன் நண்பனிடம் இதுகுறித்து ஆலோசனை கேட்டான். உடனே நண்பன், "கண்ட நேரத்துலயும் முதலாளிகிட்ட சம்பளத்தை உசத்தச் சொல்லிக் கேக்கக் கூடாது. அவர் உற்சாகமா, சந்தோஷமா சிரிக்கிற நேரமாப் பார்த்து, சம்பள உயர்வைக் கேளு!" என்று அறிவுரை வழங்கினான்.

வேலையாளும் அந்தத் தருணத்துக்காகக் காத்திருந்தான். ஒருநாள், கடைக்குச் சென்று எண்ணெய் வாங்கிவரச் சொன்னார் முதலாளி. உடனே அவன், ஒரு கோணிப்பையை எடுத்துக் கொண்டு கிளம்பினான். "ஏய்... என்னப்பா இது? எண்ணெய் வாங்கறதுக்குப் பாத்திரத்தைதானே எடுத்துட்டுப் போகணும்? நீ என்னடான்னா கோணிப்பையை எடுத்துட்டுக் கிளம்பிட்டியே..." என்று கலகலவெனச் சிரித்தார் முதலாளி.

'ஆஹா... இதோ முதலாளி சிரித்துக் கொண் டிருக்கிறார்; இப்போது சம்பள உயர்வைக் கேட்டுவிடுவோம்' என்று நினைத்தபடியே, "முதலாளி, ஒரு நூறு ரூபா சம்பளத்தை உசத்திக் கொடுங்கய்யா!" என்று கேட்டேவிட்டான். வந்ததே கோபம் முதலாளிக்கு!

நியாயமாக, எண்ணெய் வாங்குவதற்குக் கோணிப்பையை எடுத்துச் செல்லும் மடையனை வேலையை விட்டே தூக்க வேண்டும். ஆனால், அவனோ சம்பள உயர்வு கேட்டால், எப்படி இருக்கும் முதலாளிக்கு?

இடம் அறிந்து, சூழல் புரிந்து எதையும் கேட்கவேண்டும். அது ரொம்பவே முக்கியம். பகவான் ஸ்ரீகிருஷ்ணர், ஒவ்வொரு சூழலிலும் எப்படி நடந்துகொள்ளவேண்டும், என்ன செய்யவேண்டும்,

*எதிராளியை எவ்விதம் புரிந்துகொள்ள வேண்டும் என்பதையெல்லாம் வாழ்ந்து காட்டியிருக்கிறார். அப்படி வாழ்ந்து காட்டியதன் மூலமாக நமக்கும் உணர்த்தியிருக்கிறார்.*

*அதுமட்டுமா? இங்கே, தந்தை மீது மகன் மரியாதை வைத்திருப்பதும், மனைவி மீது கணவன் பிரியம் கொண்டிருப்பதும், கணவன் மீது மனைவி வாஞ்சையுடன் இருப்பதும், மாணவன் ஆசிரியரிடம் பணிவு காட்டுவதும் எதன் பொருட்டு? ஏன்? எதற்காக? தந்தை நல்லவர்; மனைவி நல்லவள்; ஆசிரியர் நல்லவர்; கணவன் நல்லவன் என்பதற்காகவா?*

*நல்லவன் என்ற ஒரேயரு தகுதி இருப்பதற் காக மட்டுமே ஒருவரை மதித்துவிடக் கூடாது. அவரிடம் உள்ள அந்த நல்ல குணம் ஒருநாள் மறைந்துபோகலாம். இவர் நமக்கு இன்ன உறவு என்பதைக் கொண்டும் அவரை நாம் மதிப்பிடவேண்டும்.*

*ஸ்ரீராமன் மிகப் பெரிய சக்கரவர்த்தி; மிக அழகானவன்; வில் வித்தைகளில் தேர்ந்தவன்*

*என்கிற காரணத்தால் எல்லாம் சீதாதேவி அவன் மீது மரியாதையும் பணிவும் கொண்டிருக்கவில்லை. ராஜ்ஜியத்தை இழந்த நிலையிலும், வனத்துக்குச் சென்றபோதிலும் அவன் மீது மிகுந்த மரியாதையுடனும், அன்புடனும் நடந்துகொண்டாள். அவளின் நேசத்துக்கு உரிய கணவன் ஸ்ரீராமன் என்பதும் முக்கிய காரணம்!*

*அதேபோல், நாயகன் என்பவனுக்கு ஒரே யரு நல்ல குணம் மட்டும் இருந்தால் போதாது. அப்படி ஒரேயரு குணம் மட்டுமே இருந்தால், அவன் நாயகனாகப் போற்றப்*

*படமாட்டான். நல்லவன், உறவுக்காரன், சக்கரவர்த்தி எனப் பல்லாயிரம் காரணங்கள் ஸ்ரீராமனுக்கு இருந்ததால்தான், நாயகன் எனப் போற்றப்பட்டான். அதேபோல், நற்குணங்களும், போர் வியூகங்களும், தந்திரமும், கருணையும், ஆவேசமும் எனப் பல குணங்கள் கொண்டிருந்த தால்தான், பகவான் ஸ்ரீகிருஷ்ணர் 'நாயகன்' என உலகத்தாரால் போற்றப்படுகிறார்.*

*உலகின் மிக மோசமான குணங்கள் என்று பிடிவாதத்தை யும், விட்டுக் கொடுக்காத தன்மையையும் சொல்வார்கள். ஸ்ரீகிருஷ்ணர், தரும சகோதரர் களுக்காக நிறையவே விட்டுக் கொடுத்தார். அவர்களின் நலன் பொருட்டுப் பல சந்தர்ப்பங்களில் தனது பிடிவாதத்தையும் தளர்த்திக் கொண்டார்.*

*எதிரில் இருப்பவரிடம் ஒரு விஷயத்தை விளக்குவோம். பேசி முடித்துவிட்டு, 'என்ன நான் சொன்னது புரிஞ்சுதா, இல்லியா?' என்று கேள்வி கேட்போம். ஒருவேளை, அவர் புரியவில்லை என்று சொல்லிவிட்டால், 'அட என்னப்பா நீ? சொல்லும்போது தூங்கிட்டிருந்தியா?' என்று எரிச்சல்படுவோம். ஆனால் ஒருபோதும், 'சரி... உனக்குப் புரியும்படியா நான் விளக்கமா சொல்லலைன்னு நினைக்கிறேன். இப்ப தெளிவா, உனக்குப் புரியும்படியா சொல்ல முயற்சிக்கிறேன்' என்று நாம் சொல்லுவதே இல்லை. கண்ணபிரான் இந்த விஷயத்தில் நமக்கு நேரெதிர்! சொல்லுவதைத் தெளிவாகச் சொன்னதுடன் மட்டுமில்லாமல், 'புரியும்படி சொல்லிவிட்டதாக நினைக்கிறேன். இல்லையெனில் கேள்; மறுபடியும் சொல்கிறேன்' என்று எந்தக் கர்வமும் இல்லாமல் சொன்ன மிகச் சிறந்த ஆசிரியன், ஸ்ரீகண்ணன். எனவேதான் மொத்த மனிதர்களின் வாழ்க்கைக்குமான ஆதாரமாகத் திகழ்கிறது பகவத் கீதை.*

*ஆக, நாயகன் என்பவன், புரிதலுடன் செயல்படுகிறவனாகவும் திகழ்கிறான்.*

*அக்கறை எங்கு இருக்கிறதோ அங்கே புரிந்து கொள்ளுதலும் இருக்கும். புரிந்துகொள்ளுதல் இருக்கும்போது, மிக எளிதாக விட்டுக் கொடுத்துச் செல்வது நடந்தேறும். விட்டுக் கொடுக்கிற மனம் இருந்துவிட்டால், அங்கே பிடிவாதத்துக்கு வேலையே இல்லை. இந்த குணங்கள்*

இருந்துவிட்டால்... நம் எதிரில் இருப்பவர், ஏதேனும் தவறுகள் செய்திருந் தாலும், சட்டென்று அவர்களை மன்னித்து ஏற்றுக்கொள்கிற பக்குவம் வந்துவிடும். ஆனால், நம்மில் பலர் எவரையும் மன்னிப்பதும் இல்லை; அவ்வளவு சீக்கிரத்தில் அவர்கள் செய்ததை மறப்பதும் கிடையாது.

'அவன்கூட முகம் கொடுத்துப் பேசியே பத்துப் பதினஞ்சு வருஷத்துக்கு மேல இருக்கும். பின்னே என்ன... யாரு எவன்னு தராதரம் பார்க்காம, செய்யாத தப்புக்குப் பலர் முன்னாடி அவன் என்னைக் கன்னாபின்னான்னு திட்டிட்டான். அன்னிலேருந்து அவன்கூட நான் பேசுறதே இல்லியே..?' என்று பெருமையாகச் சொல்லிக் கொள்கிறவர்கள்தான் இங்கே அதிகம். ஆனால் பகவான் ஸ்ரீகிருஷ்ணர், பிறர் செய்த தவறுகளைப் பொறுத்துக்கொண்டு, அவர்களை மன்னித்தருளினார். அப்படி மன்னித்ததால்தான் நாயகன் எனப் போற்றப்படுகிறார்.

அதேநேரம், அவர் கம்பீரமானவரும்கூட! எல்லாச் சூழ்நிலைகளிலும் தன்னைப் பொருத்திக் கொண்டு வெற்றி வாகை சூடினார். 'ஆயுதமே எடுக்காத நான் வேண்டுமா, என் படையினர் வேண்டுமா?' என்று துரியோதனனிடம் கேட்டார் கிருஷ்ணர். 'உன் படையினரே போதும்' என்று சாமர்த்தியமாகக் கேட்டதாக நினைத்துக் கொண்டான் துரியோதனன். 'என்ன முட்டாள் தனம் செய்துவிட்டாய்! சரி சரி... எக்காரணத்தைக் கொண்டும் ஆயுதத்தை எடுக்கக்கூடாது என்கிற

வரத்தையும் கேள்' என்று பீஷ்மர் சொல்ல... அப்படியே கேட்டான். 'சரி, ஆயுதம் எடுக்க வில்லை' என உறுதியளித்தார் பகவான்.

இப்படியாக, பிடித்த- பிடிக்காத விஷயங்களை யெல்லாம் உள்ளே மனத்துள் வைத்துக் கொண்ட ஸ்ரீகிருஷ்ணர் எனும் பரம்பொருள், சகலத்தையும் அறிவார் அல்லவா? சர்வத்தையும் அறிந்த நாயகன் அவர்!

கண்ணன் நாமம் சொல்லும் கதைகள்! வேளுக்குடி கிருஷ்ணன்




இறைவனை பக்தியுடனும் ஆழ்ந்த நம்பிக்கையுடனும் பார்ப்பவர்கள்தான் நாம்! 'கடவுளே... என் வாழ்க்கைல நல்லது நடக்க நீதான் அருள்புரியணும்' என்று ஒருமையில் அழைத்துப் பிரார்த்தனை செய்கிற அளவுக்கு இறையை நெருங்குகிற பக்தி நமக்கு இருக்கிறது. மிகப்பெரிய வெற்றியாளர்கள், பிரபலங்கள் எனப் பலரும், 'நான் பேரும்புகழுமாக, காரும் பங்களாவுமாக இருப்பதற்குக் கடவுளின் அருளே காரணம்!' என இறைவனை சிலாகித்துப் பேசுவதைக் கேட்டிருப்போம்.

உண்மையில் இறைவன் என்பவன் நமக்கு கடவுள் என்கிற சக்தி மட்டும்தானா? நமக்கும் அந்தச் சக்திக்குமான உறவு, பக்தன்- கடவுள் என்பதோடு முடிந்துவிடுகிறதா என்ன? கொஞ்சம் யோசியுங்கள்.

அதேபோல், சக மனிதர்கள் எவரேனும் ஆபத்து சம்பத்துகளில் நமக்கு உதவினால், அந்த மாபெரும் உதவியால் நம் வாழ்க்கையில் திருப்புமுனை ஏற்பட்டால், ஒருவரின் உயிர் காப்பாற்றப்பட்டால், உடனே கண்ணீரும் நன்றியுமாக, 'நல்லவேளை... கடவுள் மாதிரி வந்து காப்பாத்துனீங்க' என்று நெகிழ்ச்சியுடன் சொல்வோம். அப்படி ஓடி வந்து உதவி செய்தவர் நம் நண்பராக இருக்கலாம்; அல்லது, முன்பின் அறிமுகமில்லாதவராகக்கூட இருக்கலாம். ஆனாலும், 'கடவுள் மாதிரி வந்து காப்பாற்றினாய்' என்கிற வார்த்தையைத்தான் சொல்வோம். ஏனெனில், உதவிக்கு ஓடி வருவது கடவுளின் செயல். அந்தச் செயலுக்குக் காரணம்... கடவுள் நம் நண்பன்!

ஆமாம். அதனால்தானோ என்னவோ அழகன், வசீகரன், மாயன், பேரருளாளன், பெருஞ்ஜோதி, ஆயிரம் கோடிப் சூர்யப் பிரகாசம் கொண்டவன் என்றெல்லாம் வர்ணித்த ஆழ்வார்கள் பலரும் தவறாமல் 'தோழன்' என்கிற வார்த்தையையும் சொல்லி, பரந்தாமனைக் கொண்டாடியிருக்கிறார்கள்.

அடேங்கப்பா... நண்பன், தோழன், சகா, மித்ரன் என்று தோழமையைப் பறைசாற்ற, ஏகப்பட்ட வார்த்தைகள் இருக்கின்றன. இவற்றில் நட்பானவரை பெருமையுடன் விவரிக்கிற வார்த்தை...

'ஸுக்ருத்' என்பதுதான்! 'ஸுக்ருத்' என்றால் நல்ல மனம் கொண்டவன் என்று அர்த்தம். 'எல்லாரும் நல்லாருக்கணும்' என்று நினைப்பவன் அவன். மோகனமான, மங்கலகரமான வார்த்தைகளையே எப்போதும் உச்சரிப்பவன்.

நற்குணம் கொண்டவர்களை, நல்ல மனம் படைத்தவர்களை நண்பனாகப் பெறுவது என்பது பெரும்பேறு! அப்பேர்ப்பட்ட சத்குணங்கள் அனைத்துக்கும் சொந்தக்காரன் சாட்ஷாத் கண்ண பிரானைத் தவிர, வேறு யாராக இருக்க முடியும்?

ஒருவர் நம்மைப் பார்த்து, 'என்னப்பா... முன்னைக்கிப்ப ரொம்ப இளைச்சுட்டியே?' என்றோ, 'என்ன... உடம்பு இப்படிப் பருத்துருச்சு' என்றோ சொல்வார்கள். நண்பனைச் சொல்வதற்கு பல வார்த்தைகள் இருப்பது போல், உடலைச் சொல்வதற்கும் பல வார்த்தைகள் இருக்கின்றன. இளைத்துப்போன உடலைச் சரீரம் என்றும், பருத்திருக்கும் உடம்பை தேகம் என்றும் சொல்கிறது சம்ஸ்கிருதம். அதேபோல், நட்பு குறித்த வார்த்தைகளிலும் வித்தியாசங்கள் இருப்பதாகத் தெரிவிக்கிறது சம்ஸ்கிருதம்.

இவற்றில் 'மித்ரன்' எனும் வார்த்தை, அதே வயதுக்காரரை, ஒத்த மனநிலை கொண்டவரை, அதே குணங்களுடன் திகழ்பவரைக் குறிக்கிறது. அதே போல், இதமான தோழனை 'ஸ்நேகிதன்' என்று சொல்லி வைத்திருக்கிறார்கள். எவர் ஒருவரைப் பார்க்கிறபோதும், பழகுகிறபோதும், பேசும்போதும், தொடும்போதும், நினைக்கிறபோதும் உள்ளுக்குள்ளே அன்பு பொங்கிப் பிரவாகிக்கிறதோ அவரே ஸ்நேகத்துக்கு உரியவர் என்பார்கள் முன்னோர்.

பிரேமை என்பது ஆசை; அன்பு. ஆசை என்பது விருப்பம். அப்படியெனில், நண்பன் எனப்படுபவர்கள் மீது பிரேமை இல்லையா? அவர்கள் மீதும் ஆசையுடன்தானே பழகுகிறோம், பேசுகிறோம் என்று கேட்கலாம்.



ஒருவருக்குச் சர்க்கரை வியாதி. அவர் ஒரு நண்பரின் வீட்டுக்குச் செல்கிறார். அங்கே அவருக்குப் பிடித்த இனிப்புப் பலகாரம் கண்ணெதிரே தட்டில் வைக்கப்பட்டிருக்கிறது. ஆனால் அந்த நண்பரோ, 'உனக்கு இந்த இனிப்பு ரொம்பப் பிடிக்கும்னு தெரியும். ஆனா என்ன பண்றது, உனக்கு இதனால உடம்புக்கு முடியாமப் போயிட்டா என்னடா பண்றது?' என்கிறார். இது நண்பனின் குணம்! நற்குணம்தான்!

ஆனால்... ஸ்நேகிதன் என்பவன், ஸ்நேகத்தை இதமாகக் கொள்பவன் அல்லவா? அதாவது, மிகுந்த பிரேமை கொண்டவனாயிற்றே! ஆகவே, அந்த ஸ்நேகிதன் 'உனக்கு சர்க்கரை வியாதின்னு தெரியும்டா! இனிப்பு சாப்பிட்டா உடம்பு படுத்தியெடுக்கும் வாய்ப்பு இருக்கு. ஆனா, இந்த இனிப்பு உனக்குப் பிடிக்கும். அதனால துளியூண்டுதான் தருவேன். இந்தா சாப்பிடு. ராத்திரி மறக்காம மருந்தைச் சாப்பிடணும், சொல்லிட்டேன்!' என்று சொல்லி, அந்த இனிப்பை மிகக் கொஞ்சமாக எடுத்து அவருக்கு வழங்கி, அவரின் ஆசையை, விருப்பத்தை, பிரேமையை நிறைவேற்றுவான்.அதாவது, நண்பர்களில்கூட இதகாரி, ப்ரேமகாரி என்றெல்லாம் உண்டு. பெற்றோரையே எடுத்துக் கொள்ளுங்கள். நம் அம்மா இதமாகவும், கொஞ்சம் கண்டிப்பாகவும் நம்மை வழிநடத்துவார். ஆனால், அப்பாவோ கறாரும் கண்டிப்பாக வழிநடத்துவார். இங்கேயே இதகாரி, ப்ரேமகாரிக்குமான வித்தியாசம் தெரிகிறது அல்லவா?

பகவான் ஸ்ரீகிருஷ்ணர் நமக்கெல்லாம் நாயகன்தான். பரம்பொருள்தான். நாயகனாக இருப்பவரிடம் நட்பை எதிர்பார்க்க முடியாது. ஆனால் நண்பனாக இருப்பவர்... நாயகனாகவும் இருக்கலாம் அல்லவா? கிருஷ்ண பரமாத்மா தன்னை நண்பன் என்று, அதாவது தோழன் என்று சொல்லிக் கொள்ளாமலேயே நட்புடன் பலரிடமும் பழகியிருக்கிறார்.

'அர்ஜுனா, ப்ரீதியுடன் உனக்கு நல்லது செய்யக் காத்திருக்கிறேன்' என்று அருள்கிறார் கண்ணன். ப்ரீதி என்பதில் உள்ள பிரியத்தையும் இதத்தையும் கவனித்தீர்களா? பாண்டவர்கள் அனைவருக்கும் தோழனாக இருந்தாலும், அர்ஜுனனிடம் ஸ்நேகிதத்துடனும் மிகுந்த உரிமையுடனும் இருந்து வழிகாட்டுகிறார்.

பாண்டவ சகோதரர்களிடம் மட்டுமா? கோபியரிடமும் குசேலனிடமும்கூடத் தோழமையுடன்தானே பழகிக் களித்தார்.

இன்றைக்கும் கோகுலாஷ்டமி நாளில், வீட்டில் கிருஷ்ணர் பாதம் வரைந்து, சீடையும் முறுக்குமாக பட்சணங்கள் செய்து கிருஷ்ணரை வணங்குகிறோமே... இது ஒருவகையில் கிருஷ்ண பக்தி என்றாலும், பகவான் கிருஷ்ணரின்மீது நாம் கொண்ட ஸ்நேகிதத்தின், ப்ரேமையின் வெளிப்பாடுதானே அது!

நாயகனாகத் திகழும் கண்ண பரமாத்மா, நண்பனாகவும் இருந்து அருள்கிறார். உண்மையான கிருஷ்ண பக்தியில் நாம் திளைத்தால், நமக்கும் நண்பராவார் ஸ்ரீகிருஷ்ணர்!




வாரத்தில் ஞாயிற்றுக்கிழமை எனும் விடுமுறை நாள் என்பது எத்தனை பெரிய சுகம்! சனிக்கிழமை இரவு தூங்கப் போகும்போதே, 'அப்பாடா... நாளைக்கு அரக்கப்பரக்க எழுந்து ஓடவேணாம்' என்று நிம்மதியுடன் தூங்கச் செல்வதில் இருந்தே துவங்கி விடுகிறது நிம்மதியும் சந்தோஷமும்.

ஞாயிறு காலையில் இத்தனை மணிக்கு எழுந்திருக்கவேண்டும் என்கிற எந்தக் கட்டுப்பாடும் இல்லாமல் மெள்ளக் கண் விழிப்பவர்கள், மிகுந்த உற்சாகத்துடனும் மகிழ்ச்சியுடனும் சொல்வார்கள்... 'அடடா! நேத்திக்கு சுகமா தூங்கினேன். அடிச்சுப் போட்டாப்ல, நிம்மதியான உறக்கம். ஆனந்தமா இருந்துச்சு தூக்கம்!'

அது எப்படி? விழித்துக்கொண்டிருக்கும்போதுதானே நமக்கு என்ன நேர்கிறது என்பதை நம்மால் உணர முடியும்? கை, காலை அசைக்காமல், கண்கள் சொருக, உலகமே இடிந்து விழுந்தாலும் காதில் விழாத அளவுக்குத் தூங்குகிறபோது, அப்படியான தூக்கத்தை நிம்மதியான தூக்கம் என்று எப்படி நம்மால் சொல்ல முடிகிறது? அப்படி உணருவது யார்? அந்த சுகமான தூக்கம் என்பது யாரைச் சென்று சேர்ந்து, நிம்மதியைத் தருகிறது?

கொஞ்சம் யோசித்துப் பார்த்தால், அது ஆத்மாவின் சந்தோஷம் என்பதை உணரமுடியும். சரீர சந்தோஷம், ஆத்ம சந்தோஷம் என இரண்டு வகை உண்டு. நமக்குப் பிடித்த ஆடைகளை அணிவதும், பிடித்த உணவை உண்பதும், விரும்பிய வாகனத்தில் பயணிப்பதும், சொகுசு மெத்தையில் படுப்பதும் சரீர சந்தோஷங்கள். ஆனால், ஆத்ம சாட்ஷாத்காரத்தை உணர்ந்து தெளிந்து புரிந்து நடப்பதுதான் ஒவ்வொரு மனிதனின் கடமை என்கிறார் பகவான்.

அதனால்தான் அர்ஜுனனுக்கு உரைத்த கீதையில், சரீர அனுபவம் பற்றி எதையும் குறிப்பிடவில்லை ஸ்ரீகிருஷ்ணர். கண்ணில் படுகிற, தொட்டு உணரக்கூடிய சரீரம் பற்றி நாமே அறிந்துகொள்வோம் என்று பகவானுக்குத் தெரியாமலா இருக்கும்! ஆகவே, நாமே தெரிந்துகொள்ளக்கூடிய எளிய விஷயத்தைப் புறந்தள்ளிவிட்டு, முக்கியமான விஷயங்களைப் பாடமாக்கி, எளிமையாகத் தந்தார் கிருஷ்ண பரமாத்மா. அவர் சொல்லச் சொல்ல, அர்ஜுனன் மலைத்துப் போனான். வாழ்வின் அத்தனை சூட்சுமங்களையும் வாழ்வியல் நெறிமுறைகளையும் ஒருங்கே பயின்றான்; படித்ததைச் செயலாக்கினான்; வெற்றியும் பெற்றான்.

'குளித்துவிட்டுச் சாப்பிடு' என்கிறது வேதம். தினமும் நீராடு என்று சொல்லியிருக்கலாம். ஒவ்வொரு வேளையும் சாப்பிடு என்று அறிவுறுத்தியிருக்கலாம். ஆனால், அப்படிச் சொல்லாமல், குளித்துவிட்டுச் சாப்பிடு என்று சொல்லியிருக்கிறது வேதம். ஏன்?

உடல் வியர்த்து, உடலில் சோர்வும் அயர்ச்சியும் வந்துவிட்டால், யாரும் சொல்லாமல் நாமே குளிக்கத்தான் போகிறோம். அதேபோல, பசி நேரம் வந்துவிட்டால், வழக்கம்போல் வேளாவேளைக்குச் சாப்பிடத்தான் போகிறோம். ஆகவே, வேதம் குளி என்றும் சொல்லவில்லை; சாப்பிடு என்றும் போதிக்கவில்லை. 'குளித்துவிட்டுச் சாப்பிடு' என்று வேறொரு இடத்துக்கு நம்மை இட்டுச் செல்கிறது. அப்படிச் செய்வதில்தான் தேக ஆரோக்கியமும் ஆத்ம சுத்தியும் இருக்கிறது என்பதைச் சூசகமாக உணர்த்துகிறது வேதம். அதை எளிமையாக எல்லோருக்கும் உணர்த்தியவர் பரமாத்மா.

சாப்பிடுவது மட்டுமல்ல; வீட்டில் பெண்கள் குளித்த பிறகுதான் அடுப்பைப் பற்றை வைக்கவேண்டும்; அரிசி போன்ற தானியங்களைத் தொடவேண்டும். குளித்துவிட்டுச் சுத்தபத்தமாகச் சமையலறைக்குச் சென்று உணவு தயாரிப்பதே உத்தமம். இன்றைய காலகட்டத்தில், குழந்தை ஏழரை மணிக்கும் கணவர் எட்டு மணிக்கும், மனைவி எட்டரை மணிக்குமாக பள்ளிக்கும் வேலைக்கும் ஓடவேண்டியிருக்கிறது. ஆனாலும் வேதம் அறிவுறுத்துவதை, சான்றோர்கள் உபதேசித்ததை ஒருபோதும் மீறக்கூடாது.

வேதத்தின் நாயகனும் அகில உலகத்தின் தலைவனாகவும் திகழ்கிற பரம்பொருள், நண்பனாகவும் தூதனாகவும் இருந்து எப்படியெல்லாம் உலகுக்கு அருள்பாலித்தார் என்று பார்த்தோம். இப்போது வேதத்தின் மூலமாகவும் கீதையின் வாயிலாகவும் உபதேசித்து, நமக்கெல்லாம் ஆச்சார்ய புருஷனாகவும் திகழ்கிறார் ஸ்ரீகிருஷ்ணர்.

ஏழைக் குசேலனுக்கு நண்பனாக இருந்து, அவனுடன் சேர்ந்து அவல் உண்டார். அவனுடைய குடிசையை மாளிகையாக மாற்றி, நாயகனாகவும் அருள்பாலித்தார். அர்ஜுனனுக்குச் சொல்கிற சாக்கில், கீதையை உலகுக்கு எடுத்துரைத்து தன்னை ஆச்சார்யனாக வெளிப்படுத்தி, பாடங்கள் தந்து வழிநடத்தினார். பகவான் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவைப் பற்றிக்கொண்டுவிட்டால் போதும்... இந்த ஜன்மத்தை இனிதே நிறைவேற்றித் தந்து அருள்பாலிப்பார் பரமாத்மா.



"கண்ணா... எனக்கு ஒரு ஆசை! ஜகத்துக்கே நாதன் என்கிறாய்; உலகமே உன் சொத்து என்று சொல்கிறாய். புல்லாங்குழலும் சிரசில் மயில்தோகையும் கொண்டு உன் அழகுத் திருமுகத்தைக் காட்டுகிறாய். ஆனால், ஜகத்துக்கே நாதனாகத் திகழும் உன் திருக்கோலத்தைக் காண வேண்டும். அதுவே என் ஆசை. எனக்கு அருள்வாயா?" என்று அர்ஜுனன் கேட்டான்.

"அவ்வளவுதானே..." என்று சிரித்த முகத்துடன் சொல்லிவிட்டு, பூமிக்கும் வானுக்குமாக விஸ்வரூபம் எடுத்து நின்றார் பகவான் ஸ்ரீகிருஷ்ணர். அசுரர்களும் தேவர்களும், முனிவர்களும் ஞானிகளும், பெண்களும் குழந்தைகளும், மனிதர்களும் மரங்களும் என உலகில் உள்ள அனைத்துமே அவன் வாய்க்குள் வந்து விழுந்தன. பிறகு, அந்த உயிர்கள் அவனில் இருந்து வெளிவந்து உலகில் விழுந்தன. இதைப் பார்த்து பிரமித்து நின்றான் அர்ஜுனன். "என் ஆச்சார்யரே... என்னை ஆளும் பரம்பொருளே! உம்மை வணங்குகிறேன்" என்று சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்தான்.



"எனக்கு நண்பனாக இருந்து தோள் கொடுத்தாய். நாயகனாக இருந்து வெற்றிக்கு வியூகம் அமைத்தாய். தூதனாகச் சென்று அத்தனை காரியங்களிலும் ஈடுபட்டாய். ஆச்சார்யனாக இருந்து கீதோபதேசத்தை வழங்கி, புத்தி தெளிய வைத்தாய். ஆத்மாவைப் புரிய வைத்தவனும் நீயே! பரமாத்மாவான உன்னைச் சரணடைதலே மோட்சத்துக்கு எளிய வழி என்று எடுத்துரைத்தவனும் நீயே! உன்னை வணங்கித் தொழுகிறேன், கண்ணா... என்னை ஆட்கொண்டு அருள்பாலிப்பாயாக!" என்று கண்ணீர் மல்கக் கை கூப்பி, நமஸ்கரித்தான் அர்ஜுனன்.

கண்ணபிரான், எல்லாமானவன்! எல்லாவற்றிலும் எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்திருப்பவன். அவனை ஒருகணம் நினைத்தால் போதும்... ஏதேனும் ஒரு ரூபத்தில், ஓடோடி வந்து நம்மைக் காப்பான் என்பது சத்தியவாக்கு.




**கீதையில் இல்லாத விஷயங்களே இல்லை. வாழ்க்கையில் நாம் சந்திக்கிற அத்தனைப் பிரச்னைகளுக்கும் சிக்கல்களுக்கும், வேதனைகளுக்கும் விபரீதங்களுக்கும் கீதையில் பொருளுரைத்திருக்கிறார், கண்ணபரமாத்மா. எவர் ஒருவர் பகவத் கீதையைப் படித்து, உணர்ந்து, தெளிகிறாரோ... அவருக்குப் புத்தியில் தெளிவும், சிந்தனையில் தீட்சண்யமும் ஏற்படும் என்பது உறுதி.**

**'பகவான் கிருஷ்ணர் அர்ஜுனனுக்குத்தானே சொன்னார்? நமக்காகவா சொன்னார்? அவனுக்குச் சொன்னது நமக்கு எப்படிப் பொருந்தும்?' என்று சிலர் கேட்கலாம். அர்ஜுனன் என்பது பகவானுக்கு ஒரு சாக்கு. அவ்வளவே! முழுக்க முழுக்க உலக மக்களுக்காக உபதேசிக்கப்பட்டதுதான் கீதை.**

அப்பேர்ப்பட்ட உன்னதமான கீதையில் இருந்து இளைஞர்கள் எடுத்துக் கொள்ளவேண்டிய விஷயங்கள் நிறையவே இருக்கின்றன. அவற்றை இன்றைய இளைஞர்கள் ஏற்றுச் செயல்பட்டால், அடுத்தடுத்த தலைமுறையில் நல்லதொரு மாற்றங்களும் ஏற்றங்களும் நிச்சயம் நிகழும்.



கல்லூரியில் படிக்கும்போது, கேம்பஸ் இன்டர்வியூ என்று வைக்கிறார்கள். அதில் தேர்வானதும் குதூகலமாகிவிடுகிறார்கள் இளைஞர்கள். பின்னே... படித்து முடிப்பதற்கு முன்பே, படித்த படிப்புக்கு ஏற்ற வேலை... அதுவும் கை நிறையச் சம்பளத்துடன் என்றால், குதூகலத்துக்குக் கேட்கவா வேண்டும்?

ஆனால் என்ன... படித்துக்கொண்டிருக்கும்போதே இரண்டு வருடம் கழித்து வேலை நிச்சயம் என்றாகிவிட, வாழ்வில் ஜெயித்துவிட்டதாக எண்ணிக் கொள்கிறார்கள். இனி வேறு எதுவும் இல்லை என்கிற தேக்க நிலைக்கு வந்துவிடுகிறார்கள்.

ஆச்சார்யர் என்கிற குருவிடம் கால்வாசியும், நம்மைச் சுற்றியுள்ளவர்களிடம் இருந்து கால்வாசியும், காலப்போக்கில் நடக்கிற சூழல்களால் கால்வாசியும், இறைவனால் கால்வாசியும் போதனைகள் கிடைக்கப் பெறுகின்றன. அப்படியிருக்கும்போது, ஆச்சார்யர் எனும் ஆசிரியரிடம் கற்றுக்கொள்வதற்கே ஒரு வருடம் அல்லது இரண்டு வருடம் இருக்கும்போது, போதும் என்கிற நினைப்பு வரலாமா இளைஞர்களுக்கு?

'கற்றுக்கொள்வதற்கு வயதோ, நேரம் காலமோ தேவையில்லை. ஆர்வம் மட்டும் இருந்தால் போதும்; எப்போதும் எவரிடம் வேண்டுமானாலும் கற்றுக் கொள்ளலாம்' என்று வலியுறுத்துகிறது கீதை.



அதேபோல், அர்ஜுனனிடம்... 'நான் சொன்ன விஷயங்களை மட்டும் கேட்டுக் கொண்டிருந்தால் போதாது, அர்ஜுனா! நல்ல விஷயங்களை எவரிடம் இருந்தும் பெறலாம். நிறைய விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்; தெளிவு பெறுவாய். கேட்பதும், கேட்டதைக் கொண்டு செயல்படுவதும் மட்டுமே உன்னுடைய வேலை!' என்கிறார் ஸ்ரீகிருஷ்ணர். உடனே அர்ஜுனன், 'அப்படியென்றால் பலன்?' என்று கேட்க... 'அதை என்னிடம் கொடுத்துவிடு' என்கிறார் பகவான். அதைக் கேட்டுக் குழம்பிப் போனான் அர்ஜுனன். 'செயலைச் செய்த எனக்குத்தானே பலன் கிடைக்கவேண்டும்?' என்று மெள்ளக் கேட்டான்.

பகவான் சிரித்துக்கொண்டே, 'உன் செயலால் விளைகிற வெற்றியாகட்டும், தோல்வியாகட்டும்; நல்லதாகட்டும் கெட்டதாகட்டும்... அந்தச் செயலால் விளையும் பலன் எதுவானாலும் அதை ஏற்றுக் கொள்கிறேன்' என்கிறார்.

இதை இளைஞர்களும் மாணவர்களும் எப்படி எடுத்துக் கொள்ளவேண்டும்?

படிப்பது மட்டுமே அவர்களின் வேலை. புத்தியும் மனமும் சக்தி வாய்ந்தவை. அதற்குள் பாடப் புத்தகங்களைப் படித்துப் படித்து உருவேற்றிக் கொண்டு பதித்துக் கொள்ளவேண்டும். ஆழ்ந்த ஈடுபாட்டுடன் படிக்கவேண்டும். 'இதைப் படிச்சுட்டோம்னா, அதிக மார்க் எடுத்துடலாம். அதிக மார்க் எடுத்தா, நாம விரும்பின காலேஜ்ல, நாம நினைச்ச படிப்பிலேயே சேரமுடியும். அந்தப் படிப்புக்குக் கை நிறையச் சம்பளம் கிடைக்கும். அப்படிச் சம்பளம் கிடைச்சா, தினமும் ஹோட்டல்ல ரவா தோசை சாப்பிடுவேன்...' இப்படியான கனவில் இருந்தும், கற்பனையில் இருந்தும் விலகிவிடுவதே உத்தமம்.

கதை ஒன்று உண்டு. ஓர் ஆசாமிக்கு எதிரே கொஞ்சம் மாவு தயாராக இருந்தது. உடனே அவர் யோசிக்கத் துவங்கினார். 'இந்த மாவைக் கொண்டு நான்கு சப்பாத்திகள் தயார் செய்யமுடியும். அந்தச் சப்பாத்திகளை நான்கு ரூபாய் என்று பதினாறு ரூபாய்க்கு விற்றால், இப்போது இருக்கும் மாவைவிட இரண்டு மடங்கு மாவு வாங்கலாம். அதற்கு எட்டு சப்பாத்திகள் செய்யலாம். அதில் வரும் தொகை, அதனால் கிடைக்கும் மாவு, அவற்றில் இருந்து வரும் தொகை என்று கணக்கிட்டுப் பார்த்தால், மாதம் ரூ.80,000 சம்பாதிக்க முடியும் என்னால். அப்போது வேலைக்கு நான்கு பேரை வைத்துக் கொள்வேன். அவர்களில் எந்த வேலைக்காரனாவது வேலை செய்யாமல் சோம்பேறியாக உட்கார்ந்திருந்தால், அவனை இந்தக் கோலாலேயே விளாசித் தள்ளிவிடுவேன்...' என்று நினைத்தபடியே, தன் கையில் வைத்திருந்த கோலை வேகமாக இந்தப்

பக்கமும் அந்தப் பக்கமும் சுழற்றினான். அந்தச் சோம்பேறி வேலைக்காரனின் கால்களில் அடிப்பதாக நினைத்து, கோலால் ஒரு வீசு வீச, அவன் எதிரே மாவு வைக்கப்பட்டிருந்த மண் சட்டி மீது பட்டு, அது உடைந்து, மாவெல்லாம் மண்ணில் சிதறியது.

ஒரு செயலைச் செய்யும்போது, அந்தச் செயலை எப்படிச் செய்யலாம் என்று திட்டமிட்டுச் செய்யவேண்டும். சரியாகத் திட்டமிட்டு, நேர்த்தியாகச் செயல்படுகிற சாதுர்யத்தை இளைஞர்கள் கைக்கொள்ளவேண்டும். அந்த ஆசாமியின் மாவுக்கனவு போல் நம் வாழ்க்கை ஒருபோதும் ஆகிவிடக்கூடாது என்பதில் உறுதியாக இருக்கவேண்டும்.

படிப்பதில் ஆழ்ந்து ஈடுபட்டால் போதும். தெளிவுடன் உள்வாங்கிக் கொள்வதே சிறந்தது. அப்படிச் செயல்பட்டால், 95 மார்க் கிடைக்காமல் போய்விடுமா என்ன? படிக்கும்போது படிப்பை மட்டுமே நினைக்க வேண்டும். படிக்கிற வேளையில், இந்தக் கேள்விக்கு பதில் சொன்னால் எவ்வளவு மதிப்பெண் கிடைக்கும் என நினைக்கவே நினைக்காதீர்கள், இளைஞர்களே!

முறம், சல்லடை இந்த இரண்டும் ஒரே விஷயத்தைத்தான் செய்கின்றன. ஆனால், அப்படிச் செய்வதில் இரண்டுக்கும் ஒரு வித்தியாசம் இருக்கிறது. ஒரு பொருளைச் சல்லடையால் சலித்துப் பாருங்கள்; அதையே முறத்தால் புடைத்துப் பாருங்கள். தேவையானது எதுவோ அது கீழே போய், கசடுகள் அனைத்தும் சல்லடைக்குள் தங்கிவிடும். ஆனால், முறத்தில் ஒரு பொருளைப் போட்டுப் புடைத்தோமானால், தேவையற்ற பொருட்கள் எல்லாம் முறத்தில் இருந்து சட்சட்டென்று வெளியே தெறித்து விழுந்துவிடும். தேவையானவை எதுவோ அது அப்படியே முறத்தில் தங்கிவிடும். நல்ல விஷயங்களை உள்வாங்கிக் கொள்வதில் நாம் முறம் போல் இருக்கிறோமா, அல்லது சல்லடையாக இருந்து விட்டுவிடுகிறோமா என்பது நம் கையில்தான் இருக்கிறது.

ஒரு செயலைச் செய்து முடிப்பதில் தீவிர முயற்சியும் சரியான திட்டமிடலும், செயல்பாட்டில் நேர்த்தியும் வந்துவிட்டால், நமது காரியம் யாவிலும் துணையிருந்து வெற்றியையே தேடித் தருவான் பகவான். சந்தேகமே இல்லை.

'செயலைச் செய்தது நான்தானே? அப்படியெனில் பலனை உனக்கு ஏன் தரவேண்டும்' என்று அர்ஜுனன் கேட்டதற்கு பகவான் சொல்கிறார்... 'நல்ல பலன் என்றால் எனக்குத் தந்துவிடு என்றா சொல்கிறேன். கெட்டதோ நல்லதோ... பலன் எதுவாக இருந்தாலும், அதை என்னிடம் கொடுத்துவிடு என்கிறேன். இதில் என்ன தவறு அர்ஜுனா?

தவிர, இன்னொரு விஷயம். நீ சரீரன். உன்னால் மட்டுமே விளைந்தது இல்லை இது! ஐந்து பேர் ஒன்றுகூடவேண்டும். அதாவது ஆத்மா, தேகம், பஞ்சபூதங்கள், பரம்பொருள், இந்திரியங்கள் ஆகிய ஐந்தும் இணைந்தால்தான் செயலைத் திட்டமிடவோ, முனைப்புடன் செயல்படவோ முடியும். ஆகவே, செயலைச் செய்வது மட்டுமே உன் வேலை. அதில் எப்போதும் கவனம் செலுத்துவாயாக! பலனைப் பற்றி அலட்டிக் கொள்ளாதே!' என்கிறார் பரந்தாமன்.

அதாவது, 'கடமையைச் செய்; பலனை எதிர்பாராதே' என்கிறார் ஸ்ரீகிருஷ்ணர்.

எனவே, பலனை எதிர்பாராமல் கண்ணும் கருத்துமாக நமது கடமைகளைச் செய்துகொண்டே போவோம். அவற்றுக்கான பலன் நிச்சயம் நம்மை வந்து அடைந்தே தீரும்!

எல்லாப் புகழும் கிருஷ்ணனுக்கே!

**முற்றும்.**